தகழி சிவசங்கரப் பிள்ளை

# தோட்டியின் மகன்

மலையாளத்திலிருந்து தமிழில்

சுந்தர ராமசாமி



காலச்சுவடு பதிப்பகம்

தோட்டியின் மகன்

தகழி சிவசங்கரப் பிள்ளை (1912 - 1999)

ஆலப்புழையில் வழக்குரைஞராகப் பணியாற்றினார். முதல் சிறுகதைத் தொகுப்பு 1929இலும் முதல் நாவல் 1934இலும் வெளியாயின. சுமார் நாற்பது நாவல்களும் இருநூறு கதைகளும் எழுதியுள்ளார். அநேகப் படைப்புகள் இந்திய மொழிகளிலும் ஐரோப்பிய மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சாகித்ய அகாதமி பரிசும் ('செம்மீன்,' 1958) கேரள சாகித்ய அகாதமி பரிசும் ('ஏணிப்படிகள்,' 1965), வயலார் நினைவுப் பரிசும் ('கயிறு,' 1980) பெற்றவர். 1984இல் ஞானபீடப் பரிசு பெற்றார். 1985இல் பத்மபூஷன் விருது கிடைத்தது. கேரளப் பல்கலைக்கழகமும் மகாத்மா காந்தி பல்கலைக்கழகமும் டி.லிட். பட்டம் அளித்துள்ளன. மனைவி : கமலாட்சி அம்மா. ஐந்து குழந்தைகள்.

தமிழின் முக்கியப் படைப்பாளிகளில் ஒருவராகிய சுந்தர ராமசாமி, மலையாளத்திலிருந்தும் ஆங்கிலத்திலிருந்தும் குறிப்பிடத்தகுந்த பல மொழிபெயர்ப்புகளைச் செய்திருக்கிறார். தகழியின் 'செம்மீன்' (1962) நாவலையும் மொழிபெயர்த்திருக்கிறார்.

நன்றியுரை

தோட்டியின் மகன் நாவலின் மொழிபெயர்ப்பை முதலில் படித்துப் பார்த்து என்னை ஊக்குவித்தவர் நண்பர் தொ. மு. சி. ரகுநாதன்.

தொடர்கதையாக 'சரஸ்வதி'யில் வெளியிட்டவர் நண்பர் வ. விஜயபாஸ்கரன்.

நீண்ட இடைவெளிக்குப் பிறகு நூலாக்கம் செய்ய முயன்றபோது சரஸ்வதியின் பழைய இதழ்களைக் கண்டெடுப்பது சிரமமாக இருந்தது. 'சரஸ்வதி'தொகுப்பைத் தந்துதவியவர் நண்பர் கர்ணன். நண்பர் அய்யனார் தந்த தகவலின் அடிப்படையிலேயே கர்ணனை அணுகித் தொகுப்பைப் பெற முடிந்தது.

இப்பதிப்புக்குத் திருமதி தகழியின் அனுமதியைப் பெற உதவிய நண்பர்கள் மலையாள எழுத்தாளர்களான டாக்டர் கே. அய்யப்பப் பணிக்கரும் ஷாஜியும்.

பிரதியைக் கணினியிலேற்றி வடிவமைத்தவர் செல்வி ஆர். ஜோதி.

நாவலை மீண்டும் படித்துப்பார்த்துத் திருத்தங்களை மேற்கொள்ள உதவிய நண்பர்கள் கி. நாராயணன் மற்றும் எம். எஸ்.

இவர்கள் எல்லோருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சுந்தர ராமசாமி

'தோட்டியின் மகன்' தமிழுக்கு வந்த கதை

தகழி சிவசங்கரப் பிள்ளையின் 'தோட்டியின் மக'னை நான் மொழிபெயர்த்தபோது நிலவிய சூழலும் மனநிலையும் இளமைக்கால நினைவுகளும் இன்றும் என் மனதில் பசுமையாக அப்படியே இருக்கின்றன. அன்றைய அனுபவங்களை வாசகர்களுடன் சிறிய அளவிலேனும் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் ஓர் இழை போல் இந்த நீண்ட காலப் பகுதியில் தொடர்ந்துவந்திருக்கிறது.

1946இல் எழுதப்பட்ட 'தோட்டியின் மக'னை 1951, 52ஆம் வருடங்களில்தான் மொழிபெயர்த்தேன். அப்போது எனக்கு வயது இருபது, இருபத்தியொன்று. அதற்குமுன் தமிழில் சொல்லும்படி நான் எதுவும் எழுதியிருக்கவில்லை. நிச்சயமாக என்னுடைய படைப்பென்று எதுவும் அச்சேறியிருக்கவில்லை. என் உடல், மனம் சார்ந்த அன்றைய வேதனைகளைக் கோபத்துடனும் வருத்தத்துடனும் புலம்பல் கடிதங்களாகக் கடவுளுக்கு எழுதிக்கொண்டிருந்தேன். அவை கிறுக்கல்களாகக் கைவசம் இருந்தன. வெளியே காட்ட யோக்கியதை அற்றவை அவை. தமிழில் என்னை வெளிப்படுத்திக்கொள்வது பெரும் திணறலாக இருந்த காலம் அது. அப்போது நான் தமிழை எழுதவும் படிக்கவும் கற்றுக்கொண்டு இரண்டு மூன்று வருடங்களுக்கு மேல் ஆகியிருக்கவில்லை.

'தோட்டியின் மக'னை மொழிபெயர்க்கும் நேரத்தில் என்னை ஒரு கலாச்சார ஏழை என்றுதான் சொல்ல வேண்டும். 'கலை உலகின் கடைசி ஏழை' என்ற விவரிப்பும் அப்போது மனதில் இருந்தது. தகழியை மொழிபெயர்க்க வேண்டும் என்ற ஆசை மூண்டபோது மொழிபெயர்க்கத் தகுதியிருக்கிறதா என்று யோசிக்கக்கூடத் தெரியாமல் இருந்தேன். அந்த மொழிபெயர்ப்பு நடந்து முடியவும் அந்த யோசனையற்ற நிலைதான் காரணம். யோசித்திருந்தால் அன்றே புகழ் பெற்றிருந்த தகழியின் படைப்புலகில் குறுக்கிடாமல் விலகிப்போயிருப்பேன்.

அப்போது நான் பெற்றிருந்த 'ஞானங்களை' இப்போது நினைத்துப் பார்க்க முயல்கிறேன். படித்திருந்தவை அதிகமும் அரசியல், சமூகச் சீர்திருத்தம், கலாச்சார விமர்சனம் சார்ந்த துண்டுப் பிரசுரங்கள்தான். ஆர்வத்துடன் படித்த படைப்புகளில் இன்றும் நினைவில் இருப்பவை க. நா. சு.வின் ஒருநாள், தொ. மு. சி. ரகுநாதனின் 'புயல்', 'முதலிரவு', 'கன்னிகா', 'இலக்கிய விமர்சனம்' முதலியவை. கவிமணியின் கவிதைகளும் முக்கியமாக மருமக்கள்வழி மான்மியமும். (பிராமணர்

அல்லாதாரின் கொச்சையில் அன்று மிகுந்த ஈர்ப்பு இருந்தது.) இவை எல்லாவற்றையும்விட முக்கியமாகப் பெற்றிருந்த 'ஞானம்' புதுமைப்பித்தன் சிறுகதைகள். 'புதுமைப்பித் தன் கதை'களும் காஞ்சனை தொகுப்பும். (அவரது 'ஆறு கதைகள்' என்ற தொகுப்பைக்கூடப் பின்னால்தான் படித்தேன் என்று நினைவு.) மனதை ஈர்த்த கதைகளை மீண்டும் மீண்டும் படித்ததில் பல பகுதிகள் மனப்பாடமாகியிருந்தன. 'காஞ்சனை'தொகுதியின் முன்னுரை முழுமையாகவே மனப்பாடமாகியிருந்தது. மனப்பாடப் பகுதிகளை வீட்டில் பிறர் முன் சந்தர்ப்பம் சார்ந்தும் சாராமலும் அரற்றுவது அப்போது பழக்கத்திலிருந்தது. அந்த அரற்றல், தொய்யும் மனதுக்கு நாணேற்ற நான் கண்டுபிடித்திருந்த வழி. அதற்குப் பலன் இருந்தது.

அரற்றுவதற்குப் புதுமைப்பித்தனைவிடவும் அதிக ஆவேசமளித்த இரண்டு படைப்புகளும் அதே காலத்தில் கிடைத்தன. ஒன்று இயேசுவின் மலைப் பிரசங்கம். மற்றொன்று வ. வே. சு. ஐயர் மொழிபெயர்த்த எமர்சனின் 'தன்னம்பிக்கை' என்ற நீண்ட கட்டுரை. இவற்றைத்தான் அன்றைய ஞானத்தின் ஆத்மீகத் தேட்டங்கள் என்று சொல்ல வேண்டும். கவிதை மீதான ஆசையை இந்த அரற்றல் வளர்த்ததோடு மொழியின் காந்த சக்திக்கு ஆட்படும் உணர்வுகளையும் கூர்மைப்படுத்தியது.

அந்தக் காலத்தில் சஞ்சிகை என்று நான் படித்தவை வை. கோவிந்தனின் 'சக்தி' மட்டும்தான். அதிலும் 'சக்தி'யின் கடைசிக் காலத்தில் தொ. மு. சி. ரகுநாதனும் கு. அழகிரிசாமியும் இணைந்து பதிப்பித்த தொகுப்புகள் அவை. 'சக்தி' இதழ் ஒன்றில் வெளிவந்த மாப்பசானின் நாவல் பற்றிய ஒரு நீண்ட கட்டுரையின் மொழிபெயர்ப்பை (ரகுநாதன் செய்தது) பத்துப் பதினைந்து முறையாவது படித்திருப்பேன். யாருக்கும் தெரியாத படைப்பின் ரகசியங்களை என்னிடம் மட்டும் மாப்பசான் ரகசியமாகக் கூறுவதாகக் கற்பனை செய்துகொண்டு அந்தக் கட்டுரையைப் படித்தேன். 'சக்தி' இதழ் ஒவ்வொன்றையும் மாற்றிமாற்றிப் பல முறை படிப்பது அப்போது வழக்கத்திலிருந்தது. சிற்றிதழ்களின் முக்கியமான பகுதிகளை -பல சமயங்களில் முக்கியமற்ற பகுதிகளைக்கூட - தர்க்கத்துக்கு அப்பாற்பட்ட ஒரு காரணத்தால் பல முறை படிக்கும் பழக்கம் இன்றளவும் இருப்பது அன்றைய மனநிலையின் தொடர்ச்சி என்றுதான் நினைக்கிறேன்.

மலையாளத்தில் முக்கியமாக அப்போது நான்கு ஆசிரியர்களுடன் வாசக உறவு ஏற்பட்டிருந்தது. தகழி சிவசங்கரப் பிள்ளை, கேசவ தேவ், பொன்குன்னம் வர்க்கி, வைக்கம் முகம்மது பஷீர். பின்னால்

இவர்களுடைய வரிசை என் மதிப்பீட்டில் மாறிவிட்டது என்றாலும் அப்போது எனக்குத் தகழி மீதுதான் மிகுந்த ஈர்ப்பு இருந்தது. தகழியிடம் இருந்தது ஈர்ப்பு என்றால் சி. ஜே. தாமஸிடமும் எம். கோவிந்தனிடமும் உருவானது ஆழ்ந்த ஈடுபாடு. வாழ்க்கையின் போதாமைகளை எண்ணி ரத்தத்தைக் கொதிக்கவைத்துக்கொள்ள ஒரு முகாந்தரம் தேடிக்கொண்டிருந்த எனக்கு அந்தக் காலத்தில் தகழியைப்போல் கொதிப்பின் சுகத்தை வேறு எவருமே அளிக்கவில்லை. 'கௌமுதி' என்ற மலையாள வார இதழையும் அப்போது ஆவேசத்துடன் படித்துவந்தேன். அதன் ஆசிரியர் கே. பால கிருஷ்ணனின் கையில் அப்போது மிக நீளமான சவுக்கு இருந்தது. அவருடைய மொழி அவருடைய விளாசல்களைச் சொடுக்கிய விதம் பிரமிப்பைத் தந்தது. அவர் தீவிர இடதுசாரிச் சிந்தனையாளர். புரட்சி என்ற சொல்லில் உண்மையாகவே புரட்சி கசிந்துகொண்டிருந்த பொற்காலம்.

அன்றைய நாட்களில் என்னைப் பற்றி எனக்கு இருந்த ஒரு சித்திரம் இப்போதும் நினைவில் இருக்கிறது. மாலையில், இருள் கவியும் நேரத்தில், மலையடிவாரத்தில், காய்ந்து வெடித்துக் கிடக்கும் வயல்வெளிகளின் ஓரத்தில், ஓர் ஒற்றையடிப் பாதை வழியாக நான் தன்னந்தனியாக நடந்து போய்க்கொண்டிருப்பேன். வளைந்த முதுகுடனும் குனிந்த தலையுடனும். அந்தச் சித்திரத்தில் வேட்டியின் விளிம்பு பறக்க நான் விடாமல் நடந்துகொண்டிருந் தாலும் என் பக்கத்தில் நின்ற தென்னை மரம் அதே இடத்தில் இருந்துகொண்டிருந்தது ஒரு முரண்பாடாகவே இருந்ததில்லை. துக்கத்தைச் சுமந்து கொண்டு நடப்பது அன்றைய நாட்களுக்குரிய சுயபரிசோதனைக்கு இசைவாகவே இருந்தது. அதை ஒரு கற்பனைச் சித்திரம் என்று சொல்ல முடியாது. அது ஒரு குறியீடு.

நோயினால் உடல் சார்ந்த கஷ்டங்கள். எதையெதையோ சாதிக்க வேண்டும் என்று ஏங்கும் மனம். எதைச் சாதிப்பது என்பது பற்றியோ எவ்வாறு சாதிப்பது என்பது பற்றியோ எந்தத் தெளிவும் இல்லாத மனநிலை. எழுத ஜீவசக்தி கொண்ட மொழி இல்லை. இல்லாத ஒரு மொழியை வைத்து எதையும் ஆக்கவோ அழிக்கவோ முடியாது என்ற யதார்த்தத்தை உணரும்போது மனதில் பொங்கும் விசனம். வாசிக்கப் புத்தகங்கள் இல்லை. இலக்கியம் பேச நண்பர்களும் இல்லை. வாழ்க்கையின் போதாமைகளோ மனதில் கீறல்களை ஏற்படுத்திக் கொண்டிருந்தன. ஆனால் அந்தக் கீறல்களை மொழிக்குள் வைக்கத் தெரியவில்லை. நிறையக் கேள்விகள் முளைத்தவாறு இருந்தன. எல்லா விடைகளும் அறிந்திருந்த ஒருவரை அன்று சந்தித்திருந்தாலும் கூடக் கேள்விகளை என்னால் உருவாக்க முடிந்திருக்குமா என்பது

சந்தேகம்தான். என் கேள்விகளையும் நீங்களே உருவாக்கிப் பதில்களையும் நீங்களே சொல்லிவிடுங்கள் என்றுதான் சொல்ல நேர்ந்திருக்கும். வாழ்க்கையில் உணர்ந்திருந்த குறைகளை அனுபவ வடிவங்களாகச் சிறுகதைகளிலும் கவிதைகளிலும் நாவல்களிலும் படிக்கும்போது ரத்தம் கொதிப்பது போலிருக்கும். எதிரே நிற்கும் சுவரையும் காலால் உதைத்துத் தூளாக்கிவிடலாம் என்று தோன்றும். ஒரு அகராதியைத் தூக்குவதற்கான பலம்கூட என்னுடைய உடலுக்கு இல்லாதிருந்ததைக் கோபப்படும் என் மனம் ஒரு சமயம்கூடக் கணக்கில் எடுத்துக்கொண்டதில்லை.

இந்தப் பின்னணியில்தான் 'தோட்டியின் மக' னைப் படித்தேன். விருப்பமும் வியப்பும் மனதில் அலைமோதின. கொடுமையான ஒரு வாழ்க்கையை எவ்வளவு நேர்த்தியாக மனதில் பதியும்படி சொல்லிவிட்டார் இந்த ஆசிரியர்! வெளியுலகத்துக்கே தெரியாத ஒரு இருண்ட வாழ்க்கையினூடே எப்படி இவரால் இவ்வளவு சகஜமாகப் புகுந்து மன உணர்ச்சிகளை அள்ளிக் கொண்டுவர முடிகிறது? தகழி வெளிப்படுத்தியிருப்பது தோட்டிகளின் வாழ்க்கை சார்ந்த தகவல்களை அல்ல என்பதையும் காலம் அவர்களது அடிமனங்களில் மூட்டும் நெருப்பு என்பதையும் உணர்ந்தபோது மிகுந்த வியப்பு ஏற்பட்டது. இந்த நெருப்பை எப்படி அவரால் மொழியில் மறுஉருவாக்கம் செய்ய முடிந்தது? கொடுமையில் மனம் கொள்ளும் கோபத்தில், ரத்தத்தில் உஷ்ணம் ஏறாமல் என்னால் அப்போதெல்லாம் 'தோட்டியின் மக'னின் எந்தப் பக்கத்தையும் படிக்க முடிந்ததில்லை. எனக்குத் தெரியாத ஒரு உலகத்திற்குள் என்னாலும் இவரைப்போல் புகுந்து புறப்பட முடியுமா என்ற கேள்வியின்முன் மனம் மிகவும் சோர்ந்துபோயிற்று.

'தோட்டியின் மக'னை மொழிபெயர்த்த பின்புகூட அந்தக் காரியம் நடந்து முடிந்திருப்பதை என்னால் நம்பமுடியவில்லை. எப்படி இதைச் செய்து முடித்தேன் என்று எனக்கு நானே கேட்டுக்கொண்டே இருந்தேன். இந்தப் பூரிப்பைப் பகிர்ந்துகொள்ள இசைவான எவரும் அப்போது எனக்கு இருக்கவில்லை. என் அம்மாவைத் தவிர. இருந்த ஒன்றிரண்டு நண்பர்களிடம் நான் செய்திருந்த 'விஷமத்தை'ச் சொல்லக் கூச்சமாகவும் இருந்தது. சொன்னாலும் புதிராகவோ புரிந்துகொள்ள முடியாமலோதான் இருக்கும் என்று தோன்றிற்று. அவர்களை நான் கைவிட்டுவிட்டதாகக் கூட நினைக்கலாம் என்றும் நினைத்தேன். இடதுசாரிச் சிந்தனைகளில் ஆழ்ந்த அக்கறை கொண்ட தோழர்கள் உருவானபோது நான் செய்திருந்த பணியின் மதிப்பு என் மனதில் திடீரென்று உயர்ந்தது.

தோழர்களுக்குக்கூடத் 'தோட்டியின் மகன்' என்ற நாவலின் தலைப்பு வெளிப்படையாகச் சொல்ல இயலாத அந்நிய உணர்வைத்தான் முதலில் தந்தது. அவர்களுடைய இலக்கிய நம்பிக்கைகள் அவர்களுடைய உணர்வுகளை வெளியே காட்டிக் கொள்ள இடம் தருவதாகவும் இருக்கவில்லை. அன்று ஒரு முதிய தோழருக்கும் எனக்கும் நடந்த சம்பாஷணையின் சாராம்சம் பல தோழர்களுடைய அன்றைய மனநிலையைக் காட்டக்கூடியது.

'மலையாளத்திலும் தோட்டியின் மகன் என்றே தலைப்பா?' என்று கேட்டார் அந்த முதிய தோழர்.

'ஆமாம்' என்றேன்.

சில கணங்கள் மௌனம்.

'வாங்கிப் படிக்கிறாங்களா?'

'நிறைய.'

'முழுக்கவும் தோட்டிகள்தான் வாராங்களா?'

'அநேகமாக அவங்கதான்.'

'காதல் உண்டா?'

'உண்டு.'

'காதலிப்பவளும் தோட்டிச்சியா?'

'ஆமாம்.'

'அவங்க பாக்கற வேலைவெட்டி பத்தியெல்லாம் சொல்றாரா?'

'சொல்றார்.'

'ஒண்ணுவிடாம?'

'ஒண்ணுவிடாம.'

'குடும்பத்தைப் பத்தி?'

'சொல்றார்.'

'தமிழ்ல தலைப்பை மாத்திப்புட்டா என்ன, தோழர்?'

தோழர் கேட்ட கடைசிக் கேள்வி கவலையைத் தந்தது. புத்தகத்தை அச்சேற்றவே முடியாதோ என்ற எண்ணம் ஏற்பட்டது. தோட்டி என்ற சொல்லைத் தமிழில் எங்கேயாவது அச்சில் படித்திருக்கிறேனா என்று நினைவுபடுத்திப் பார்த்தேன். சட்டென்று எதுவும் நினைவுக்கு வரவில்லை. புத்தகம் வெளிவந்தால் தோழர்கள் துணிந்து படிப்பார்கள் என்று தோன்றிற்று. 'தோட்டிகளும் தொழிலாளி வர்க்கம்தானே, தோழர்' என்று ஜி. நாகராஜன் சொன்ன வாக்கியம் மிகுந்த ஆறுதலைத் தந்தது.

தொ. மு. சி. ரகுநாதனுடன் என் நட்பு நெருங்கியபோது 'தோட்டியின் மகன்' நாவலின் கையெழுத்துப் பிரதியை அவருக்குப் படிக்கத் தந்தேன். மொழிபெயர்த்து அப்போது இரண்டு மூன்று வருடங்களேனும் ஆகியிருந்தன. ஆனால் அது ஒரு சுமையாக என் மனதில் இருக்கவில்லை. தோட்டியைத் தமிழ் ஏற்றுக்கொள்ளச் சிலகாலம் காத்திருக்க நேர்வது இயற்கையாகவே தோன்றிற்று. 'மொழிபெயர்ப்பு நன்றாக வந்திருப்பதாகவும் மேலும் திருத்தங்கள் செய்து முழுமைப்படுத்தலாம்' என்றும் ரகுநாதன் கடிதம் எழுதியதாக நினைவு. அதற்கு சில வருடங்களுக்குப் பிறகு அவரிடமிருந்து 'சரஸ்வதி' ஆசிரியர் நண்பர் வ. விஜயபாஸ்கரனின் கைக்கு என் கையெழுத்துப் பிரதி போயிற்று. அவர் கொடுத்தாரா, நான் வாங்கித் தந்தேனா என்பது நினைவில்லை. 'சரஸ்வதி' இதழில் என் பெயரில் சிறுகதைகள் வந்துகொண்டிருந்ததால் என். எஸ். ஆர். என்ற பெயரில் தோட்டியின் மகன் தொடர்கதையாக வெளியாயிற்று. மார்ச் 57இலிருந்து ஜூன் 58 வரையிலும்.

'தோட்டியின் மக'னை மொழிபெயர்த்த பின்பும் நான் காய்ந்த வயலோரம் ஒற்றையடிப் பாதையில் நடந்து போகும் சித்திரம் மனதில் வந்து கொண்டுதான் இருந்தது. புறக்காட்சிகளில் -தென்னைமரம் உட்பட - எந்த மாற்றமும் ஏற்பட்டிருக்கவில்லை என்றாலும் நடந்து போகும் என் கையில் அப்போது ஒரு புத்தகம் முளைத்திருந்தது. அந்தப் புத்தகத்தின் தலைப்பை நான் சொல்ல வேண்டியதில்லை.

'தோட்டியின் மக'னை நான் மொழிபெயர்த்து ஐம்பது வருடங்கள் ஆகிவிட்டன. தமிழில் வெளியிடத் தகழி ஐம்பதுகளிலேயே உரிமையும் தந்திருந்தார். வெளியிடாமல் அசிரத்தையாக இருந்து விட்டேன் என்று சொல்லலாம். அசிரத்தைக்கும் நாம் உணராத காரணங்கள் இருக்கக் கூடும்.

மலையாளத்தில் 'தோட்டியின் மகன்' வெளிவந்த காலத்திலிருந்து

தொடர்ந்து பேசப்பட்டுவரும் நாவல். மேடையிலும் எழுத்திலும். அங்கு நடந்த விவாதங்கள் என் நினைவில் இருக்கின்றன. ஆனால் 'சரஸ்வதி'யில் இந்நாவல் தொடர்கதையாக வந்தபோது வாசகக் கவனத்தை இந்தத் தொடர் பெற்றதற்கான எந்த அடையாளமும் என்னிடம் வந்து சேரவில்லை. யாரும் இந்த நாவலைப் பற்றி இன்றுவரையிலும் எழுத்திலோ பேச்சிலோ குறிப்பிட்ட நினைவும் இல்லை. இருந்தாலும் காலம் மாறிக்கொண்டிருக்கிறது. தலித் இலக்கியம் தமிழில் உருவாகிக்கொண்டிருக்கிறது. தலித் இலக்கியத்தைப் படிக்கும் வாசகர்களும் தோன்றியிருக்கிறார்கள். திருநெல்வேலிச் சீமையிலிருந்து மாடுகள்போல் பிடித்துக்கொண்டு போகப்பட்ட இந்தத் தோட்டிகள் தலித் வாழ்க்கையின் அவலத்தை நம் மனதில் ஆழமாகப் பதியவைக்கின்றனர்.

தோட்டியின் மகன் இப்போது உண்மையாகவே புத்தக வடிவம் பெறுகிறது.

நாகர்கோவில் சுந்தர ராமசாமி

6. 3. 2000

(முதல் பதிப்பின் முன்னுரை)

# 1

இசக்கிமுத்து அன்று கண் மூடவே இல்லை. நல்ல காய்ச்சலும் இருமலும் அவனைப் பிடித்துக்கொண்டன. காலையில் எழுந்தபோது உடம்பில் வீக்கமும் கண்டிருந்தது. ஓவர்சீயரைக் கண்டு விஷயத்தைச் சொல்லி இரண்டு நாள் லீவு பெறுவதற்காகத் தன் மகன் சுடலைமுத்துவை அனுப்பினான்.

சுடலைமுத்து திரும்பி வந்து, ஓவர்சீயரைப் பார்த்துப் பேசிய விவரத்தைச் சொன்னபோது, இசக்கிமுத்துவால் அதை நம்பவே முடியவில்லை. அவன் முப்பது வருட காலமாக ஆலப்புழை முனிசிபாலிட்டியில் தோட்டி வேலை பார்க்கிறான். இத்தனை வருடங்களிலும் மொத்தமாக ஆறு அல்லது ஏழு நாட்கள்தான் அவன் லீவு எடுத்திருப்பான். அப்படியிருந்தும் இரண்டு நாள் லீவு கேட்டதற்கு வேறு ஆளை வேலைக்கு அமர்த்திவிடுவோம் என்று பதில் கிடைத்திருக்கிறது. இந்த லட்சணத்தில், தன் மாதச் சம்பளத்தில் மூன்றில் ஒரு பங்கையாவது ஓவர்சீயருக்கு மாதா மாதம் கொடுத்து வரவும் இசக்கிமுத்து தவறியதில்லை.

மகனிடம் கேட்டான் :

"வேறே ஆளு வைப்பேன்னா சொன்னாரு?"

"அதுக்கு வேறே ஆளு இருக்குன்னுதான் சொன்னாரு."

"இண்ணைக்கே வச்சுப்புடுவேன்னு சொன்னாரா?"

"ஆமா."

இசக்கிமுத்து சிறிது நேரம் பேசாமல் இருந்தான். வேறு ஆளை வேலைக்கு அமர்த்திவிட்டால், பிறகு, இந்த வியாதி குணமடைந்த பிறகு அவன் என்ன செய்வான்? தனது வாளியையும் மண்வெட்டியையும் மகனிடம் ஒப்படைத்துவிட்டுச் சாக வேண்டும் என்றுதான் அவன் ஆசைப்பட்டுக்கொண்டிருந்தான். தனக்கு இயலாது போகும்போது, தன் இடத்தில் தன் மகனையே நியமிக்க வேண்டுமென்று, அவ்வப்போது வரும் ஓவர்சீயர்களிடமெல்லாம்

சொல்லிவந்திருக்கிறான். அவர்களை எல்லாம் இயன்ற அளவுக்கு திருப்தி செய்துமிருக்கிறான்.

இசக்கிமுத்து கேட்டான் :

"ஒன்னெ வேலையிலே வெச்சுக்கிடணுமின்னு நீ சொன்னியா?"

"இல்லே."

இசக்கிமுத்துவுக்குப் பொறுக்க முடியாதபடி கோபம் பொத்துக்கொண்டு வந்தது. பக்கத்தில் கிடந்த கழியை எடுத்து ஓங்கினான். சுடலைமுத்து விலகிவிட்டான்; அடி மேலே விழவில்லை. இசக்கிமுத்துவுக்கு இருமல் வந்தது. அதோடு மகனை வாயில் வந்தபடி எல்லாம் ஏசினான். தவறெல்லாம் சுடலைமுத்து பக்கம் தானே; திமிர் பிடித்தவன்; பேச வேண்டிய முறையில் பேசியிருக்கமாட்டான். தன் அப்பனுக்குப் பதில் தனக்கு வேலை போட்டுத்தர வேண்டும் என்று வாய் திறந்து ஒரு வார்த்தை கேட்டிருந்தால், உடனே வேலை கிடைத்துத்தானிருக்கும்.

"நீ புத்திக் கெட்டவண்டா. 'ஸ' 'பா'ன்னு போயிருப்பே; அவருக்குப் பிடிச்சிருக்காது" என்றான் இசக்கிமுத்து.

முப்பது வருட காலமாகத் தான் சுத்தம் செய்துகொண்டிருக்கும் கக்கூசுகளில் மூன்றாமவன் ஏறுவதா? அதைக் கிழவனால் பொறுக்க முடியாது. ஒவ்வொரு சமயம் அவன் வீட்டுக்காரர்களைப் பார்த்து, கக்கூசுகளைப் பழுதுபார்க்கத் தூண்டியது எதற்கு? மகனை எண்ணித்தானே? அவன் வேலையைச் சுலபமாக்குவதற்குத் தானே?

சாயங்காலம் தடியை ஊன்றியபடி இசக்கிமுத்து வெளியே சென்றான். அவனது மேல்துண்டின் முடிச்சில் ஒன்றரை ரூபாய் இருந்தது.

வெளியே போனவன், இரவு வெகு நேரத்திற்குப் பிறகு தடுமாறித் தள்ளாடி வீடு வந்து சேர்ந்தான். மகனை அழைத்தான். மறுநாள் காலையிலேயே சுடலைமுத்து வேலையில் சேரலாம். ஆனால் முதல் மாதச் சம்பளத்தில் ஒரு பைசாகூட அவனுக்குக் கிடைக்காது.

அன்று இரவு சுடலைமுத்துவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. அவனும் ஒரு தோட்டியாகப் போகிறான். இரண்டு முறை அவன் குப்பை கூட்டும் வேலை பார்த்திருக்கிறான். ஒருநாள் தானும்

தோட்டியாகிவிட வேண்டியதுதான் என்பது அன்றே அவனுக்குத் தெரியும். அந்த நாள் இதோ வந்துவிட்டது. இனிமேல் வாழ்நாள் முழுவதையும் அவன் வாளியும் மண்வெட்டியுமாகத்தான் கழிக்க வேண்டும்.

தோட்டியாகிவிட்டால் தான் எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதைச் சுடலைமுத்து ஏற்கனவே தீர்மானித்து வைத்திருந்தான். அவன் கள் குடிப்பதில்லை. பலர் அவனை வருந்தி அழைத்ததுண்டு; ஆனாலும் அவன் குடித்ததில்லை. இனி மேலும் குடிக்கப்போவதில்லை. தோட்டியும் மனிதனாக வாழமுடியாதா? அவனிடமும் காசு, பணம் சேரக்கூடாதா? இப்படிப் பலப்பல எண்ணியவாறே சுடலைமுத்து படுத்துக் கிடந்தான்.

கோழி கூவியபோது, இசக்கிமுத்து மகனைக் கூப்பிட்டான். தான் வழக்கமாகச் செல்லும் ஒவ்வொரு வீட்டைப் பற்றியும் அவனிடம் சொன்னான். உபதேசம் செய்தான் - பணிவு வேண்டும்; கர்வம் கூடாது; வேலை துப்புரவாக இருக்க வேண்டும் என்று.

சுடலைமுத்து எல்லாவற்றையும் சரியென்று ஒப்புக்கொண்டான். இசக்கிமுத்து மகனை ஆசீர்வதித்தான். அவனுக்குத் தொண்டை இடறியது; கண்கள் நிறைந்தன.

'கடவுள் ஒன்னெக் காப்பாத்துவாரு. என் வாளியையும், மம்மட்டியையும் தாறேன், அத வெச்சு நீ பொளச்சிக்க."

கிழவன் மகனை மார்போடு அணைத்துக்கொண்டான். முத்தமிட்டான். அவன் கண்கள் நிறைந்து ஒழுகிற்று. தந்தையின் இதயம் நிறைந்து வழிந்த ஆசியைப் பெற்றுக்கொண்டு, சுடலைமுத்து வெளியேறினான். அவன் வாளியையும் மண்வெட்டியையும் எடுத்துக்கொண்டபோது, உள்ளேயிருந்து கிழவன் குரல் வந்தது:

"அந்த மூலையிலிருக்கிற சட்டியையும் எடுத்துக்கடா. நீ கஞ்சி கொண்டுவந்துதான் நான் குடிக்கணும். நீ அங்கே எங்கேயாவது குடிச்சிக்க."

சுடலைமுத்து ஒன்றும் பேசவில்லை. அவன் காலடிச் சத்தம் கேட்டுக் கிழவன் மீண்டும் கேட்டான்:

"எடுத்துக்கிட்டியாடா?"

சுடலைமுத்து பதிலுக்கு லேசாக முனகினான். இசக்கிமுத்து

கைகூப்பியபடி பிரார்த்தித்தான் :

"எம்மவனுக்கு இண்ணைக்கிக் கெடைக்கிற சோறு எண்ணைக்கும் கெடைக்கணும் ஆண்டவனே!"

ஆலப்புழை சந்தனத் தெரு வார்டில் அன்று ஒரு வாலிபத் தோட்டிதான் வேலைக்குப் போனான்.

ஒரு திருப்பத்திலிருந்து சுடலைமுத்துவின் வார்டு துவங்குகிறது. அந்தத் திருப்பத்தில் ஒரு ஓட்டல். அந்த ஓட்டலிலிருந்து வேலை தொடங்கும்படி இசக்கிமுத்து தன் மகனிடம் சொல்லி அனுப்பியிருந்தான். சுடலைமுத்து அங்குள்ள பல அறைகள் கொண்ட கக்கூசுகளில் ஏறி இறங்கியபோது, ஓட்டல் வேலையாள் ஒருவன் அங்கே வந்தான். அவன் கையில் இரண்டு தோசைகள் இருந்தன.

"அதோ. அந்த பாத்ரூமில் உத்தரம் நீண்டு நிக்குது பாரு. அங்கே ஒரு தகரக் குவளை இருக்குது. அதை எடுத்துக்கிட்டு வா. காப்பி தாறேன்" என்றான் அவன்.

சுடலைமுத்து ஒன்றும் பதில் பேசாமல் நடையைக் கட்டினான். ஓட்டல் பையன் கூப்பிட்டான்.

"டேய், ஒன்னத்தான் கூப்பிட்டேன்."

சுடலைமுத்து திரும்பி நின்று சொன்னான்:

"எனக்கு வேண்டாம்."

அவன் இப்படிச் சொன்னது சர்வருக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. அவன் பேசாமல் உள்ளே சென்றான். சிறிது நேரத்திற்குப் பிறகு ஓட்டல் முதலாளி இறங்கி வந்து கக்கூசுக்குப் போனார். திரும்பி வந்தபோது அவர் சொன்னார்.

"பரவாயில்லை. கக்கூசை நன்றாகச் சுத்தப்படுத்தியிருக்கான்."

சுடலைமுத்து காப்பியும் தோசையும் வேண்டாம் என்று மறுத்தது அதுகாறும் அங்கு நிகழ்ந்திராத ஒரு அதிசயம். அதை ஒட்டி புதிய தோட்டியைப் பற்றிய பேச்சு சிறிது நேரம் அடிபட்டது. இப்படிப் புதிய தோட்டியை எல்லோரும் அறிந்து கொண்டார்கள்; எல்லோரும் அவனைப்பற்றிப் பேச ஆரம்பித்தார்கள்.

இரண்டு நாளைய வேலையைப் பத்து மணிக்குள் செய்து முடிக்க வேண்டும். அதுவும் சுத்தமாகச் செய்ய வேண்டும். வேலை செய்துகொண்டிருக்கும்போது ஓவர்சீயர் எசமானை இரண்டு முறை அவன் பார்த்தான். வேலை மட்டும் துப்புரவாக இல்லை என்றால் வேலை போய்விடும் என்று அந்த இரண்டு முறையும் அவர் எச்சரிக்கை செய்தார்.

மணி சுமார் பதினொன்று ஆகிவிட்டது. இன்னும் வேலை தீர்ந்தபாடில்லை. சுடலைமுத்து நன்றாகக் களைத்துப்போய்விட்டான். காலையில் ஒன்றுமே சாப்பிடவில்லை. பல வீடுகளில் அவனுக்குப் பழஞ்சோறு கிடைத்திருக்கும். பலர் சோற்றைப் எடுத்து வைத்துக்கொண்டு அவனைக் கூப்பிட்டார்கள். அவனுக்கு எதையாவது தந்துவிட வேண்டுமென்ற நிர்ப்பந்தம் எல்லோருக்கும் இருப்பதாகத் தோன்றிற்று. அதனால்தானோ என்னவோ, அவனுக்கும் வீம்பு அதிகரித்தது. ஆம், அவன் அதைச் சாப்பிடப் போவதில்லை.

மற்றொருவரின் காப்பியும் தோசையும் அவனுக்கு வேண்டாம். ஒரு வாய்த் தண்ணீர் கிடைத்தால் அதுவே போதும். ஒரு பெண் குழந்தை தெருக் குழாயில் தண்ணீர் பிடித்துக்கொண்டு போயிற்று. தாகத்தாலும், களைப்பாலும் அவன் கேட்டான்:

"ஒரு வாய்த் தண்ணி குடுப்பியாம்மா?"

அந்தக் குழந்தை மூக்கைப் பொத்திக்கொண்டு ஓடிவிட்டது.

பன்னிரண்டு மணிக்குத்தான் சுடலைமுத்துவின் வேலை முடிந்தது. அன்று அவன் பீப்பாய் நிறைந்து வழிந்துகொண்டிருந்தது. மலக்கிடங்குக்கு அதைத் தள்ளிக்கொண்டு போவது மற்றொரு கடினமான வேலை. மலம் பாதையில் வழிந்து விழுந்துகொண்டிருந்தது. சில இடங்களில் வண்டியை நிறுத்தி வாரிப்போட வேண்டியிருந்தது.

சுடலைமுத்து தள்ளாடி, நா வறள வீடு போய்ச் சேர்ந்தான். கிழவன் உள்ளேயிருந்து இருமுகிறான். நெஞ்சைப் பிளக்கும் இருமல். சுடலைமுத்து நடுங்கினான். அவன் ஒரு நேரடியான காரியத்தோடு இப்போது மோதுகிறான். இசக்கிமுத்து அன்று ஒன்றுமே சாப்பிடவில்லை. மகன் வரும் வேளையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறான். வெளியே காலரவம் கேட்டுக் கிழவன் உரக்க அழைத்தான்:

"மவனே, சொடல!"

சுடலைமுத்துவுக்குப் பதில் கொடுக்கப் பயம்.

"ஏதாவது கொண்டுவந்தியாடா? தொண்டையெல்லாம் வறண்டுபோச்சே."

சுடலைமுத்து உள்ளே நுழையவில்லை. கிழவன் உள்ளேயிருந்து கேட்டான் :

"நீ ஏதாவது தின்னியா?"

பேச்சில்லை.

சுடலைமுத்துவால் அங்கு நிற்க முடியவில்லை. அக்னிக் குண்டத்தில் நிற்பது போலிருந்தது. இசக்கிமுத்து வாசல் பக்கம் நகர்ந்தான்.

"ஜட்ஜி எசமான் நான் எங்கேன்னு விசாரிச்சாராடா? ரெட்டியார் மொதலாளிகிட்டே அப்பா படுக்கையிலே விழுந்துட்டார்னு சொன்னியா?"

சுடலைமுத்து அங்கிருந்து நகர்ந்து விட்டான். இசக்கிமுத்து வாசல் பக்கம் எட்டிப் பார்த்தான். அங்கு யாரையும் காணோம்.

"நீ வரலியா இன்னும்? டேயப்பா! தொண்டை காயுதடா எனக்கு."

இசக்கிமுத்து காதைத் தீட்டிக்கொண்டு உற்றுக் கேட்டான். 'இன்று வேலை அதிகம். அதுதான் வருவதற்குத் தாமதம் ஆகிறது போலிருக்கிறது. இருந்தாலும் இவ்வளவு தாமதம் ஏன்? நான் தண்ணீர்கூடக் குடிக்காமல் கிடப்பது அவனுக்குத் தெரியாதா?'

ஓட்டலில் மும்முரமாக வியாபாரம் நடந்துகொண்டிருக்கிறது. மானேஜருக்கு ஒரு நிமிஷம் ஓய்வில்லை. கடைவாசலில் மானேஜர் ஏறிட்டுப் பார்த்தால் உடனே பார்வையில் படும்படி சுடலைமுத்து ஒருமணி நேரமாக நின்றுகொண்டிருக்கிறான். புதிய ஆசாமியான அவனை யாருமே பார்க்கவில்லை. பார்த்தாலும் இனம் கண்டுகொள்ள முடியாது. தோட்டியைத் தெரிந்துகொள்வதும், அவனைப்பற்றி நினைப்பதும் காலை வேளையில் தானே. தோட்டியை அடையாளம் கண்டுகொள்ள வேண்டும் என்றால்,

அவனுக்கென்றிருக்கும் தனி வாசல் வழியாக அவன் வர வேண்டும். அந்தப் பின்வாசல் சாத்தப்பட்டிருக்கிறது. அந்த வாசலுக்குப் பின்னால் நின்றுகொண்டு அவன் கூப்பிட்டுப் பார்த்தான். எவருமே பதில் கொடுக்கவில்லை. தோட்டி வெளியேயிருந்து கூப்பிடுகிறானா, கூப்பிடுகிறானா என்று உள்ளே இருப்பவர்கள் கவனத்தோடு காத்திருக்கும் நேரமுண்டு. அப்போது, ஒருமுறை அழைத்தால் போதும்; அதுகூட வேண்டாம், லேசாக முனகினால் போதும்; கதவு திறந்துகொண்டு விடும்.

சுடலைமுத்து சுவரேறிக் குதித்து உள்ளே நுழைந்து பின்னால் போய் நின்றுகொண்டான். அவ்வாறு நீண்ட நேரமாக நின்ற பிறகு சர்வர் ஒருவன் வெளியே வந்தான். அவனுக்குச் சுடலை முத்துவை யாரென்று புரியவில்லை. அவன் கேட்டான்:

"நீ யாரு? எதுக்கு இங்கே நிக்கறே?"

அந்த சர்வர்தான் காலையில் தோசையை வைத்துக்கொண்டு அவனைக் கூப்பிட்டவன். சுடலைமுத்து சொன்னான்:

"கொஞ்சம் கஞ்சித் தண்ணி . . ."

"இப்பக் கொடுக்க முடியாது. போ, போ."

சர்வர் ஒரு பெரிய பாத்திரத்தைக் கழுவி முடித்ததும் அங்கிருந்து போய்விட்டான். சிறிது நேரத்திற்குப் பிறகு வேறொருவன் வந்தான்.

"யாரு? எங்கே வந்தே?"

"இசக்கிமுத்துவுக்கு மவன்."

"இசக்கிமுத்துவா? அதாரு?"

"தோட்டி."

"இப்போ எதுக்கு வந்தியாம்?"

"எங்கப்பன் இண்ணைக்கிப் பட்டினியாக் கெடக்கான்."

"டேய், இப்போ இங்கே ஒண்ணும் தர முடியாது. அந்த எச்சில் தொட்டிக்குப் பக்கத்திலே போய் நின்னுக்க. யாராவது எச்சில் இலை கொண்டு வந்தா வாங்கிக்க. அதிலே ஏதாவது இருக்கும்."

சிறிது தூரத்தில் எச்சில் தொட்டியில் இலைகள் விழுந்து கொண்டிருந்தன. அந்த இலைகளை வழித்து எடுத்தால் ஏதாவது கிடைக்கும். தொட்டிக்குள் நாய்கள் உறுமிக்கொண்டிருந்தன.

சுடலைமுத்து நடந்தான். வேறு எங்காவது போகலாம் என்று தீர்மானித்து வாசலைத் திறந்து வெளியேறினான்.

அடுத்த வீடு ஐட்ஜினுடையது. அந்த வீட்டைப் பற்றி அவன் அப்பன் நிறையச் சொல்லியிருக்கிறான். அங்கும் முயன்று பார்க்கலாமே!

வாசலில் காவலாளி நின்றுகொண்டிருந்தான்.

"யார் நீ?"

"இசக்கிமுத்துவின் மகன்."

"இசக்கிமுத்துவா? அதாரு?"

"தோட்டி."

"இப்போ ஒனக்கு என்ன வேணும்?"

"கொஞ்சம் கஞ்சி."

சுடலைமுத்து, தன் அப்பன் முப்பது ஆண்டுகளாக அவ்வூரில் தோட்டியாக இருப்பதைத் தெரிவித்தான். அவனிடம் ஐட்ஜுக்கு அன்பு உண்டு. அவன் அப்பன் தண்ணீர்கூடக் குடிக்காமல் கிடக்கிறான். ஐட்ஜு எசமானிடம் உடனே இதைத் தெரிவித்தாக வேண்டும்! காவலாளி கூறினான்:

"எல்லோரும் பூசையிலே இருக்காங்க, இப்போ முடியாது."

உள்ளே பலர் கோஷ்டியாகப் பாடுவது கேட்டுக்கொண்டிருந்தது. சுடலைமுத்து கேட்டான்:

"பூசை எப்போ முடியும்?"

"ரெண்டு மணி நேரம் ஆகும்."

அப்பன் தொண்டை வறள அவனை இன்னேரம் கூப்பிட்டுக் கொண்டிருக்கலாம். அங்கே குடிக்கத் தண்ணீராவது இருக்கிறதா?

இருக்கிறது. இரண்டு நாள் முன் மொண்டுவைத்த தண்ணீர் அது. ஆனால், அதை எடுத்துக் குடிக்கக்கூட அவனுக்குத் தெம்பு இருக்காதே!

சுடலைமுத்து பக்கத்து வீட்டில் நுழைந்தான். அங்கு, குத்து விளக்குமுன் அமர்ந்து ஒரு கிழவி ஜபித்துக்கொண்டிருந்தாள். சுடலைமுத்து உரக்கக் கேட்டான் :

"கொஞ்சம் தண்ணியிருந்தா கொடுங்கம்மா."

கிழவிக்குக் கோபம் வந்தது. பூஜை வேளையில் பிச்சைக்கு வந்த நாலாவது ஆள் இவன்!

சுடலைமுத்து வீடு வீடாக ஏறி இறங்கினான். பத்து மணிக்கு மேலாகி விட்டது. சில ஏழைகளின் வீடுகளிலிருந்து கிடைத்தவை எல்லாமாக, அவன் பானை பாதி நிறைந்திருந்தது. இனிமேல் வீட்டுக்குத் திரும்பலாம் என்று அவன் தீர்மானித்தான். கிழவனுக்குப் போதுமான கஞ்சித் தண்ணியும் பருக்கையும் இருக்கிறது.

ஒரே நாள் அனுபவத்தில் சுடலைமுத்து சில விஷயங்களைப் புரிந்துகொண்டான். கக்கூசுகள் நிறைந்து முடைநாற்றமெடுக்கிற போதுதான் தோட்டிக்கு ஏதாவது கிடைக்கும். சாயங்காலம் கக்கூசுகள் காலியாகக் கிடக்கின்றன. எனவே, அவனை யாரும் தெரிந்துகொள்ள மாட்டார்கள்.

பீப்பாய் வண்டிக்குப் பின்னால் வைத்துக்கொண்டு வரப்பட்ட கஞ்சியும் சோறும் உண்டு சுடலைமுத்து வளர்ந்திருக்கிறான். உண்மைதான். அதனால், அந்தச் சோற்றைதான் என்றைக்கும் தின்ன வேண்டுமா, என்ன? சரியாக வேலை செய்து, கூலி பெற்று, சுத்தமான உணவு உண்ணக் கூடாதா? இருந்தாலும் இந்தக் கண்டிப்பான விதிகளை என்றுமே காப்பாற்றிக்கொண்டுபோவது சாத்தியமா என்று சுடலை முத்து சந்தேகப்பட்டான். அழுக்கை அப்புறப்படுத்தும் தோட்டி, அழுக்கைத்தான் தின்ன வேண்டும் போலிருக்கிறது! இந்த மாதம் அவனுக்குச் சம்பளம் கிடையாது. எனவே இரண்டு மாதங்கள் எப்படியாவது தள்ளிக்கொண்டுபோக வேண்டும். காலையில் சட்டியை எடுத்துக்கொண்டு கிளம்பிவிட்டால் கிழவன் பாடு கழிந்துவிடும். அப்புறம் அவனுக்கு?

அழகான ஆடை அலங்காரங்களுடன் மூன்று நான்கு பேர் உற்சாகமாக வம்பளந்தபடி வீதியில் செல்கிறார்கள். சிந்தனையிலாழ்ந்து நடந்துகொண்டிருந்த சுடலைமுத்து அவர்கள்

மத்தியில் போய்விட்டான். அவர்களில் ஒருவன் முறைத்தபடி கேட்டான்:

"ஓரமாகப் போகக் கூடாதாடா? நாறுகிறதே."

சுடலைமுத்து வாய் திறக்கவில்லை. சூடான பதில் அவனிடம் தயாராக இருந்தது. ஆனால் அவன் அதை மனசுக்குள் அடக்கிக்கொண்டான். ஓரமாகப் போக வேண்டுமாம். நாறுகிறதாம்! அவனை நாற்றம் பிடித்தவனாக்கிய பொருள் அந்தப் பெரிய மனிதர்களின் வயிற்றுக் குள்ளும் இருக்கிறதே!

பக்கத்து மாடியிலிருந்து சங்கீதம் கேட்கிறது. மற்றொரு இடத்திலிருந்து நல்ல கறி தாளித்துக் கொட்டும் மணம் பரவுகிறது. இரு பக்கங்களிலுமுள்ள வீடுகள் ஜகஜ்ஜோதியாக மகிழ்ச்சியின் உறைவிடமாகத் திகழ்கின்றன. அங்கெல்லாம் 'மவராசர்கள்' வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் இந்தச் சுகமும், ஆனந்தமும் கக்கூசு சுத்தமாக இருப்பதால்தானே என்று சுடலைமுத்து எண்ணினான். தோட்டி இல்லாமலிருந்தால், தோட்டியாவதற்கு மனிதனுக்கு விருப்பமில்லையென்றால், இந்தப் பட்டணம் எப்படி இருக்கும்? சீரழிந்து போகும். ஆனால் தோட்டியை சிருஷ்டிக்க அவர்களுக்குத் தெரியும். அவன் இல்லாமல் முடியாதே.

அன்று நிலவு பொழியும் இரவு. சிறிது தூரத்தில் தெரியும் மதிற்கட்டிற்குள்தான் மலக்கிடங்கு இருக்கிறது. அதற்குப் பின்பக்கம் தென்படும் கறுப்புப் புள்ளிகள்தான் தோட்டிகளின் குடிசைகள். கூரை இற்று, செல்லரித்துக் காணப்படுகின்றன அவை. வடகோடியிலுள்ள குடிசையில் சுடலைமுத்துவின் அப்பன் 'மவனே மவனே' என்று கூப்பிட்டுக்கொண்டிருப்பான்.

சுடலைமுத்து வேகமாக நடந்தான். இந்தக் கஞ்சித் தண்ணியைக் கிழவன் அடக்க முடியாத ஆவலுடன் வாங்கிக் குடிப்பான். அவனுக்குத் திருப்தி ஏற்படும்; ஆசுவாசம் கிடைக்கும். இந்தப் பெரிய மனிதர்களின் தயாள குணத்தைப் பற்றியும், தர்ம சிந்தையைப் பற்றியும் அப்பாவிடம் நிறையச் சொல்ல வேண்டியிருக்கிறது அவனுக்கு.

மலக்கிடங்கு வழியாகச் சுவர் ஏறிக் குதித்து மறுபக்கம் போவது சுளுவான சுருக்குப் பாதை. அன்று கொண்டுவந்து குவிக்கப்பட்டிருந்த மலம் ஆழமான குழியினுள் நிலவு ஒளியில் மின்னுவதைப் பார்த்தான். குழியைக் கடந்து, சுவர் ஏறிக் குதித்து சுடலைமுத்து குடிசையை அடைந்தான். உள்ளே அரவம் இல்லை.

"அப்பா!"

அமைதி

"அப்பா!"

சப்தமே இல்லை. சுடலை குனிந்து உள்ளே நுழைந்தான்.

"தூக்கமா ஐயா? இந்தா கஞ்சி.'

பதில் இல்லை. கையிலிருந்த பானையைக் கீழே வைத்துவிட்டு சுடலைமுத்து தட்டித் தடவினான். பனிக்கட்டி போல் குளிர்ந்து போயிருந்த ஏதோ ஒன்றில் கை முட்டிற்று. அவன் நடுங்கினான்.

"அப்பா!"

அவன் உசுப்பி எழுப்பிப்பார்த்தான்.

அமைதி.

சுடலைமுத்து கதறினான்:

"அப்பா . . . !

ஒரு சிம்னி விளக்கு குடிசையினுள் ஒளி பரப்புகிறது. அறையின் நடுவில், இரண்டு மூன்று கந்தைத் துணிகளுக்குள் கிழவனின் சவம் கிடக்கிறது. தோட்டிகள் எல்லோரும் சுற்றி உட்கார்ந்து பிரார்த்தனை செய்கிறார்கள். ஒருவன் சற்று விலகி அமர்ந்திருக்கிறான்; அவன் கிறிஸ்தவ மதத்தைத் தழுவிய தோட்டி. அறையின் வேறொரு மூலையில் சுடலைமுத்து சுருண்டுபோய்க் கிடக்கிறான்.

ஜபத்திற்கிடையே ஒருவன் கேட்டான்:

"இசக்கிமுத்து அண்ணனுக்கு என்ன வயசிருக்கும்?"

அங்கிருந்தவர்களில் யாராலும் அதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. அந்தக் கூட்டத்திலேயே வயது முதிர்ந்த பழனி சொன்னான்:

"எனக்கு நெனவு தெரிஞ்ச நாளிலிருந்து அவரு இப்படித்தான் இருக்காரு."

சிறிது நேரம் ஜபம் தொடர்ந்தது. பிறகு பழனி சொன்னான்:

"நம்ம ஆளுங்களிலே இவ்வளவு வயசு யாருமே இருந்ததில்லை. ஒண்ணும் இல்லேண்ணா ஏதாவது தொத்து வியாதி, வயித்துப்போக்கு, வசூரி புடிச்சிக்கிடும். ஆள் குளோஸ். இல்லேண்ணா சயம். நாப்பது வயசு இருந்தாலே பெரிய வயசுதான்."

அடுத்த கேள்வி சுடலைமுத்துவின் தாயைக் குறித்து. ஆலப்புழையில் அவளும் குப்பை கூட்டிக்கொண்டிருந்தாள். அவள் இறந்தபோது சுடலைமுத்து ஒரு வயசுக் குழந்தை.

ஜபம் நின்று பேச்சு ஆரம்பமாகிவிட்டது. 'இசக்கிமுத்து அதிருஷ்டசாலி' என்றான் பழனி. அந்த அபிப்ராயம் அங்கே யாருக்கும் சரி என்று படவில்லை; அவர்களுக்கு அது புரியவுமில்லை. 'அவன் அதிருஷ்டம், பாயில் விழாமல் போனதுதான்' என்று பழனி விளக்கம் தந்தான். எல்லோரும் அது சரிதான் என்று ஒத்துக்கொண்டார்கள். பழனி தொடர்ந்தான்:

"அதிருஷ்டம், அதிருஷ்டம்னா என்னது? நடந்து போகும்போது சாவுறதுதான்."

அந்தக் கருத்தைச் சற்று விலகி உட்கார்ந்திருந்த ஔசேப்பு ஆதரிக்கவில்லை. அவன் சொன்னான்:

"அதென்ன அதிருஷ்டம்?"

"தோட்டிக்கு வேறென்னடா அதிருஷ்டம்?"

வடிவேலுவுக்கு ஔசேப்பின் அந்தரங்கம் புரிந்தது. ஔசேப்பு மதம் மாறிய நாள் முதல், வடிவேலுவையும் மதம் மாறும்படி வற்புறுத்திக்கொண்டிருந்தான். வடிவேலு கேட்டான்:

"வேறென்னடா அதிருஷ்டம் மனிசனுக்கு?"

அதற்கு, ஔசேப்பு கம்பீரமாகப் பதில் சொன்னான்:

"நாம் எதற்காகப் பிறந்தோம்? ஆண்டவரைத் துதிக்க. செத்துப் போனாலும் மோச்சம் கிடைக்கணும். கடைசிக் காலத்திலே சுய நெனப்போடே மண்டயெப் போடணும்."

மற்றவர்கள் வாய்விட்டுச் சிரித்தார்கள். ஔசேப்புக்கு ஆத்திரம் பீறிட்டுக்கொண்டு வந்தது. எல்லோரையும் திட்டி நொறுக்கினான்:

"நம்பிக்கை இல்லாதவங்க."

நடுச்சாமக் கோழி கூவிற்று. பிச்சாண்டி கேட்டான்:

"இப்பிடிச் சும்மா குந்திக்கிட்டிருந்தாப் போதுமா?"

உடனே எல்லோருமாகக் கூடி யோசித்தார்கள். இரவோடு இரவாக இசக்கிமுத்துவை அடக்கம் செய்யவா, வேண்டாமா? காலையில் அவர்கள் வேலைக்குப் போக வேண்டும். பழனி சுடலைமுத்துவிடம் கேட்டான்:

"டேய் அய்யா, எங்கேடா தோண்டிப் பொதெக்கிணும்?"

சுடலைமுத்து அழுதுகொண்டிருந்தான். பிச்சாண்டி அவனைத் தேற்ற முயன்றான். எல்லோரும் இறப்பார்கள். கண்ணீர் சிந்திப் பயன் என்ன? கஷ்டப்படாமல் செத்ததற்காகச் சந்தோஷப்பட வேண்டும். ஆனால் சுடலைமுத்துவின் இதய வேதனை தணியவில்லை. ஒரு வயசிலிருந்து எத்தனை சிரமப்பட்டு இசக்கிமுத்து அவனை வளர்த்தான்! அவன் வாழ்ந்ததே மகனுக்காகத்தானே! குடிக்கத் தண்ணீர்கூட இல்லாமலாகிவிட்டதால்தான் தன் அப்பன் இப்படித் திடீரென்று போய்விட்டானோ என்று சுடலைமுத்து எண்ணினான். அவன்தான் தகப்பனைக் கொன்றுவிட்டானோ?

எங்கே புதைக்க வேண்டும் என்பது பெரிய கேள்வியாயிற்று. பழனி மீண்டும் சுடலைமுத்துவின் அபிப்பிராயத்தைக் கேட்டான். நிலைமையைப் பழனி தெளிவாகச் சொன்னான்:

"சுடுகாட்டிலேண்ணா, அங்கே இருக்கிறவனுக்கு ஏதானும் கொடுக்கணும். அப்புறம் தூக்கறவங்களுக்கு வயத்துக்காவது போடணும். எல்லாமா அஞ்சாறு ரூபா செலவளியும். அதுதான் கேட்டேன்."

சுப்பு கூறினான் :

"ஆமா, காசு இல்லாமே முடியுமா?"

ஔசேப்புக்கு அப்போதும் பழைய அபிப்பிராயம்தான்.

"மாதாகோயிலுக்குப் போயிட்டா என்ன? பெட்டிதான் ஒண்ணு வேணும். இப்போ இருக்கிற சாமியாரு நல்லவரு. நான் சொல்லுறேன். காசு இல்லேண்ணாலும் காரியம் முடிஞ்சிரும்!"

அந்த யோசனையை யாருமே கவனிக்கவில்லை. சுடலைமுத்து கணக்குப் போட்டுப் பார்த்தான். ஆறு ரூபாய் வேண்டும். தன் யதார்த்த நிலையைச் சுடலைமுத்து தெரிவித்தான்.

"அது ஒண்ணும் பிரமாதமில்லே. காலையிலே நீ வேலைக்குப் போ, ஆறு ரூவா சேந்திரும்" என்றான் சுப்பு.

சமீப காலத்தில் அவர்களிடையே நடந்த இரண்டு மூன்று சவ அடக்கங்களைக் குறித்து சுப்பு நினைவூட்டினான். அந்தச் செலவெல்லாம் எப்படி நடந்தது? வேலை செய்யும் வீடுகளுக்குச் சென்று சமாச்சாரத்தைச் சொல்ல வேண்டும். சொன்னால் காரியம் நடந்துவிடும். ஓரிரு தினங்கள் சவத்தைப் போட்டு வைக்கும்படி நேரலாம். அதனால் ஒன்றும் கெட்டுவிடாது. சம்பிரதாயப்படி செய்ய வேண்டியவற்றைச் செய்தோம் என்கிற திருப்தி ஏற்படுமல்லவா?

சுடலைமுத்துவுக்கு அன்றைய அனுபவங்கள் நினைவில் எழுந்தன. கிழவன் திடீரென்று சாக வேண்டிய காரணங்கள்! விவரித்துக்கூற அவனால் இயலவில்லை. அவன் சொன்னது இதுதான் :

"யாரிடமும் எதுவும் கேட்க என்னாலே முடியாது."

எல்லோரும் சேர்ந்து மறுபடியும் ஆலோசித்தார்கள். நிச்சயமான ஒரு முடிவுக்கு அவர்களால் வர முடியவில்லை. கோழி மீண்டும் கூவிற்று. ஏதாவது ஒரு முடிவு செய்யும்படி பழனி அவசரப்படுத்தினான். சுடலைமுத்து என்ன செய்ய முடியும்?

பிச்சாண்டி சொன்னான் :

"விடியு முன்னாலே எங்கேயாவது தோண்டி வெச்சிரலாம்."

சுப்பு கேட்டான்:

"அது தப்பு இல்லையா?"

"ப்பூ! யாருக்குத் தெரியப் போவுது? விசயம் ரகசியமா இருந்தாப் போதும்."

வடிவேலு பிச்சாண்டியிடம் கேட்டான்:

"இதுக்கு முன்னே பெரிய பளனியின் வீட்டுக்காரியை அங்கே தானே தோண்டிப் போட்டோம்? அதோ அந்த மாமரத்துக்கு அடியிலே

இசக்கிமுத்துவை அடக்கம் செஞ்சிருவமா?"

அது நல்ல யோசனையாகப் பட்டது. பழனி ஒப்புக்கொண்டான்.

"சரி அப்படியே நடக்கட்டும்."

எவருமே வாய் திறவாமல் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தார்கள். பழனி எழுந்து வெளியே வந்து சோம்பல் முறித்தான். ஔசேப்பு பெரிய கொட்டாவி விட்டான். ஆண்டி கண்ணைக் கசக்கிக்கொண்டான். எல்லோரும் தூங்கும் வேளை வந்ததும் பழனி கேட்டான்:

"என்ன, ஏதாவது பிரச்சினை ஏற்படுமோ?"

பிச்சாண்டி எச்சரித்தான்.

"ஆனா ஒண்ணு. விசயத்தை யாரும் வெளிலே விட்டிறப் படாது."

பிச்சாண்டி சுடலைமுத்துவை எழுப்பிவிட்டான். அவன் தன் தகப்பன் முகத்தை ஒருதடவை பார்த்தான். தூங்குவதுபோல் கிடக்கிறான் இசக்கிமுத்து. சுடலைமுத்து வாழ வேண்டும் என்று ஆசைப்படும் ஒருவர் இன்று வரையிலும் இருந்தார். அவன் பயப்பட ஒருவர் இருந்தார். இனி, 'அப்பா' என்று அழைக்க அவனுக்கு யாருமில்லை. அவனை 'மவனே' என்றழைக்கவும் எவரும் இல்லை.

எல்லோருமாகச் சேர்ந்து சடலத்தை வெளியே கொண்டு வந்து குளிப்பாட்டினார்கள். திரும்பிக் குடிசைக்குள் கொண்டு வந்தபோது கிழவன் சிரிப்பது போலத் தோன்றிற்று. சுடலை முத்துவுக்குத் தாங்க முடியவில்லை.

பிணத்தை மூடுவதற்குத் துணி கிடையாது. பிச்சாண்டியும், சுப்புவும் போய்க் கொண்டுவந்தார்கள். இதற்குள் வள்ளிநாயகமும் சிவனாண்டியும் மண்வெட்டி சகிதம் 'டிப்போ'வுக்குப் போனார்கள். அப்போதிலிருந்து 'டிப்போ' நாய்கள் கூட்டமாகக் குரைக்கத் தொடங்கின.

இசக்கிமுத்துவின் உரிமையான ஆறடி பூமியை அவனுக்குக் வழங்க எல்லோரும் அவனைத் தூக்கிக்கொண்டு சென்றார்கள். இன்ன இடத்தில் புதைப்பது என்பது திட்டமிடப்பட்டது. சவத்தைக் குழியில் தள்ளிவிட்டு, சுடலைமுத்து மூன்று கைமண் அள்ளிப்

போட்டான். 'அப்பா' என்ற குரல் அவன் நெஞ்சை உடைத்துக்கொண்டு பீறிட்டது.

குழியை மூடிவிட்டு எல்லோரும் சென்றபிறகு, நடந்தது என்ன என்று தெரிந்துகொள்ள நாய்கள் அந்த இடத்தில் சூழ்ந்தன.

சந்து ஓட்டல் மானேஜரிடம் அங்கு தங்குபவர்கள் குறை கூறினார்கள். தோட்டி வந்துவிட்டுப் போய்விட்டான். ஆனால் கக்கூசில் நுழைய முடியவில்லை. ரொம்பவும் அசிங்கமாக இருக்கிறது. முன் தினம் சாயங்காலம் அவன் வந்ததாக வேலையாளொருவன் சொன்னான்.

ஜட்ஜ் வீட்டிலும் குழப்பம்தான். அங்கும், தோட்டியின் வரவுக்குப் பிறகுகூட கக்கூசு அசிங்கமாக இருக்கிறது. இப்படிப் பல வீடுகளிலிருந்தும் புகார் கிளம்பிற்று. அன்றும் தோட்டியின் பேச்சு அடிபட்டது.

நடு மத்தியானம். பீப்பாய் வண்டியைத் தள்ளிக்கொண்டு சுடலைமுத்து மலக்கிடங்குக்குப் போகிறான். பலர் மூக்கைப் பொத்திக்கொண்டு அப்பால் விலகிப் போவதை அவன் கவனித்தான். அது துர்நாற்றம் வீசும் பொருள்தான். அவனுடைய அப்பனுக்கு மூக்கைச் சூழ்ந்துள்ள சதை, நாசித்துவாரத்தை அடைத்து விடுவது போல் சுருங்கி, கோணிப்போயிருந்தது. அதோடு மேலுதடும், மேல் நோக்கி வளைந்திருந்தது. ஏன் அப்படியாயிற்று? ஒரு சமயம், முதன் முதலாவதாக வாளியும், மண்வெட்டியும் ஏந்தியபடி கக்கூசினுள் நுழைந்தபோது முகம் வலித்துப்போயிருக்கலாம். அவன் அப்பன் தோட்டியாகாமலே இருந்திருக்க முடியும். ஆனால், மறு தலைமுறை அவனைத் தோட்டியாக்கிவிட்டது. இனிமேல், தனது முகமும் தன்னையறியாமல் இப்படி வக்கிரமாக இழுத்துக் கொண்டுவிடலாம்.

மலக்கிடங்கில் அப்போது கூட்டமாக இருந்தது. வண்டிகள் வந்து சாய்ந்தவாறிருந்தன. சுடலைமுத்துவும் வாசலைத் தாண்டி உள்ளே நுழைந்தான். அவன் தள்ளாடித் தடுமாறிப்போய்விட்டான். முன்தினம் அவன் பச்சைத் தண்ணீர் பல்லில் ஊற்றவில்லை; உறங்கவுமில்லை. அதுமட்டுமல்ல, முன்தினம்தான் அவன் வாழ்வில் முக்கியமானதொரு சம்பவம் நிகழ்ந்திருக்கிறது. அவன் தளர்ச்சியுற்றிருப்பதைக் கவனித்த பிச்சாண்டி, அவன் அருகில் சென்று வண்டியைத் தள்ளிப் பாத்தியின் பக்கத்தில் கொண்டுவிட்டான். பீப்பாயின் மூடியை எடுத்துப் பாத்தியில் கவிழ்த்தியபடி அவன் கேட்டான்:

"என்னப்பா, இண்ணைக்கி இவ்வளவு கொறவு? எல்லா இடத்துக்கும் போவல்லியா?"

"எல்லா எடத்துக்கும் போனேன்."

பிச்சாண்டிக்கு ஒரு ஹாஸ்யம் உதித்தது. தோட்டியின் ஹாஸ்யம்.

"நேத்து எல்லாத்துக்கும் தீனி கொறவா இருந்திருக்கும்."

கேட்டுக்கொண்டிருந்த சுப்பு சிரித்தான். அவன் குறை அதுவல்ல. அவனுக்கு இன்று ஒரு வண்டியினுள் அடங்குவதாக இல்லை. துரைமார்கள் வீட்டில் வேலை சுலபம் என்றான் ஔ சேப்பு. அனுபவமுள்ள தோட்டிகள், ஜாதியை வைத்துக் கக்கூசைப் பிரித்தார்கள். பலவித விமர்சனம் செய்தார்கள். சுடலைமுத்துவுக்கு, அவனது இரண்டு நாள் அனுபவத்தில், சொல்லுவதற்கு நிறையச் செய்தி இருந்தது. மிகவும் சோர்ந்திருந்தபோதிலும் அவன் சொன்னான்:

"கக்கூசெல்லாம் அம்பாரமாகக் கெடக்குது. முடிஞ்ச மட்டும் நான் எடுத்தேன். ஒவ்வொருத்தனையும் பார்க்கணும்; தடிச்சு, கொளுத்து - எல்லாரும் கரையான் மாதிரி திங்கிறாங்க."

பிச்சாண்டி சுடலைமுத்துவின் வண்டியைச் சுத்தம் செய்து கொண்டிருந்தான். சுடலைமுத்து தொடர்ந்து கூறினான் :

"இதை எல்லாம் தன்னைப் போல மனிசங்கதான் சுத்தம் செய்யணுமிங்கிற நினைப்பு இல்லே போலிருக்கு! கக்கூசிலே நொளைஞ்சிட்டா ஒராயடியா எல்லா இடத்தையும் அசிங்கப்படுத்துவாங்க. அப்புறம் தோட்டி மேலே பளியப் போடுவாங்க!"

வடிவேலு கேட்டான் :

"மனிசன் சுத்தம் செய்யணும்கிற நெனப்போடு திங்க வேண்டாமா?"

சிவனாண்டியின் பதில் இது :

"திங்கட்டுமே, அளவில்லாமல் தின்னுப்போட்டு, கக்கூசை அசிங்கமாக்கிப் போட்டு, தோட்டி மேலே பளி போடுறாங்க.

அதெத்தான் சொல்லுதேன்."

பழனி சுயசிந்தனையில் பிறந்த அபிப்பிராயம் ஒன்றைச் சொன்னான்:

"திங்கத்தான் வேணும். நல்ல கக்கூசு வேணுங்கிற எண்ணமில்லே. அதுதான் தொல்லெ."

வேறொரு தோட்டி தனது பத்து வருட கால அனுபவத்தைக் கொண்டு பேசினான் :

"என் வார்டிலே நூத்துக்கு எளுபத்தஞ்சுக்கு அசீர்ணம்."

பழனி சொன்னான் :

"பணக்காரன், வயிறு தெரியாமே திம்பான். வேலை வெட்டி செய்யமாட்டான். சீரணமாகாது. ஏழைங்க கண்டதையும் கெடச்சதையும் திம்பானுங்க. அவங்களுக்கும் சீரணமாகாது."

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த சுடலைமுத்து சொன்னான் :

"நாமும் மனிசப் பொறப்புதான் என்கிற நெனப்பு அவங்களுக்கு ஏன் இல்லே?"

பிச்சாண்டி கூறினான் :

"முதலில் நாமெல்லாம் ஆம்புளைங்க என்கிற நெனப்பே இல்லையே."

மற்றொருவன் சொன்னான் :

"அது, நம்ம பொம்புளைங்களுக்கு இருக்கே."

எல்லோரும் சிரித்தார்கள்.

"பெரிய இடத்துப் பொம்பிளைங்களுக்கு வெக்கமே இல்லை" என்றான் பிச்சாண்டி.

"அது நம்மப் பார்க்கும்போது மட்டும்தான் இல்லேப்பா."

சுடலைமுத்துவுக்கு இதன் பொருள் புரியவில்லை.

இனிமேல்தான் அவனுக்கு எல்லா விஷயங்களும் தெரியவேண்டும்.

எல்லோருடைய வேலையும் முடிவடைந்தது. வீட்டுக்குப் போனால் அவர்களுக்கு உணவு ஏதாவது கிடைக்கும். பலர், உணவை முன்பே முடித்துக்கொண்டிருக்கலாம். சுடலைமுத்துவுக்கு?

பிச்சாண்டி கேட்டான் :

"ஏ, சொடலே, அங்கே ஏதாவது இருக்குதாடா?"

அவன் பேசவில்லை.

"அப்படீண்ணா நம்ம வூட்டுக்குப் போவலாம், வா."

இருவரும் புறப்பட்டார்கள்.

அன்று சுடலைமுத்துவுக்கு, இரண்டணா நாலணாவாகக் கையில் கொஞ்சம் காசு சேர்ந்தது. அவன் கைநீட்டிக் கேட்கவில்லை; எதிர்பார்க்கவில்லை. எல்லா வீட்டுக்காரர்களும் அன்று தோட்டிக்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள்; காசு கொடுத்தார்கள்.

சுடலைமுத்துவுக்கு அன்று வேலை சற்று அதிகம்தான். இருந்தாலும் அவன் திருப்தியாக வீடு திரும்பினான்.

ஒழுங்காக வேலை பார்க்கும் தோட்டியை யாருமே கவனிக்க மாட்டார்களோ என்றுகூட அவனுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. ஆம். அவன் சந்தேகம் சரிதான். கக்கூசின் துர்நாற்றம் பங்களாவின் மேல் மாடியைத் தாக்கும்போதுதான் தோட்டியைத் தேடத் தொடங்குவார்கள். கக்கூசை அவர்களுக்கு நினைவுபடுத்த முடியுமானால், அதோடு தோட்டியின் நினைவும் அவர்களுக்கு வராமல் போகாது.

தோட்டிக்கு இப்படி ஒரு பெரிய சக்தி இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அவனுக்குத் தன் பலம் தெரியாது. ஜட்ஜ் ஐயாவுக்கு அவனிடம் இரக்கம் உண்டு. அவன் அப்பன் செத்துப் போனான் என்று தெரிந்ததும் அவர் மிகவும் வருந்தினார். நாலணாக் காசும் கொடுத்தார். முதலில் வாயில் வந்தபடி வைதாலும், பிறகு அவனுக்காகப் பரிதாபப்பட்டார் ரெட்டியார். தேவலை, தோட்டி அவ்வளவு துச்சமானவனல்ல. அவனைக் கண்டும் பயப்படுகிறார்கள். கக்கூசு அசுத்தப்பட்டுக் கிடந்தால் பெரிய பெரிய புள்ளிகளும் வெட்கத்தை விட்டுத் தோட்டியிடம் கெஞ்சிப் பல்லிளிக்கிறார்கள்.

சுடலைமுத்து நிறைய விஷயங்கள் தெரிந்துகொண்டான். இன்னும் அவன் அறிந்துகொள்ள வேண்டியவை அனேகமிருக்கின்றன.

அவன் சாதிக்க வேண்டிய காரியங்களும் எவ்வளவோ இருந்தன.

மலக்கிடங்கில் ஆள் அரவம் இல்லாதது போலிருந்தது. எல்லோரும் வேலை முடிந்து வீடு செல்லும் நேரமாகிவிட்டதா? இல்லை. அவன் ரொம்பவும் பிந்திப்போய்விடவில்லை. ஆனால் அங்கே ஏதோ விசேஷமிருக்க வேண்டும். வாசல் பக்கம் போனபோது ஏதோ சகிக்க முடியாத அழுகல் நாற்றம் அவன் மூக்கைத் துளைத்தது.

அந்த மாமரத்தின் அடிமூட்டில் அழுகிப்போன, சிவந்த நிறப் பொருள் ஒன்று கிடக்கிறது. அவ்விடத்தில் நிலம் தாறுமாறாகக் கிளறப்பட்டு மண் விரவிக் கிடக்கிறது. மற்ற தோட்டிகள் சற்று தூரத்தில் நின்றபடி அதை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சுடலைமுத்து சாக்கடையைத் தாண்டிக் குதித்து அங்கு சென்றான்.

இசக்கிமுத்துவின் பிணத்தை நாய்கள் பிறாண்டி இழுத்து மண்ணுக்கு வெளியே தள்ளியிருந்தன. முகத்தையும், கழுத்தையும் கடித்து இழுத்திருந்தன. கண்கள் திறந்துகொண்டிருப்பது போல் தோற்றமளித்தன. அந்தக் கண்கள் சுடலைமுத்துவைக் பார்க்கின்றன. ஒரு நீல நிறத் திராவகம் பிணத்தின் கண்களிலிருந்து வடிகிறது.

பிச்சாண்டி சுடலைமுத்துவை நெருங்கி அவன் கையைப் பிடித்து இழுத்து வந்தான். பிணத்தைக் குழியினுள் புதைத்துவிட்டால் அத்துடன் துக்கமும் சிறிது புதையுண்டது போலத்தானே? ஆனால் தோட்டிக்கு அந்த நிம்மதிகூடக் கிடையாது. அதற்கும் ஒரு தடை. பிணம் அழுகிக் குளுகுளுத்திருப்பதை மீண்டும் அவன் பார்க்க வேண்டும்.

ஆனால் பிற தோட்டிகளின் கவலை அதுவல்ல. இசக்கிமுத்துவின் உடலை நாய் தின்றாலும், புழு அரித்தாலும் அவர்களுக்கு ஒன்றுதான். பிணத்தை மலக்கிடங்கில் புதைத்த சங்கதி அம்பலமாகி விட்டதே! அதற்கு அவர்கள் என்ன சமாதானம் கூற முடியும்?

சுப்பு சொன்னான் :

"நான் அப்பவே சொன்னேனே, சுடுகாட்டுக்குக் கொண்டு

போகணுமிண்ணு."

சிவனாண்டி சொன்னான் :

"குளிக்கு ஆளம் போதாதுன்னு நான் அப்பவே சொன்னேனே!"

மாதா கோவிலுக்குக் கொண்டுபோய் அடக்கம் செய்ய வேண்டுமென்று ஔசேப்பு சொல்லவில்லையா? அப்படிச் செய்திருந்தால் இந்த ஆபத்து ஏற்பட்டிருக்குமா?

சுடலைமுத்து இதற்குப் பரிகாரம் தேடியாக வேண்டும். அவன் அப்பனால்தானே எல்லோருக்கும் இந்தச் சங்கடம்.

காக்கைக் கூட்டில் கல்லெறிந்தது போல் திடீரென்று எல்லோரும் நாலாதிசையிலும் பாய்ந்தார்கள். சிலர் சுவரேறிக் குதித்து வெளியேறினார்கள். இன்னும் சிலர் செடிகள் அடர்த்தியாக வளர்ந்திருந்த இடத்தில் பதுங்கி மறைந்துகொண்டார்கள். கடைசியில் அங்கிருந்தது பிச்சாண்டியும் சுடலைமுத்துவும் மட்டும்தான். ரோட்டில் ஓவர்சீயரின் சைக்கிள் வந்து நின்றது.

சுடலைமுத்து அவரை நோக்கி நடந்தான். பிச்சாண்டியும் பின்தொடர்ந்தான்.

ஓவர்சீயர் சுடலைமுத்துவை அடிமுதல் முடிவரை விறைப்பாக முறைத்தார். பிறகு அதிகாரத்துடன் கேட்டார் :

"அங்கே என்னடா கெடக்குது?"

சுடலைமுத்து பணிவாகச் சொன்னான் :

"அப்பனின் பொணம்."

"அது எப்படி இங்கே வந்தது?"

குற்றவாளியான சுடலைமுத்து ஒன்றும் பதில் பேசவில்லை. செய்யக் கூடாததை அவன் செய்துவிட்டான். என்ன பதில் சொல்ல முடியும்?

பிச்சாண்டி சொன்னான் :

"ஆளமாத்தான் குளிவெட்டிப் பொதச்சோம்"

ஓவர்சீயர் கோபத்தில் கொதித்தார்.

"யாரெல்லாம் சேந்து செய்தீங்க?"

தன் தவறுக்கு எல்லோரையும் காட்டிக் கொடுக்க வேண்டுமா? உண்மையை எப்படி மறைப்பது? சுடலைமுத்து திணறினான்.

ஓவர்சீயர் வாய்க்கு வந்தபடி எல்லோரையும் திட்டினார். அங்கிருந்து ஓடி மறைந்தவர்களை அவர் கவனிக்காமலில்லை. அவர்களுக்கெல்லாம் சரியான சூடு போடத்தான் போகிறார். ஞாபகமிருக்கட்டும்!

ஓவர்சீயர் சைக்கிளில் ஏறிப் போய்விட்டார்.

பிச்சாண்டி குழிவெட்டிக் கொண்டிருக்க சுடலைமுத்து பாதி மண்ணில் புதைந்து கிடந்த பிண்டத்தை வெளியே எடுத்தான். மண்வெட்டியின் வெட்டுப்பட்டு, ஊதி வீங்கிப் போயிருந்த வயிறு கிழிந்து என்னென்னமோ வெளியே குதித்தது. கைப்பக்கம் தோல் உராசி உரிந்துபோயிருந்தது.

இருவரும் சேர்ந்து வெகு நேர முயற்சிக்குப்பிறகு பிணத்தை மீண்டும் மண்ணில் மறைத்தார்கள். இப்போது ஒரு புதிய பிரச்னையைத் தீர்க்க வேண்டியிருக்கிறது. சுடலைமுத்துவைச் சேர்ந்த பிற தோட்டிகளின் பிரச்னை வேறு! சுடலைமுத்துவுக்கு உதவியாகப் பிச்சாண்டி மட்டும்தான் இருக்கிறான். என்றுமே தான் துணையாக இருப்பதாகவும் கூறி அவன் ஆறுதலளித்திருந் தான். பிச்சாண்டியின் தோளில் தலையைச் சாய்த்துக்கொண்டு சுடலைமுத்து பொருமிப் பொருமி அழுதான். பிச்சாண்டிக்கும் கண்ணீர் வந்தது. அவன் சுடலைமுத்துவின் கண்களைத் துடைத்தான்.

"அளாதே தம்பி, எல்லாத்துக்கும் ஒரு வளி இல்லாமலாப் போகும்?"

"அண்ணே, உன்னைத் தவிர வேறு யாரு இருக்காங்க எனக்கு?"

"இந்த வேலையே போயிட்டாலும் நான் ஒங்கூட இருப்பேண்டா."

தோட்டிகள் எல்லோருமாகச் சேர்ந்து ஆலோசித்தார்கள். அவர்களின் பிரதிநிதிகளாகப் பிச்சாண்டியையும், பழனியையும், சுடலைமுத்துவையும் ஓவர்சீயரிடம் அனுப்புவதென்று

தீர்மானிக்கப்பட்டது.

கள்ளுக்கடை.

வீதியோரத்தில் மறைத்துக் கட்டப்பட்டிருக்கும் ஒரு கீற்றுக் கொட்டகை. பல அறைகளாகப் பகுத்திருக்கிறார்கள். ஒவ்வொரு அறையிலும் வியாபாரம் நடந்து கொண்டிருக்கிறது.

சுறுசுறுப்பாக நடந்துகொண்டிருந்த வியாபாரம் சற்று மந்தமாயிற்று. இரவு மணி பத்துக்கு மேலாகிவிட்டது. வாடிக்கையான புள்ளிகள் கலைந்து செல்லும் நேரமாகவில்லை. எல்லா அறைகளிலிருந்தும் சளசளவென்று பேச்சரவம் கேட்டுக் கொண்டிருக்கிறது.

மேற்குப் பக்கத்து அறையின் முன்பக்கம், வாசலுக்கு இடம் விட்டு, சுப்பு, ஔசேப்பு, சுந்தரம், வடிவேலு நால்வரும் ஒன்றாக உட்கார்ந்திருக்கிறார்கள். நடுவில் நான்கு காலியான புட்டிகளும், இரண்டு திறக்கப்படாத புட்டிகளும், பீங்கான் தட்டுகளும் இருக்கின்றன.

அன்று தோட்டிகளின் சம்பள நாள். எவ்வளவு கூச்சல் போட்டாலும், அதைப் பற்றிக் கடைக்காரர்களுக்கு அக்கறை இல்லை. சம்பளம் பெற்ற நாளைத் தோட்டிகள் கொண்டாடுகிறார்கள்.

சுப்பு வடிவேலுவிடம் கேட்டான் :

"ஒனக்கென்னப்பா கெடச்சுது சம்பளம்?"

"எட்டு கெடச்சுது. ஒனக்கு?"

"எனக்கு ஏழரை."

"ஏழரையா? அதென்ன?"

"யாருக்குத் தெரியும்?"

ஔசேப்புக்கு ஒன்பது ரூபாய் கிடைத்திருக்கிறது. முந்திய மாதம் அவனுக்கு ஆறரைதான் கிடைத்தது. இப்போது சுந்தரத்துக்கு ஒரு சந்தேகம். அவன் கேட்டான் :

"நமக்குச் சம்பளம்தான் எவ்வளவு?"

ஒரு புட்டியிலிருந்து பீங்கானில் கள்ளுத் தண்ணியை ஊற்றியபடி சுப்பு சொன்னான் :

"அது ஓவர்சீயருக்குத்தான் தெரியும்."

ஔசேப்பு சொன்னான் : "ஆனா இந்த மாசம் நமக்கெல்லாம் சரியான 'வெட்டு' இருக்கும், எசக்கிமுத்து மாமனை அடக்கம் செஞ்ச லச்சணத்துக்கு."

சுந்தரம் சொன்னான் : "ஆமா, அது நெசம்தான்."

பக்கத்து அறையின் பின்பக்கத்தில் பழனியின் குழாமும் கூடியிருந்தது. சுப்பு கூப்பிட்டுக் கேட்டான் :

"பளனி அண்ணே, இந்த மாசம் ஒங்களுக்குச் சம்பள வெட்டு உண்டுமா?"

பழனியின் பதில் : "உண்டும், உண்டும்."

பழனியின் தோழர்கள் எழுந்து சுப்புவின் கோஷ்டியில் கலந்து கொண்டார்கள். பிரஸ்தாப விஷயம் எல்லோருக்கும் பொதுவானதுதானே! பக்கத்துக் கடைகளில் இருந்தவர்களும் எழுந்து அங்கு வந்தார்கள். ஆக மொத்தம் பத்துப் பனிரெண்டு தோட்டிகள். இசக்கிமுத்துவை அடக்கம் செய்வதில் ஏற்பட்ட குளறுபடிதான் அம்மாதச் சம்பள வெட்டுக்குக் காரணம் என்பதை எல்லோரும் உணர்ந்துகொண்டார்கள்.

ஔசேப்பு கேட்டான் :

"நாம் எதுக்கு விருதால நட்டப்படணும்?"

"வேறு என்ன செய்ய முடியும்?" என்றான் பழனி.

"நட்டத்தை சொடலேதான் தரணும்."

பழனி சிரித்தான். சுடலைமுத்து எங்கிருந்து கொடுப்பான்? அவன் வேலையில் நுழைந்து நான்கு நாட்கள்தானே ஆகியிருக்கிறது. அது மட்டுமா? இரண்டு மாதத்திற்கு அவனுக்குச் சம்பளமும் கிடையாது. சுப்புவுக்கு ஆத்திரம் பொங்கிற்று.

"சுடுகாட்டுக்குக் கொண்டு போகணுமின்னு நான்தான் அண்ணைக்குச் சொன்னேன். எங்காசு என் கையிலே கெடச்சாகணும்."

பழனி கேட்டான் : "யாரு தரணும்?"

"யாராவது தரணும்."

சற்றுத் தூரத்தில் நின்று பீடி குடித்துக்கொண்டிருந்த பிச்சாண்டி கூறினான்:

"அப்படீண்ணா, வாங்கிப்புட்டுத்தான் மறுகாரியம் பாக்கப் போறே போலிருக்கு!"

"வாங்குவேன். வாங்கலேண்ணா எம் பேரு சுப்பு இல்லே."

"ஒங்கப்பன் வாங்கமாட்டான்."

"சீ, எங்கப்பனெ நீ பேசுறியா?"

"பேசினா என்னடா செஞ்சிருவே?"

சுப்பு பிச்சாண்டியை நோக்கிப் பாய்ந்தான். பழனி பிச்சாண்டியையும், அவுதா சாயபு சுப்புவையும் பிடித்துக்கொண்டார்கள். இரண்டு பேரும் மாறிமாறி ஏசிக்கொண்டார்கள். யார், யாரை ஏசுகிறார் என்பது எவருக்குமே புரியவில்லை. கடைச் சொந்தக்காரர்களும் வெளியே வந்தார்கள்.

இச்சமயம் எங்கிருந்தோ நான்கு போலீஸ்காரர்கள் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

ஒரே நிசப்தம்.

போலீஸார்கள் பிச்சாண்டி, பழனி, சுப்பு மூவருக்கும் தலைக்கு ஒரு உதை கொடுத்தார்கள். மூவரும் விறைத்துப்போய்க் கைகூப்பி நின்றார்கள்.

இப்படியாக சம்பளத்தில் எஞ்சியதும் கரைந்தது மட்டுமல்ல, மறு மாதச் சம்பளத்தில் ஒரு பங்கைக் கடனுக்குத் தொலைக்க வேண்டிய நிலையும் வந்துவிட்டது. எல்லோரும் கள்ளுக் கடையை விட்டு வெளியேறினார்கள். வெகு தூரத்துக்குப் பேச்சு மூச்சில்லை.

அந்த அமைதியைச் சுந்தரம் உடைத்தான் :

"போன மாசத்துல வடிவேலு அண்ணனுக்குத்தானே உதை கெடச்சுது; இல்லையா?"

"ஆமா" என்று எவனோ அதை ஆமோதித்தான்.

"இந்தப் போலீஸ்காரங்க சம்பளம் வாங்கும் நாள் பார்த்துக் கண்ணி வெச்சிக்கிட்டு வாராங்கப்பா. எல்லா மாசமும் இப்படித்தான். எங்கிருந்துதான் வந்து குதிக்கிறாங்களோ?"

எல்லோரும் அந்த உண்மையை ஒப்புக்கொண்டார்கள். தோட்டித் தொழிலுக்கு வந்ததிலிருந்தே பழனிக்கு இந்த அனுபவமுண்டு.

ஔசேப்பு சொன்னான் : "அவங்க நாள் எண்ணிக்கிட்டு இருப்பாங்கடா."

ஆனால் இதற்குப் பரிகாரம் என்ன? ஒன்றும் இல்லை. போலீஸ்காரர்களின் வீடுகளில் கக்கூசு வேலை செய்யாதிருந்து விடலாமா? உதைதான் கிடைக்கும். பிச்சாண்டி ஒன்று சொன்னான். அது ஒரு பிரசங்கமாகவே அமைந்துவிட்டது.

தோட்டிகளெல்லாம் ஒன்று சேர வேண்டும். அப்போது தோட்டிகளுக்கெல்லாம் என்ன சம்பளம் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். அந்தத் தொகையை எண்ணிக் கணக்கிட்டு வாங்கலாம். போலீஸ்காரன் எவனுக்கும் பயப்பட வேண்டியதில்லை.

இந்தப் பிரசங்கம், ஒவ்வொரு மாதமும் சம்பளத் தேதிக்கு முன் பிச்சாண்டி செய்வதுதான். அதையேதான் அன்றும் சொல்கிறான். எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். தோட்டிகளும் குப்பை கூட்டும் தொழிலாளர்களும் ஒன்றுபட வேண்டுமென்று தீர்மானிக்கிறார்கள். அத்துடன் பிச்சாண்டிக்கு மற்றுமொரு விஷயமும் சொல்ல வேண்டியிருக்கிறது. அதையும் அவன் ஒவ்வொரு முறையும் சொல்வதுண்டு.

"நாம் ஒண்ணாகச் சேரணுமின்னு இப்போ நான் சொன்னேன். நாளைக்கு இந்த விசயம் ஓவர்சீயருக்குத் தெரியவரும். அவரு தலைக்கு ரெண்டு உதையும் கொடுத்து, அரை ரூவா 'பைனும்' போடுவாரு. உம், ஒவ்வொரு மாசமும் இதைச் சொல்லிச் சொல்லி எனக்குக் கிடைக்கிறதும் இதுதான்."

# 2

நிஜாரும் பனியனும் அணிந்துகொண்டு, கைக்குட்டை ஒன்றைக் கோணத்துக்குக் கோணமாகத் தலையில் சுற்றிக்கொண்டு, வாளியும் மண்வெட்டியுமாகச் சந்தனத் தெரு வார்டில் வீடுகளுக்குப் பின்புறத்திலும், சந்து பொந்துகளிலும் ஒரு தோட்டியைப் பார்க்கலாம். அவன் பொடி மீசை வைத்திருக்கிறான். அவன் உடம்பு சற்றுப் பருத்திருக்கிறது. அவனது பனியனும் நிஜாரும் துவைத்துக் கட்டியவை. முதல் பார்வையிலேயே அவன் சாதாரணத் தோட்டியல்ல என்று சொல்லிவிட முடியும். தொழிலுக்குரிய உபகரணங்களை ஏந்திச் சென்றிராவிடில், அவன் தோட்டிதானா என்றுகூடச் சந்தேகம் தட்டிவிடும்.

அவன் ஏதோ முக்கியமான விஷயங்களைத்தான் சிந்தித்துக் கொண்டிருக்கிறான்; சிந்திக்க வேண்டிய விஷயங்களிருக்கின்றன. அவன் பல்வேறு விஷயங்களைப் பார்த்துத் தெரிந்து மனசில் பதிய வைத்துக்கொண்டிருக்கிறான். முன் தினம், குடி போதையில் நினைவில்லாமல் வீதியோரம் எங்காவது படுத்துறங்கிவிட்டு, காலையில் வேலைக்கு வரும் தோட்டிகளில் ஒருவனல்ல அவன். நேற்று அவன் சுத்தமாகக் குளித்தான்; உண்டான்; உறங்கினான். இன்றும் குளிப்பான்; உண்பான்; உறங்குவான்.

இன்னும் கூர்ந்து கவனித்தால், அவன் கண்களில் தோட்டியின் கோழைத்தனமும், தன்னையே அற்பமாக எண்ணிக்கொள்ளும் தாழ்ந்த மனப்போக்கும் இல்லாமலிருப்பதையும் தெரிந்து கொள்ளலாம். அவன் சில தீர்மானங்களுக்கு வந்துவிட்டான். அவசியமில்லாமல் அவன் யாருக்கும் தலைகுனிய மாட்டான்.

இப்படிப்பட்ட ஒரு தோட்டியை நீங்கள் விரும்பமாட்டீர்கள். தினந்தோறும் குளிக்கும் தோட்டியை, முகச் சவரம் பண்ணிக்கொள்ளும் தோட்டியை, துவைத்துக் கட்டிய அல்லது சலவை செய்த வேட்டியோ, நிஜாரோ அணிந்துகொள்ளும் தோட்டியை நிச்சயம் நீங்கள் விரும்பமாட்டீர்கள். 'அடேயப்பா அவன் பெரிய இடத்து மாப்பிள்ளை மாதிரி அல்லவா போகிறான்!' என்று உங்கள் வீட்டுப் பெண்கள் சொல்லுவார்கள். அவன் பார்வையில்

கக்கூசுக்குப் போவதோ, கக்கூசிலிருந்து இறங்கி வருவதோ ஒரு பெண்ணுக்குச் சாத்தியமான காரியமல்ல. உங்கள் வீட்டுத் தோட்டி குடிகாரனாக இருக்க வேண்டும்; வாழ்க்கையில் அவனுக்கு எந்த விதமான திட்டமோ, ஒழுங்கோ இருக்கக்கூடாது. என்றும் அவன் வழுக்கி விழுபவனாகவே இருக்க வேண்டும்; தவறு புரிபவனாகவே இருக்க வேண்டும்.

அந்தத் தோட்டி சுடலைமுத்துதான். அவன் ஒழுங்காகத் தன் வேலையைச் செய்வான். எல்லோருக்கும் அவன் மீது சந்தேகம்தான். ஆனால் எல்லா வீட்டுக்காரர்களிடமும் அவன் கௌரவமாக நடந்துகொள்வான். பெரிய மனிதர்களைப் பார்த்து அவன் பல விஷயங்கள் தெரிந்துகொண்டிருக்கிறான். இவ்வாறு மிகவும் குறுகிய காலத்தில் அவன் வளர்ச்சியடைந்துவிட்டான். வாழ்க்கையில் இன்னும் பல விஷயங்கள் அவன் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

ஆனால் அவனுக்குத் தொல்லை தராத, அவனை அவமானப்படுத்தாத வீட்டுக்காரர்கள் அந்த வார்டில் இல்லை. ஒருமுறை கனம் நீதிபதி அவர்களுக்கு அவன் ஒரு பிரச்சினையை உருவாக்கி விட்டான். அவர் வீட்டுக் கூரையில்லாத கக்கூசின் வெளிப்பக்கம் ஒரு துவாரம். சந்தில் நின்றுகொண்டே அந்தக் கக்கூசைச் சுத்தம் செய்யலாம். அந்தத் துவாரத்திலிருந்த கதவு இத்துப் போய்விட்டது. புதிய கதவு போடும்படி ஜட்ஜிடம் சொல்லியும் அவர் அதை மறந்துவிட்டார். ஒருநாள் மழை கொட்டிற்று. மறுநாள் சுடலைமுத்துவுக்கு அந்தக் கக்கூசில் வேலை இல்லை. சந்தை சுத்தப்படுத்துவது அவனுடைய வேலையல்ல. யாரோ ஒருவரைத் தூண்டிவிட்டுப் புகார் கொடுக்கும்படி செய்தான் சுடலைமுத்து. அந்த வழக்கினால் ஏற்பட்ட அவமானம் இன்னும் ஜட்ஜ் அவர்களை விட்டு நீங்கவில்லை.

பாருங்கள்! தோட்டி சுத்தமாக இருப்பது, இருக்க எண்ணுவது, புத்திசாலியாக இருப்பது எல்லாம் எத்தனை ஆபத்தான விஷயம்! இப்படிப்பட்ட தோட்டியிருக்கும் இடத்தில் குடியிருந்தால் உங்கள் மானம் மரியாதை எல்லாம் கப்பலேறிவிடாதா?

சுடலைமுத்துவிடம் யாருக்கும் அவ்வளவாகப் பிரியமிருக்க முடியாது. ஆனாலும் அந்தக் குறிப்பிட்ட நாளில் எல்லோருமே அவனுக்காகக் காத்துநின்று பணம் கொடுத்துவிடுவார்கள். அவன் வாய் திறந்து கேட்கவேண்டியதில்லை. அந்த நாள் எல்லோருக்குமே நிச்சயம்தான்; ஞாபகம்தான்.

பணத்தைச் சேர்க்கவும் அதைப் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளவும் சுடலைமுத்து தெரிந்துகொண்டான். அவன் கையில் காசு சேர்ந்தது. மேல் வர்க்கத்தினரிடமிருந்து படித்த பாடம் இது. காசைப் பெருக்க எண்ணினான். அவன் கற்ற மற்றொரு பெரிய பாடம் இது.

இருந்தாலும் ஓவர்சீயர் அன்றும் இன்றும் மற்றவர்களுக்கு எப்படியோ, அப்படியே அவனுக்கும் பெரும் தொந்தரவாக இருந்தார். இன்னும் தன் சம்பளம் என்ன என்பது அவனுக்குத் தெரியாது. வேலைக்குரிய கூலி முழுவதும் கிடைக்கவில்லை என்பது மட்டும் திண்ணம்.

அந்தப் பொதுவான பிரச்னை தோட்டிகளில் சிலரை ஒன்றுகூடிச் சிந்திக்கச் செய்தது. பிச்சாண்டி அவனது பழைய யோசனையை மீண்டும் முன் வைத்தான்.

"எல்லாரும் ஒண்ணாச் சேரணும்."

வெகுநாட்களாகச் சுடலைமுத்து, சதா சர்வகாலமும் அதையே சிந்தித்துக்கொண்டிருந்தான்; ஒன்றுபட்டால் வாழ்வு உண்டு என்று அவனுக்கும் தோன்றிற்று. சம்பளத்தைத் தம்பிடி விடாமல் எண்ணி வாங்கலாம்; ஓவர்சீயருக்குப் பங்கு கொடுக்க வேண்டியதில்லை. வேலையும் குறைவாகச் செய்தால் போதும். எல்லாவற்றிற்கும் மேலாக அவனுக்குத் தோட்டிகள் மத்தியில் சிறிது செல்வாக்கிருந்தது; அதனால் அவனுக்குச் சில நன்மைகள் உண்டு. சுடலைமுத்துவுக்கு விரிவானதொரு வாழ்க்கைத் திட்டமிருந்தது.

சுடலைமுத்து சொன்னான் :

"கயிறு திரிக்கும் தொழிலாளிகளுக்குச் சங்கமிருக்குது. நமக்கும் ஒரு சங்கம் வேணும். அது இருந்தால்தான் முடியும்."

அதை அங்கிருந்தவர்கள் ஒப்புக்கொண்டார்கள். அதோடு ஒரு சங்கம் நிறுவுவதற்குரிய பொறுப்பையும் அவர்கள் சுடலை முத்துவிடம் ஒப்படைத்தார்கள். அவனும் அதை ஏற்றுக்கொண்டு விட்டான்.

சந்தனத் தெருவில் இம்மாதிரிச் சங்கங்கள் அமைத்துக் கொடுக்கும் ஒருவர் இருந்தார். அவர் வீட்டில் வேலை பார்ப்பதும் சுடலைமுத்து தான். ஒருநாள் அவரை அழைத்துவந்து சங்கம் நிறுவ வேண்டும். அதற்காகும் செலவுத் தொகையை வசூல் செய்ய

வேண்டும். இந்தத் தீர்மானத்தோடு அன்றைய ஆலோசனைக் கூட்டம் கலைந்தது.

அன்று முதல் சுடலைமுத்துவுக்கு இது குறித்துத்தான் சிந்தனை. சங்கம் அமைந்தால் கண்டிப்பாக அதில் அவனுக்கு முக்கியப் பங்கு ஆற்ற வேண்டியிருக்கும். சகாக்களெல்லாம் அவன் கீழே வந்துவிடுவார்கள். அப்படி வருவதாயிருந்தால், நிச்சயமாகப் பல நன்மைகளுண்டு அவனுக்கு. ஓவர்சீயர் மட்டு மென்ன, முனிசிபாலிட்டியே அவனைக் கண்டு சிறிது அஞ்சாதா? பூர்வாங்கச் செலவுக்காகும் பணத்தைக் கையிலிருந்தே போட்டுவிட் டால் என்ன என்றுகூட சுடலைமுத்து எண்ணினான்.

அந்தக் கூட்டமும் பிரசங்கமும் முடிந்தவுடன், அவர்கள் மனதில் தெளிவின்றி, பக்குவப்படாமல், அரைகுறையாகக் குமைந்து கொண்டிருந்த எண்ணங்கள் உருக்கொண்டது போலிருந்தது. உண்மையில், பல்வேறு சமயங்களில் அவர்களுக்குத் தோன்றிய கருத்துக்களைத் தான் பேச்சாளர் கூறினார். ஆனாலும், அதைக் கேட்டபோது விவரிக்க இயலாத ஒரு உணர்ச்சி பொங்கிற்று; புது உத்வேகம் பிறந்தது. வாழ்க்கையில் அவர்களும் முக்கியமான பங்கு ஆற்ற வேண்டியிருக்கிறது; அவர்களுக்கும் பொறுப்பிருக்கிறது; எல்லாவற்றிற்கும் மேல் அவர்களுக்கும் சக்தி இருக்கிறது. அதற்கு முன் ஏற்பட்டிராத தன்னம்பிக்கை உணர்ச்சி அன்று ஒவ்வொரு தோட்டிக்கும் ஏற்பட்டது. அதை அவர்களால் உணர முடிந்தது. இப்போது ஒவ்வொரு தோட்டிக்கும் அம்மாதிரி பிரசங்கத்தைப் புரிந்துகொள்ள முடியும். பட்டணமே அவர்களை அண்டி நிற்கிறது. நகர மக்களை அச்சுறுத்தவும் அவர்களால் முடியும். தோட்டிகளிடையே அன்று வர்க்க போதம் விழித்துக்கொண்டது. ஆலப்புழை நகரத் தோட்டிகள் ஒரே குரலில் உரிமைக்குரல் எழுப்பிய தினம் அது. அந்தக் குரல் எங்கும் எதிரொலித்தது. நகரப் பிரமுகர்களின் மனம் அன்று நடுங்கியிருக்கும். மகத்தானதொரு சக்தி குமுறத் தொடங்கிவிட்டது; கர்ஜனை புரியவும் ஆரம்பித்துவிட்டது. நாளையே அது . . . அது . . . செயலில் இறங்கிவிடும்

இப்படியாகத் தோட்டிகள் சங்கம் அங்கு ஸ்தாபிக்கப்பட்டது. ஒவ்வொருவராகப் படிவத்தில் கையெழுத்திட்டார்கள். பிச்சாண்டி, பழனி, சிவனாண்டி, வடிவேலு எல்லோரும் கையொப்பமிட்டுக் கொடுத்தார்கள். ஆனால் அந்தக் கூட்டத்தைக் கூட்டிய சுடலை முத்து மட்டிலும் ஒரு மூலையில் சும்மா உட்கார்ந்திருந்தான். அவனை யாரும் கவனிக்கவில்லை. ஒன்றுபடுவதற்குரிய ஆவேசம் ஒரே ஒரு தனி மனிதனுக்காகக் காத்துக்கொண்டிருக்குமா என்ன?

எல்லோரும் ஒன்று சேர்ந்தார்கள்; சங்கத்தின் அங்கத்தினர் ஆனார்கள். ஆனால் சுடலைமுத்துவின் இதயம் பதறிக்கொண்டிருந்தது. தலைவரைச் சுற்றி நின்ற கூட்டமும், களேபரமும் வெறும் பைத்தியக்காரத்தனமாகப்பட்டது அவனுக்கு.

அந்தப் பேச்சாளரின் வார்த்தைகளில் சுடலைமுத்துவுக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. அவர் சொன்னவைதாம் சங்கத்தின் விளக்கமென்றால், அதில் தனி நபர் எவனும், அவன் எண்ணுவது போல் வளர முடியாது என்று தோன்றிற்று. ஆகவே இச்சங்கத்தால் எவ்விதப் பயனும் விளையாது. பிரசங்கியின் சில வார்த்தைகள் சுடலைமுத்துவின் காதில் ஒலித்தன. தோட்டி முக்கியத்துவம் உள்ளவனாம். அது அவனுக்குப் புரியவில்லை. எப்படியாவது இந்தச் சங்கத்திலிருந்து தப்பிப் பிழைத்துக் கரையேறி விட அல்லவா அவன் முயல வேண்டும்?

தோட்டி முக்கியத்துவம் உள்ளவனென்றால் என்றுமே அவன் இதே வேலையைப் பார்த்துக்கொண்டு தோட்டியாகவே இருக்க வேண்டுமா? இச்சங்கம் என்றும் தோட்டியாக இருக்க விரும்புகிறவனுக்காக ஏற்பட்டது. அழுக்கிலேயே திளைத்துக் கிடப்பவனுக்கு அது போதும். சுடலைமுத்துவுக்கு அந்த எண்ணமில்லையே உரிமைகளைத் தட்டிப் பறிக்க வேண்டுமாம். அதன் பொருள் என்ன? அதிகாரிகளுடன் சண்டைபோட வேண்டுமென்பதுதானே? அதிகாரிகளைக் குறித்து அந்தப் பேச்சாளர் சொன்னதெல்லாம் ஒரு சமயம் நாளைக்கே வேலை போனாலும் போய்விடலாம். கடவுளைப் பற்றியும் விதியைக் குறித்தும் என்னென்னவோ கூறினார் அந்த மனிதர். வேண்டாம். இந்தச் சங்கம் ஆபத்தானது. இருந்தாலும் அதில் எல்லோரும் சேருகிறார்களே!

சுடலைமுத்துவின் இதயம் பதறிக் கொண்டிருந்தது. அடித் தொண்டையிலிருந்து தோட்டிகள் அலறிய அலறலும், அவர்களின் ஆவேசமும் அவனுக்கு வேடிக்கையாக இருந்தது. இவர்கள் மண்டையில் ஒன்றுமில்லையா? என்ன பைத்தியக்காரத்தனமிது! இந்த ஆவேசத்தில் முழுகி எல்லாம் குட்டிச்சுவராகி விடுமே.

மீண்டும் கோஷங்கள் முழங்கின. சிந்தனைக்கே எட்டாத கருத்து அந்த ஒலி வெள்ளத்தில் அகப்பட்டுக்கொண்டிருந்தது. பசியிலும் கடின உழைப்பிலும் அடிபட்டு வாடிப்போன முகங்களை அல்ல இப்போது நாம் பார்ப்பது. எத்தனை வேறுபாடு! கண்கள் தாம் எப்படி ஜொலிக்கின்றன! முகம் சிவக்கிறது. கோஷமிடும்போது வானத்தை நோக்கி முஷ்டி சுருண்டு உயரும் கரங்கள் இரும்புக் கரங்கள்தானோ என்று தோன்றுகிறது. அவர்கள்

ஒன்றாகிவிட்டார்கள். இனி-இனி-எதையும் அவர்கள் நொறுக்கித் தள்ளிவிடுவார்கள்.

சுடலைமுத்துவுக்கும் அவர்களுடன் குதித்தெழுந்து கோஷங்களிட்டு ஆர்ப்பரிக்க வேண்டுமென்று தோன்றிற்று. ஆனால் பயம். அதன் சக்தி அவனை அமுக்கிவிட்டது. அவன் திட்டங்களைத் தகர்த்தெறிந்தது. அவன் தன் சொந்த நண்பர்களைக்கண்டே பயந்தான். யாருக்கும் தெரியாமல் அங்கிருந்து அவன் நழுவினான்.

எல்லோரும் அங்கத்தினர்களாகச் சேர்ந்த பிறகு மீண்டும் கூட்டம் கூடிற்று. இனி சங்கத்தின் நிர்வாகக் குழுவைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அன்றையத் தலைவர்தான் சங்கத்தின் தலைவர். மற்றவர்களின் பெயர்கள் பிரேரிக்கப்பட்டபோது ஒருவன் சுடலைமுத்துவின் பெயரையும் சொன்னான். ஆனால் அவன் அங்கத்தினராகச் சேரவில்லையே. கூட்டத்திலும் அவன் இல்லை.

கூட்டத்தைக் கூட்டிய ஆசாமியையே காணோம். தலைவர் ஆச்சரியப்பட்டார். மற்றவர்களையும் இது திகைக்க வைத்தது.

சுடலைமுத்துவின் வாழ்க்கையில் அன்றைய இரவு முக்கியமானதாகும். அன்று கேட்ட பிரசங்கத்தின் சில வார்த்தைகள், அன்று எழுந்த சில கோஷங்கள், அவன் செவியினுள் ஒலித்தவாறிருந்தன.

இருந்தாலும் அவனைத் தொடர்ந்து வரும் அடுத்த தலைமுறை, ஒருநாளும் தோட்டிகளாக இருக்கக்கூடாது என்று அவன் திடமாக எண்ணினான். தன் குழந்தைகளை அவன் தோட்டியாக விடமாட்டான். இது நிச்சயம். இந்நிலையில் அவன் சங்கத்தில் சேர வேண்டிய நிர்ப்பந்தம் என்ன?

அவர்கள் உரிமைகளுக்காகப் போராடட்டும். அதன் பலாபலன் அவனுக்கும் கிடைக்காதா? இவ்விதமான சிந்தனைகளிலீடுபட்டுச் சுடலைமுத்து நிம்மதி தேடிக்கொண்டான். மறுதினம் தன் சகாக்களைச் சந்தித்துப் பேசும்போது அவனால் எதிர்வாதம் செய்ய முடியும். அவர்கள் அப்பாவிகள். அவனை விட்டுவிட்டுத் தனியாக நிற்க அவர்களால் முடியாது. இரண்டு மூன்று தேவைப்படுகிறபோது இல்லை என்று சொல்லாமல் கொடுப்பதற்கு அவனைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்?

மறுநாள் காலையில் சுடலைமுத்து வேலைக்குப் புறப்பட்டபோது

முதன் முதலாக ஓவர்சீயர் கேசவ பிள்ளையைத் தான் சுடலைமுத்து பார்த்தான். அவர் கர்வத்துடன் அவனை உற்று நோக்கினார்.

"என்னாச்சுடா உன் சங்கம்?"

சுடலைமுத்துவைப் பீதி பிடித்துக்கொண்டது.

"நானொண்ணும் அதிலே . . . "

அவன் சொல்ல நினைத்த வார்த்தைகள் குழறிப்போய் விட்டன.

"சரிதான், சேர்மன் உன்னை விசாரித்தார். ஒனக்கு வேலை போட்டுத் தந்ததே தப்பாப் போச்சு. நீ வம்பு புடிச்சவன். எனக்கு முன்னாலே தெரியும். என்னுடைய முட்டாள்தனம்தான் அது."

"அது நான் . . . அதிலே இல்லே. நான் . . . "

நீண்ட நேரம் பேசினால்தான், தான் நிரபராதி என்பதைச் சுடலைமுத்துவால் நிரூபிக்க முடியும். வரிசையாகவும், கச்சிதமாகவும் நாவிலிருந்து வார்த்தைகள் எழவில்லை. இப்படியொரு சோதனையை அவன் எதிர்பார்த்தவனல்ல. எனவே சொல்ல வேண்டியவற்றை முதலிலேயே பாடம் பண்ணிவைக்கவுமில்லை. ஓவர்சீயர் பொறுமை இழந்தார். சீறி விழுந்தார்.

வேலை போய்விடுமோ என்றுகூட சுடலைமுத்து அஞ்சினான். பெரிய சங்கடமாய்ப் போய்விட்டது. தன் பயித்தியக்காரத் தனத்தை எண்ணி அவன் வருந்தினான். தோட்டிகள் ஒரு சங்கம் ஆரம்பிக்கிறதென்றால் அதில் இத்தனை தொல்லைகள் ஏற்படுமென்று அவன் எதிர்பார்க்கவில்லை. நகரசபைத் தலைவரைப் பார்க்கிறபோது என்ன பதில் சொல்லுவது?

அன்றைய வேலையைச் செய்துகொண்டிருந்தபோது சுடலை முத்துவுக்கு அதே கவலைதான். எப்படி மன்னிப்புக் கோர வேண்டும், என்னென்ன பேச வேண்டும் என்றுகூட அவன் தீர்மானித்துக் கொண்டான். மனதில் ஒத்திகையும் பார்த்துவைத்தான்.

சாயங்காலம் சுடலைமுத்து ஓவர்சீயரை அவர் வீட்டில் போய்ப் பார்த்தான். காப்பாற்ற வேண்டுமென்று அவர் காலில் விழுந்து மன்றாடினான். ஆனால் அவர் கோபம் அடங்குவதாயில்லை. அவனை ஒழித்துக்கட்டக் கங்கணம் கட்டிக்கொண்டது போல் பேசினார். ஏற்கனவே தீர்மானித்தாகிவிட்டது என்று பயமுறுத்தினார்.

நகரசபைத் தலைவர் அப்படித் தீர்மானித்துவிட்டதாகக் கூறினார்.

சுடலைமுத்து திணறினான். அவர் காலடியில் ஒரு காகிதப் பொட்டலத்தை வைத்தான். ஆனாலும் சரி, கவனிக்கிறேன் என்று ஓவர்சீயர் பொறுப்பேற்றுக்கொள்ளமாட்டேன் என்கிறார். அது ஏற்றுக்கொள்ள முடியாத காரியமாக இருக்கிறதாம். நகரசபைத் தலைவர் ஒரே கோபமாக இருக்கிறாராம். கடைசியில், தலைவரிடம் கூறி எப்படியாவது சரிபண்ணிவிடுகிறேன் என்று ஓவர்சீயர் ஒப்புக்கொண்டார்.

நகரசபைத் தலைவர் தன் வீட்டுக் காரியாலய அறையில் உட்கார்ந்திருந்தார். வீட்டு முற்றத்து மூலையில் சுடலைமுத்து போய் நின்றான். ஓவர்சீயர் வீட்டினுள் நுழைந்தார். தலைவரும் ஓவர்சீயரும் பேசிக்கொள்வது சன்னல் வழி சுடலைமுத்துவுக்குத் தெரிந்தது. ஆவலினால் துடிதுடிக்கும் நிமிஷங்கள். அவன் வயிற்றில் தீ எரிந்து கொண்டிருந்தது. உடம்பில் சூடேறிவிட்டது. அவன் உட்கார்ந்தான்; எழுந்தான்; நடந்தான். அவர்களின் அங்க சேஷ்டைகளைக் கவனித்தான். நம்பிக்கைக்கு இடமுண்டா? அங்கு அவன் விதி நிர்ணயிக்கப்பட்டு கொண்டிருக்கிறது.

கடைசியில் தலைவர் வெளியே வந்தார். தன் நெஞ்சுத் துடிப்பைச் சுடலைமுத்து கேட்டான். ஒவ்வொரு வினாடியும் தாங்க முடியாத பாரமாக அவனை அழுத்திற்று. 'உன்னை வேலையிலிருந்து விலக்கி விடுகிறேன்' என்று சொல்லத்தான் அவர் வருகிறாரா?

பின்னால் வரும் கேசவ பிள்ளையின் முகத்திலிருந்து ஒரு குறிப்பும் தெரிந்துகொள்ள முடியவில்லை. நகரசபைத் தலைவரின் முகம் கோபத்தில் சிவந்திருக்கிறது. அவர் கேசவ பிள்ளையிடம் கேட்டார்.

"கேசவ பிள்ளை, இவன்தானா அந்த ஆள்?"

"ஆமாம்."

"ம் திமிர்பிடிச்சவன் போலிருக்கே?"

"ஆமாம். ஆனால் அப்பாவி."

தலைவர் சுடலைமுத்துவை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்தார்.

"நீ தானேடா சங்கம் ஆரம்பிச்சவன்?"

சுடலைமுத்துவின் நா அசைய மறுத்தது. அவன் மனப்பாடம் செய்து வைத்திருந்தவை எல்லாம் மறந்துபோய்விட்டன. தள்ளாடித் தரையில் சாய்ந்துவிடுவோமோ என்று தோன்றிற்று அவனுக்கு.

"திமிர்பிடிச்சவங்களை வேலைக்கு வைச்சிருக்கணுமா கேசவ பிள்ளை? இவன் அதிகப்பிரசங்கி என்று சந்தனத் தெருவிலிருந்து புகார் வந்திருக்கு. ஐட்ஜும், ரெட்டியார்களும்கூட என்னிடம் சொன்னார்கள். டேய், உன் சங்கம் என்னாச்சுடா?"

"அதிலே, நான் சேரலே."

அவனையறியாமல் அந்த வார்த்தை சுடலைமுத்துவின் உதட்டிலிருந்து வெடித்துவிட்டது. அப்பாடா, என்ன ஆசுவாசம்!

"சேரவில்லையா? சேராமல் . . .? அச்சடித்த நோட்டீசில் கன்வீனர் என்று போட்டிருப்பது உன் பெயர்தானே?"

கேசவ பிள்ளை சொன்னான் :

"ஆமாம். ஆனா கூட்டம் கூடினதும் இவன் வெளியே வந்துட்டான். இதை மற்ற தோட்டிகள் சொன்னார்கள்."

தலைவர் சுடலைமுத்துவிடம் கேட்டார்.

"அப்படித்தானாடா"?

மனத்திருப்தியோடு சுடலைமுத்து பதிலுரைத்தான்:

"ஆமா."

இனிமேல் சுடலைமுத்து பேசலாம். தலைவர் தொடர்ந்து கேட்டார்:

"நீ ஏன் வெளியேறினாய்?"

"அவுங்க சொல்லுது ஒண்ணும் சரிண்ணு படல்லே."

"அவர்கள் என்ன சொன்னார்கள்?"

சுடலைமுத்து சற்று நேரம் யோசித்துவிட்டுச் சொன்னான்:

"எசமானங்களெ ஏசினாங்க. சண்டை போட்டுக் கூலி

வாங்கணுமின்னு சொன்னாங்க. எசமானங்களெல்லாம் திருடங்கன்னும் தடியங்களுன்னும் பேசினாங்க. அவுங்க சொன்னதெல்லாம் திரும்பச் சொல்லவே எனக்கு வாய் கூசுது. கடவுளெக்கூட திருட்டுப் பயலின்னு ஏசினாங்க. அப்பொ நான் வெளியே வந்துட்டேனுங்க. என்னாலே அதையெல்லாம் கேட்டுகிட்டு இருக்க முடியல்லே."

"பாருங்களேன், இந்தப் பசங்க ஏழைகளைத் தப்பான வழியில் இழுத்துக்கொண்டு போவதை!"

சுடலைமுத்துவுக்குத் தைரியம் வந்துவிட்டது. அவன் தொடர்ந்தான் :

"எசமானங்களெ எதிர்க்க வேணும், எதையெல்லாமோ அளிச்சுப் போடணும், அப்படீ இப்படீன்னாங்க. பொறவு, எல்லாத்தையும் அளிப்போமிண்ணு கூச்சல் போடச் சொன்னாரு. எல்லாரையும் சொல்லவச்சாரு. கையையும் சுருட்டிக்கிட்டுக் குத்து விடறாப் போல எல்லாரும் அலறினாங்க. ஆனா நான் ஒண்ணுமே சொல்லலீங்க."

தலைவர் கேட்டார். "அதெல்லாம்தானே அந்த நோட்டீசிலும் போட்டிருக்கிறது. பின் ஏன் அதில் கையெழுத்துப் போட்டாய்?"

நிரபராதி போல் அபிநயித்துக்கொண்டு தலைவருக்கு நம்பிக்கை ஏற்படும்படி சுடலைமுத்து கூறினான் :

"ஆசாரித் தொழிலாளிகளின் தலைவரு கையெழுத்துப் போடச் சொன்னாரு; நானும் போட்டுட்டேன்."

சிறிது நேரத்திற்கு பின் தலைவர் கேட்டார்:

"கூட்டத்திற்கு யார் யார் போயிருந்தீர்கள்?"

கேசவ பிள்ளைதான் அதற்குப் பதிலுரைத்தார்:

"எல்லோரும் கூடினார்கள்."

"முக்கியமானவர்கள் யாரெல்லாம்?"

வடிவேலு, சிவனாண்டி இப்படிச் சிலருடைய பெயர்களைச் சுடலைமுத்து அடுக்கினான்.

கேசவ பிள்ளைக்கு இன்னும் சில விஷயங்களைச் சொல்ல வேண்டியிருந்தது :

"சுடலைமுத்து மனசு வச்சா இந்தச் சங்கத்தை உடைச்சுடலாம்."

தலைவர் கேட்டார் :

"அதெப்படி? உடைக்க முடியுமாடா?"

கேசவ பிள்ளை சொன்னார் :

"எல்லோரும் சுடலைமுத்துவுக்குக் கடன்பட்டிருக்கிறார்கள். இவன், தேவைக்கு ஒண்ணு ரெண்டு கைமாத்துக் கொடுப்பான். ஆக இவன் சொன்னா எல்லோரும் பின்வாங்கிவிடுவார்கள். இவன் பேரை வைத்துத்தான் கூட்டமே நடந்தது."

"அப்போ இவன் கைவசம் பணம் உண்டு போலிருக்கிறது!"

சுடலைமுத்து தன்னிடம் சொற்பத் தொகை இருப்பதைப் பணிவாக ஒப்புக்கொண்டான். கேசவபிள்ளை தொடர்ந்தார்:

"இவனுக்குப் பணத்தை சேர்த்துவைத்துக்கொள்ளத் தெரியும். ஆசாமி கள் குடிக்கமாட்டான். ஒரு வீடும், நிலமும் வாங்கணும்னு ரொம்ப ஆசை."

"ஓகோ, அப்படித்தானாடா?"

"ஆமாங்க".

"பேஷ், தேவலையே. அப்படித்தான் முன்னுக்கு வர வேணும். கெட்ட வழிகளில் போகவே கூடாது. ஒழுங்காயிருந்தால் நானும் உதவி செய்கிறேன்."

கேசவ பிள்ளை சொன்னார் :

"கையில் இருக்கிற பணத்தை உங்களிடம் ஒப்படைத்துவிடுவான். இனிமேல் வருவதையும் கொண்டுவந்து கொடுக்கட்டும். மொத்தமாக ஒரு தொகை சேர்ந்ததும் வீடும் நிலமும் வாங்கிக் கொடுத்துவிடலாம்."

"அதற்கென்ன, அப்படியே செய்யலாமே! வேணுமானால் என் கையிலிருந்தே கூடுதலாகப் பணம் போடுகிறேன். முன்னுக்கு வர

ஆசை உள்ளவனைக் கைதூக்கிவிடுவதென்றால் எனக்கு ரொம்ப சந்தோஷம்" என்றார் தலைவர்.

கேசவ பிள்ளை சுடலைமுத்துவிடம் சொன்னார் :

"கையிலிருக்கிற காசை நாளைக்குக் கொண்டுவந்து கொடுத்துவிடு. என்ன செய்கிறாயா?"

சுடலைமுத்து ஒப்புக்கொண்டான். அவனுக்கும் அது நல்லது என்று பட்டது.

தலைவர் கேட்டார்:

"ஆனால் ஒன்று; இந்தச் சங்கத்தை நீ எப்படியாவது உடைத்துவிட வேணும்; என்ன?"

"பார்க்கறேனுங்க."

"அப்படிச் சொன்னால் போதாது. எப்பாடு பட்டாவது உடைத்து எறிந்துவிட வேணும். கேசவ பிள்ளையும் வேண்டிய ஒத்தாசைகளைச் செய்வார்."

வரவிருந்த பேராபத்து மறைந்தது மின்றித் தான் முன்னுக்கு வருவதற்கும் ஏற்ற வழி பிறந்துவிட்ட மகிழ்ச்சியுடன் சுடலைமுத்து வீடு திரும்பினான்.

கேசவ பிள்ளையும் சுடலைமுத்துவுமாக நன்கு யோசித்து ஒரு திட்டம் வகுத்தார்கள். அந்தத் திட்டத்தின்படி தனது பங்கைச் சரிவரச் செய்துவிடுவதாகச் சுடலைமுத்து ஒப்புக்கொண்டான். அப்படிச் செய்வதால் அவனுக்குக் கிடைக்கப்போகும் லாபங்களுக்கு ஓவர்சீயர் உறுதிமொழி அளித்தார். இனிமேல் அவர்களிருவரும் நண்பர்களாகவே வேலை செய்யவேண்டும்.

அடுத்த நாள் எல்லோருக்கும் முன்னதாகவே சுடலைமுத்து மலக் கிடங்குக்குச் சென்று திரும்பிவிட்டான். எனவே தன் நண்பர்கள் பார்வையில் அவன் தட்டுப்படவில்லை. அன்று அவன் வீட்டுக்கும் செல்லவில்லை. மறுநாளும் போகவில்லை. சாயங்காலம் ஓவர்சீயர் அவனிடம் கேட்டார் :

"யார் யாரைப் பார்க்க முடிந்தது? என்னவெல்லாம் நடந்தது?"

சுடலைமுத்து என்ன பதில் சொல்லுவான்? அவன் யாரையுமே பார்க்கவில்லையே. பார்த்தால் தகுந்த சமாதானம் அவர்களிடம் சொல்ல வேண்டாமா? எப்படி அவர்களிடம் முகம் கொடுத்துப் பேசுவது? அதுமட்டுமல்ல; சொல்ல வேண்டிய பதிலும் மனசில் தெளிவாக உருவாகவில்லையே. இரண்டு தினங்களாக அவனும் யோசித்துக்கொண்டுதானிருக்கிறான். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்குத் தகுந்த பதில் சொல்ல வேண்டாமா? சுடலைமுத்து தர்மசங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டான்.

இருந்தாலும் எத்தனை நாட்கள்தான் இப்படிப் பம்மாத்துப் பண்ண முடியும்? அவர்களைச் சந்திக்காமல், பேச்சுக் கொடுக்காமல் இருந்துவிட முடியுமா? சுடலைமுத்து ஓவர்சீயரிடம் சொன்னான்:

"அதுக்காக எல்லா விசயத்தையும் வளைச்சுக்கிட்டே வாறேன்."

கேசவ பிள்ளை அலுத்துக்கொண்டார்.

"அதென்னடாது? சங்கம் ஒழுங்கா உறுதியா ஆனப்புறமா வேலை செய்யப்போறே?"

"இல்லீங்க, இவங்களுக்கு மூளை கீளை ஏது? எங்கிட்டே எல்லாவனுக்கும் கோவம். ரெண்டுநாள் நெருங்கிப் பேசிட்டா கோவமெல்லாம் தணிஞ்சிரும். பின்னாடி நம்ம விசயத்தை ஆரம்பிச்சிர வேண்டியதுதாங்க."

கேசவ பிள்ளைக்கும் அது சரி என்று பட்டது.

இருந்தாலும், இரண்டு தினங்களுக்குப் பிறகுதான் தன் நண்பர்களில் சிலரைச் சுடலைமுத்துவுக்குப் பார்க்க முடிந்தது. மலக்கிடங்கில் அவர்களைச் சந்தித்தான். கிடங்கை நெருங்கி வந்து கொண்டிருந்த போதே சற்று தூரத்தில் பிச்சாண்டியும், சிவனாண்டியும், வடிவேலும் கண்ணில் தென்பட்டார்கள். அவன் நெஞ்சு 'பக் பக்'கென்று அடித்துக்கொண்டது. எப்படி அவர்களிடம் பேசுவது? தன் தைரியத்தை ஒன்று திரட்டிக்கொண்டு அவன் உள்ளே நுழைந்தான். அப்போது அவன் முகத்தைப் பார்க்க வேண்டுமே! எவ்வளவு சமாளிக்க முயன்றுங்கூட அந்த முகம் வெளுத்துத்தான் போய்விட்டது. அவனது இதயச் சலனங்களை முகத்தில் படித்துத் தெரிந்து கொள்ளலாம். அங்கு யாருமே இல்லாத பாவனையில் சுடலைமுத்து தன் வேலையில் ஈடுபடலானான். மற்றவர்கள் தங்களுக்குள் குசுகுசு வென்று பேசிக்கொண்டார்கள். பிச்சாண்டி சுடலைமுத்துவின் பக்கம் போய்க் கேட்டான் :

"எங்கடா போயிட்டா நீ? ஆளைக் கண்ணிலே காணுமே."

சுடலைமுத்துவுக்கு வாய் உலர்ந்துவிட்டது. திக்கித் திக்கிப் பதில் சொன்னான் :

"நானு - நான் இங்கதானே இருந்தேன்."

அதற்குள் சிவனாண்டியும் வடிவேலுவும் வந்தார்கள். சிவனாண்டி ஆச்சரியமுற்ற பாவனையில் கூறினான் :

"அடடே இது யாரு சுடலைமுத்துவா? ஏய், நீ பெரிய ஆளுப்பா. எங்களே சங்கத்திலே இளுத்து மாட்டிப்பிட்டு நீ நளுவிட்டியே."

வடிவேலு சொன்னான் :

"நளுவிட்டானா? எங்கேடா? ஓஹோ! அண்ணைக்கு நுழைவுக் கட்டணம் கையில் இல்லாமப் போகத்தான் அவன் சேரல்லே."

பிச்சாண்டி கேட்டான் :

"நேத்து முந்தாநாளெல்லாம் நீ வேலைக்கே போவலியோ?"

சுடலைமுத்து பதில் சொன்னான் :

"வந்தேன், எனக்கு உடம்பு சுகமில்லே."

"சங்கத்திலே நீ ஏன் சேரலே? கூட்டம் முடியு முன்னாலே போயிட்டியே."

சுடலைமுத்துவுக்குத் துணிச்சல் வந்துவிட்டது. அவனால் இப்போது நிமிர்ந்து நிற்க முடியும். அவன் சொன்னான் :

"பிச்சாண்டி அண்ணேய்! நான் பச்சையாச் சொல்லுறேன். எனக்கு ஒண்ணுமே புடிக்கல்லே. அந்தப் பிரசங்கம் என்னது அண்ணேய்? கூப்பாடும் கொம்மாளமும் - சங்கமுன்னா இதா?"

சிவனாண்டி கேட்டான் :

"அந்தப் பிரசங்கத்துக்கு என்ன குத்தம் வந்துபோச்சி?"

"அது போக்கிரித்தனம், தெரியுமா? ஏளைங்க பொளப்பிலே மண்ணள்ளிப் போடப்பாக்குறான். அவரு சொல்றாப்பலே நாம

செஞ்சோமுண்ணா, ஜெயிலிலே புடிச்சி வெச்சிருவாங்க; ஆமா, ஜெயில்லே"

வடிவேலு கேட்டான் :

"அதுக்காக நம்ம கஷ்டத்தை நாம் எடுத்துச் சொல்ல வேணாமா?"

"சொல்ல வேண்டியதுதான்; ஆனா இப்பிடியா சொல்லணும். எசமானங்களெ அடிக்கணுமுன்னு சொல்லித்தறானே, கவனிச்சியா? சங்கத்திலே சேர்ந்த ஒரு பயலுக்கும் வேலை இருக்காது. ஆமா, தலைவருக்கு விசயம் தெரிஞ்சுபோச்சு."

பிச்சாண்டி புத்திசாலித்தனமாகக் குறுக்குக் கேள்வி போட்டான் :

"அப்பபடியானா நீதானேப்பா அவரெப் பேசக் கூட்டிக்கிட்டு வந்தே. அது எதுக்காம்?"

"அவரு இப்படிப்பட்ட ஆசாமீண்ணு எனக்குத் தெரியுமா?"

சிவனாண்டிக்குக் கோபம் வந்துவிட்டது.

"அவருக்கு என்னடா கொறச்சல்? அவரு ஆம்பிளைப் பிள்ளே. அவர்கிட்டே உன் தலைவரு, ஓவர்சீயரு பாச்சா ஒண்ணும் பலிக்காது. கணக்குப் பேசி நமக்குச் சேர வேண்டிய காசை அவரு வாங்கிக் கொடுப்பாரு. ஆசாரி சாதிக்காரங்களுக்காக அவரு எத்தனை வாட்டி செயிலுக்குப் போயிருக்கார்னு தெரியுமா?"

சுடலைமுத்துவும் சிறிது கோபம் கொண்டவன் போல் நடித்தான்.

"அவரு என்னடா சொன்னாரு நாம் உருப்படணுமின்னா?"

"வேறே என்னத்தைச் சொன்னாராம்?"

"டேய், மனிசனாப் பொறந்தா புத்தி கித்தி வேணும். விசயத்தைச் சொன்னா மண்டேலே ஏறணும். நாம தோட்டி வேலையை விட்டுப் போட்டு, வெலகி நிண்ணு முன்னுக்கு வரணுமுன்னு அவரு சொன்னாரா? கிடைக்கிற காசைச் சேர்த்து வெக்கணும்; வீணா செலவளிக்கக் கூடாது; எசமானங்ககிட்டே மரியாதயா நடந்துக்கிடணும் - இப்படி இல்லே அவன்

சொல்லித்தரணும்? அப்பிடிக் சொல்லாம, அடி, ஒதை, அளிச்சுப்போடு, கிளிச்சுப் போடுண்ணா சொல்லித் தரணும்? நான் சொல்றாப்பலே அவன் பேசுவான்னுதான் முதல்லே நெனச்சேன்."

சிவனாண்டி சொன்னான் :

"ஆனா அவரு சொன்னதெல்லாம் நெசம்தான்."

"அப்படின்னா, கேட்டுக்கிட்டு இருங்க, தலைவரு ஒவ்வொருத்தனையாப் புடிச்சு வேலையை விட்டு வீட்டுக்குப் போகச் சொல்லுவாரு, சீட்டுக் கிளிப்பாரு."

பிச்சாண்டி, சிவனாண்டி, வடிவேலு மூவரும் வாயடைத்துப் போனார்கள்; சுடலைமுத்துவை எதிர்த்துப் பேசும் ஆவல் அவர்கள் நெஞ்சில் குதிபோட்டது. ஆனால், அவர்களால் அது முடியவில்லை. சுடலைமுத்துவின் அறிவிலும் புத்திசாலித்தனத்திலும் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது. அதனால் உண்டான மதிப்பும் இருந்தது. ஆனால், சங்கத் தலைவரைப் பற்றி அவன் கூறியதெல்லாம் சரியல்ல என்பது அவர்களுக்குத் தெரியும். வேலை போய்விடும் விஷயத்தை அவர்கள் சிந்தித்துப் பார்க்கவில்லை. சங்கத்தில் சேர்ந்தால் வேலை போய்விடுமா? சிவனாண்டி கேட்டான் :

"நீ தலைவரைப் பாத்தியா?"

"பாத்தேன். எல்லாவனையும் ஒளிச்சுக் கட்டிடுவேண்ணு அவர் தான் சொன்னாரு. கூட்டம் கூடின மறுநாளே தொலைய வச்சிருப்பாரு; ஆனா ஓவர்சீயர் எசமானும் நானுமா சேந்து சொன்னோம். 'ஏளைக நாங்க; சங்கத்திலே இருந்து வெலகிக்கிறோம். எங்களைக் காப்பாத்தணு'முன்னு சொன்னேன். அப்புறம்தான் அவர் கோவம் கொஞ்சம் தணிஞ்சிது."

சுடலைமுத்து தன் பீப்பாய் வண்டியைச் சுத்தம் செய்து முடித்துவிட்டான். பிறகு, மெதுவாக அங்கிருந்து நழுவினான்.

பிச்சாண்டியும் வடிவேலுவும் தீர்க்கமாகச் சிந்தனை செய்தார்கள். பிச்சாண்டி தன் கருத்தைத் தெரிவித்தான் :

"அவன் சொல்லுவது நெசமாத்தான் இருக்கும். சங்கம் ஒண்ணு வேணுமின்னு நான் சொல்லிக்கிட்டு இருந்ததுக்கே என் சம்பளத்தை வெட்டித் தந்துக்கிட்டிருந்தாங்க."

சிவனாண்டி கேட்டான் :

"அப்பிடியிண்ணா சங்கத் தலைவருக்கு இதெல்லாம் தெரியாமலா இருக்கும்?"

கடலோரத்தில் வசித்து வரும் கேளு, பப்பு ஆகிய இரண்டு தோட்டிகளைப் பற்றிப் புகார் வந்ததன் பேரில், தற்காலிகமாக அவர்களிருவரும் வேலையிலிருந்து விலக்கப்பட்டார்கள். வடி வேலுவையும் சிவனாண்டியையும் நிரந்தரமாகவே விலக்கிவிடுவார்கள் என்று பேச்சு. திருநெல்வேலியிலிருந்து புதிய தோட்டிகள் சிலரை வரவழைக்கப் போகிறார்களாம். அப்படியானால் இப்போது வேலையிலிருப்பவர்கள் எல்லோருமே வீட்டுக்கு அனுப்பப்படலாம்.

தோட்டிகளின் வீடுகளில் ஒரே பரபரப்பு. எல்லாத் துன்பங்களுக்கும் சங்கம்தான் காரணம் என்று வீட்டுப் பெண்கள் குற்றப் பத்திரிகை படித்தார்கள். சம்பளம் கிடைக்க வேண்டிய தேதி தாண்டிவிட்டது. ஆனால் யாருக்கும் ஒரு காசு கிடைக்கவில்லை. முன்பாவது சுடலைமுத்துவிடமிருந்து அநியாய வட்டியில் கடன் வாங்கலாம். இப்போது அவனிடம் கேட்டாலும் பயன் இல்லை. அவன் கொடுக்கமாட்டானாம்.

"என் கையில் கால் துட்டு கிடையாது. அப்படியே இருந்தாலும், சங்கத்திலே சேர்ந்தவங்களுக்குக் கொடுக்கக் கூடாதுன்னு தலைவர் சொல்லியிருக்காரு. இருக்கிற பணத்தை வெச்சுக் கொஞ்சம் அரிசி வாங்கிடலாமுண்ணு நெனச்சிக்கிட்டிருக்கேன்." இதுதான் சுடலை முத்துவின் பதில்.

பசியும் அதிருப்தியும் தோட்டிகளிடையே அதிகரித்தது. அத்துடன் கக்கூசுகளெல்லாம் அசிங்கமடையத் தொடங்கின. புகார் கிளம்பிற்று. வேலையிலிருந்து விலக்கப்படுவதற்கான நோட்டீசும் சிலருக்குக் கொடுக்கப்பட்டது.

சங்கத்திலிருந்து ஒரு வேண்டுகோள் விடுத்தார்கள். அவசரத் தேவைகளை அறிவித்து அறிக்கை ஒன்றும் அத்துடன் வெளிவந்தது. நகரசபைத் தலைவரைச் சந்தித்துப் பேச இரண்டு மூன்று முறை சங்கத் தலைவர் அனுமதி கோரினார். மூன்று முறை அவர் வீட்டுக்கே போனார். ஆனாலும், பார்க்க முடியவில்லை.

விண்ணப்பங்கள் சமர்ப்பித்தல், சமரசம் பேசுதல், இவைதாம்

சங்கத்துக்குச் சாத்தியமான காரியங்கள். அதற்கு மேல் நடவடிக்கை எடுக்க சங்கம் தயாராக இல்லை; அதற்கும்தான் போதிய வயது வர வேண்டாமா?

மலக்கிடங்கு, கள்ளுக்கடை, வீட்டு முன் வாசல்புறம் இங்கெல்லாம் வைத்து நடந்த ஆலோசனைகளின் பலனாகத் தோட்டிகளுக்கு ஒரு உண்மை புலனாயிற்று. ஒன்று சங்கத்திற்கு முழுக்குப் போட வேண்டும்; அல்லது எந்தத் துன்பம் வந்தாலும் அதைச் சகித்துக்கொள்ள வேண்டும். ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் நன்றாக அவர்கள் உணர்ந்துகொண்டார்கள் - வாழ்வு வேண்டுமானால் ஒன்றுபட வேண்டும் என்பதுதான் அது.

இவ்வாறு நிலைமை குளறுபடியாகிக்கொண்டிருந்தது. துன்பங்களைத் தாங்க முடியாது என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. தற்காலிகமாக வேலையிலிருந்து நீக்கப்பட்ட பப்புவை மீண்டும் வேலைக்குச் சேர்த்துக்கொண்டிருப்பதாக ஒருநாள் பேச்சு அடிபட்டது. அவனுக்குச் சம்பளமும் கிடைத்திருக்கிறதாம். மறுநாள் ஔசேப்பு ராஜிநாமா கொடுத்தான். இப்படி ஒருவர் பின் ஒருவராக, அங்கத்தினர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் சங்கத்திலிருந்து நழுவினார்கள். அதன்பின் அவர்களுக்கெல்லாம் ஒழுங்காகச் சம்பளம் கிடைத்தது. சில நாட்களுக்குப் பிறகு, ஒரு பெண்ணை பலவந்தம் செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுச் சங்கத் தலைவர் கைதான செய்தியும் வெளிவந்தது.

சுடலைமுத்துவும் கேசவ பிள்ளையும் வெற்றிக்கொடி நாட்டினார்கள். சங்கக் காரியாலயம் இருந்த இடம் இப்போது ஒரு சவரக் கடையாக உருமாறிவிட்டது. நகரசுத்தித் தொழிலாளர்களுக்கு இப்போது சங்கம் இல்லை. சுடலைமுத்துவுக்கு இரண்டு ரூபாயுடன் ஒரு வேட்டியும் மேல்துண்டும் தலைவர் இனாம் வழங்கினார்.

"இனிமேல் இப்படி எல்லாம் நடந்துகொள்ளக் கூடாது, தெரிந்ததா?"

"இல்லீங்க."

ஆனால் தோட்டிகளுடன் நெருங்கிப் பழகிவரும் கேசவ பிள்ளைக்கு ஒரு உண்மை புலப்பட்டது. தோட்டிகளிடையே ஒன்று சேர்வதற்கான ஆவேசம் பொங்கி எழுந்துவிட்டது. அது இனிமேல் தணியாது.

தலைவர் கேட்டார் : "அதற்கு என்ன செய்ய வேண்டும்?"

"அதற்கு ஒரே வழிதான். அவர்களுக்கு என்று ஒரு சங்கம் இருந்து விட்டுப் போகட்டும். ஆனால் அது நம் கைக்குள் வர வேண்டும்."

தலைவருக்கும் அது சரி என்று பட்டது. அதற்கு என்னென்ன செய்ய வேண்டுமோ, அந்தக் கைங்கர்யத்தைக் கேசவ பிள்ளை செய்யும்படி அவர் அனுமதித்தார். அதற்கென ஏற்படும் செலவுகளை முனிசிப்பாலிடியிலிருந்து கொடுப்பதாகவும் அவர் திருவாய் மலர்ந்தார்.

ஒரு மாதத்திற்குள், ஒருநாள் ஊரிலுள்ள நாடகக் கொட்டகையில் நகரசுத்தித் தொழிலாளர்களின் புதிய சங்கம் தொடங்கப்பட்டது. சன்னியாசி ஒருவர் திறப்பு விழாவை நடத்தி வைத்தார். அவ்வூர் வியாபாரப் பிரமுகர் ஒருவர் தலைமை தாங்கினார்.

அன்று முனிசிப்பாலிடிக் கட்டடத்தில் தோட்டிகளுக்கும் இதர தொழிலாளர்களுக்கும் வடை பாயசத்துடன் விருந்து கொடுக்கப்பட்டது. ஆளுக்கொரு வேட்டியும் கிடைத்தது. விருந்துக்குப் பிறகு மாபெரும் பொதுக் கூட்டம். அற்புதமான பிரசங்கங்கள் நிகழ்ந்தன. ஆனால் ஒரு வார்த்தைகூட தொழிலாளர்களுக்குப் புரியவில்லை; அவர்களுக்கும் அங்கு பேசப்பட்ட விஷயங்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இருக்கவில்லை. அவை அவர்களுடைய விஷயங்களல்ல; அவர்களுடைய முக்கியமான பிரச்னைகளல்ல. கள்ளைக் குடிப்பது பாவ காரியம் என்று அந்த சன்னியாசி கூறினார். ஆனால் அது கெட்ட பழக்கம் என்பது அவர்களுக்கு ஏற்கனவே தெரிந்த விஷயம்தான். கடவுளை வணங்க வேண்டும் என்று அவர் கூறியதில் எதுவும் புதிதாக இருப்பதாக அவர்களுக்குத் தெரியவில்லை. தொழிலாளர்களிடம் எஜமானர்களுக்குப் பரிவும், இரக்க உணர்ச்சியும் இருக்க வேண்டும் என்று அவர் சொன்னதும், கேட்டுக் கேட்டு அலுத்துப்போன பழைய பல்லவிதான். ஆனாலும், ஒன்றுபட வேண்டும் என்னும் தேவையினால், ஆவேசத்தினால் எல்லோரும் அந்தச் சங்கத்தில் தங்களை அங்கத்தினர்களாகப் பதிவு செய்துகொண்டார்கள். அவர்களது நுழைவுக் கட்டணத்தை முனிசிப்பாலிடியிலிருந்தே தானம் வழங்கிவிட்டார்கள். ஆஹா, மனிதர்களின் தயவே தயவு! கேசவ பிள்ளை சங்கத்தின் தலைவரானார். செயற்குழுவையும் அவரே தேர்ந்தெடுத்தார். கடவுள் வாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

எல்லோரும் அன்று வடை பாயசத்துடன் விருந்துண்டார்கள். கூட்டம் நடைபெற்றுக்கொண்டிருந்த போது, மேலே விசிறிகள்

சுழன்றன. எவருமே உடம்பைக் கொஞ்சம்கூட அலட்டிக்கொள்ள வேண்டியதில்லை. இருந்தாலும் கூட்டம் கலைந்து வெளியே வந்த போது ஒருவர்க்கொருவர் எவருமே பேசிக்கொள்ளவில்லை. யாருக்கும் பேசத் தோன்றவில்லை. பேசுவதற்கு ஒன்றுமே இல்லை. ஏன் ஏதோ ஒரு அபசுரம். எல்லோருக்கும் ஒரு சோர்வு. உடலுக்கா இல்லை, மனசுக்குத்தான். தங்கள் ஜீவசக்தி உறிஞ்சி எடுக்கப்பட்டு விட்டதாகத் தோன்றிற்று அவர்களுக்கு. ஆசைக்குரிய பொருளொன்றைக் இழந்து நிற்பது போன்ற உணர்வு மேலெழுந்தது அவர்கள் நெஞ்சிலே.

ஒருவேளை, அவர்கள் இதயத்தின் அடித்தளத்தில் அழுந்திக் கிடக்கும் வர்க்க போதம் குமுறிக்கொண்டிருக்கிறதோ, என்னவோ. கூர்ந்து நோக்கும் பட்சத்தில் ஒருவித அமைதியில் ஆழ்ந்திருக்கும் அவர்களது முகங்களிலிருந்தே அந்த மனச்சோர்வை, நிலைக் குலைவைத் தெரிந்துகொள்ளலாம் போலிருந்தது.

மதம் தன் புனித வாழ்த்துக்களுடன், முன்னைவிடவும் எவ்வளவு வேகத்தோடும் உண்மை உணர்ச்சியோடும், மரணத்திற்குப் பிந்தைய வாழ்க்கையை உணர்த்த மக்களிடம் வருகிறது பாருங்கள்! சிம்மாசனங்கள் தடம்புரண்டு சாய்ந்துவிடவில்லையா? பெரும் கோடீசுவரர்கள் லட்சம் லட்சமாக தர்ம ஸ்தாபனங்களுக்கு வாரி இறைக்க வில்லையா? தத்துவாசிரியர்கள் என்னென்ன புதிய புதிய தத்துவ விளக்கங்கள் கூற முன்வருகிறார்கள்! பைபிளில் கம்யூனிஸம் இருக்கிறது என்றுகூடச் சொல்லப்படுகிறது. இதெல்லாம் ஏன்? உலகத்தில், கோடானு கோடி மனித இதயங்களின் அடித்தளத்தில் சலனம் ஏற்படுத்திக்கொண்டிருக்கும் அதிருப்தியின் சீற்றத்தைக் கேட்டு விட்டுத்தான் அது, பொங்கியெழும் மாகடலின் குமுறலைக்கூடத் தோற்கடித்துவிடும்.

எங்கும் வெற்றி, எதனிலும் வெற்றி என்கிற தோரணையில் கேசவ பிள்ளை தலைவருக்குப் பின்னால் நடந்தார். அவர்களிருவரும் உற்சாகத்துடன் உரையாடிக்கொண்டிருந்தார்கள். கேசவ பிள்ளையின் பின்னால் போய்க்கொண்டிருந்த சுடலைமுத்து வாய் திறக்கவில்லை. என்ன காரணமோ தெரியவில்லை, அவன் மனசு அலைக்கழித்துக் கொண்டிருந்தது.

அவனும் சுரண்டப்படுகிறவனல்லவா? யார் எதைச் சொன்னாலும் அவனும் துன்பச் சேற்றில் உழலுபவன்தானே! ஒருவேளை, எதையோ இழந்துவிட்ட உணர்ச்சி அவனுக்கும் தோன்றுகிறதோ என்னவோ!

# 3

மலக்கிடங்கிற்குத் தோட்டிகள் இன்னும் வந்து சேரவில்லை; வந்து சேரும் நேரமாகவில்லை. இரண்டு வண்டிகள் மட்டும் கிடங்கின் ஒரு பக்கமாகக் கிடக்கின்றன.

ஒரு கோடியில், ஓங்கித் தழைத்திருக்கும் மாமரத்தினடியில் காதலன் காதலியை நெருங்குகிறான். அவள் அவனுக்காகக் காத்துக் கிடக்கிறாள். ஆனால், கரங்களை விரித்து அவன் அவளை ஆவிச் சேர்த்துத் தழுவவில்லை. அவளை மார்புறச் சேர்த்தணைத்து அவள் முகத்தில் காதல் முத்திரைகளைப் பதிக்க அவன் இதயம் துடிக்கிறது. ஆனால் அதற்கு அவனிடம் துணிச்சல் இல்லை.

இருவரது உடலும் அந்த உணர்ச்சி வேகத்தில் பதறி விறைக்கிறது.

சுடலைமுத்துவின் தொண்டையிலிருந்து வார்த்தைகள் வெளியே குதித்தன.

"ஒரு விசயம்."

வள்ளி மெதுவாகத் தலையை நிமிர்த்தி அவனை நோக்கினாள். காதல் விவகாரத்தில் அவன் பயப்படுபவன் போலிருக்கிறது. அவளுக்குச் சிரிப்பு வந்தது. அவன் அவளை மார்புற வாரி எடுத்து ஆனந்தக்கூத்து ஆடக்கூடாதா, அவள் வேண்டாம் என்றா சொல்லப் போகிறாள்? ஆனால் அவன்தான் அவளைத் தொடுவதற்கே பயந்து சாகிறானே!

குரல் இடற, சுடலைமுத்து மீண்டும் கூறினான் :

"ஒரு . . . விசயம் . . . சொல்லணும்."

அவள் புன்னகையுடன் கேட்டாள் :

"என்ன விசயம்?"

அவனுக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை. அவனது உதடுகள் துடிக்கின்றன. பேசுவதற்கு எவ்வளவோ இருக்கிறது. அத்தனையும் சிந்தித்து, சொல்ல வேண்டியவைகளைக் கோவைப் படுத்தி வைத்திருந்தான். ஆனால் எல்லாம் நொடியில் மறந்துபோய் விட்டது.

இந்தத் தடுமாற்றத்தைக் கண்டு வள்ளிக்கு அடக்க முடியாத சிரிப்பு வந்தது. அதற்கிடையில் அவன் பேசினான் :

"நான் ஒரு வீடு வாங்குவேன்."

முதலில் அவன் இதைக் கூற எண்ணவில்லை. எடுத்த எடுப்பில் இதைச் சொல்லியிருக்க வேண்டாம். அவள் கேட்டாள் :

"இதுதானா விசயம்; இதுக்கென்ன கஸ்டம்?"

அவன் வெட்கிப்போனான். அந்தத் தடுமாற்றத்தினிடையே அவன் சொன்னான் :

"இல்லே, ஒரு வீடும் நெலமும் நான் வாங்க நெனச்சிருக்கேன்."

"வீடும் நெலமுமா, அதுக்கென்ன?"

"அதுவும் உனக்காகத்தான்."

இதயத்தின் ஆழத்திலிருந்து வந்த வார்த்தைகள்தாம் அவை. நிலம், வீடு வாங்கும் எண்ணமே அவளைப் பார்த்துப் பழகிய அன்று ஏற்பட்டதுதான்.

வள்ளியும் அவன் மனசை உணர்ந்துகொண்டாள். விஷயம் அவளுக்கும் புரிந்துவிட்டது. உணர்ச்சிவசப்பட்டு என்னென்னமோ சொல்ல வாயெடுத்தாள்.

சுடலைமுத்து அவளை ஒரு கையால் தன் மார்போடு அணைத்தான். மறு கையால் அவள் முகத்தைப் பிடித்து நிமிர்த்தினான். அவள் விருப்பம் போல் முத்தங்களைச் சொரிந்தான். அங்கே, சுற்றும் சூழ வளர்ந்திருந்த வறண்ட செடிகள் தலையாட்டின. கிடங்குகளைச் சூழ்ந்துகொண்டிருந்த காகங்கள் அந்தக் காதல் காட்சியைக் குறித்துத் தங்கள் பாஷையில் பேசிக்கொள்வது போல் கரைந்தன.

அவன் வாங்கப்போகும் வீடும் வயலும் அவளுக்காகத்தான்

என்று அவன் சொன்னான். அவளும் அதைப் பூரணமாக நம்பினாள். ஆனால் உண்மை வேறாக இருந்தது. அவளுக்காக வீடும் நிலமும் வாங்க வேண்டும் என்பது, சுடலைமுத்து சிறிதும் சிந்தித்திராத விஷயம். அவனது திட்டம், பின்னர் வரவிருக்கும் பல நூற்றாண்டுகளைத் தாண்டி லயித்திருந்தது. அவன் அழிந்த பிறகும் அது அழியாது. வீடு பற்றிய அவனுடைய எண்ணம், அவனது எதிர்காலக் கனவுகளுக்கெல்லாம் மையமே ஒழிய வேறில்லை. அவள், அவனுடைய விசாலமான திட்டத்தின் மையப்பொருள் என்று சொல்லலாம்.

எல்லாவற்றையும் முதலிலிருந்து கடைசி வரையிலும் அவளிடம் சொல்ல எண்ணமிட்டிருந்தான் சுடலைமுத்து. ஆனால் ஆரம்பமே குளறிப்போய்விட்டது. சொல்ல வேண்டியதை முறையாக அவன் சொல்லவோ, புரிந்துகொள்ள வேண்டிய விதமாக அவள் புரிந்துகொள்ளவோ இல்லை. ஆனால் சொல்ல வேண்டியதை அவன் சொல்லித்தானாக வேண்டும்.

"அந்த வீடு ஒனக்காக வாங்கப் போறதில்லே."

அவளுக்கு இது புரியவில்லை.

அவர்கள் இருவருமாகக் கூடி நிறைவேற்ற வேண்டியவை ஏராளம் இருப்பதாகச் சொன்னான் சுடலைமுத்து. அவனுக்கு ஒரு துணை வேண்டும். வாங்கவிருந்த வீடு அவனுக்குமல்ல. அவன் சொன்னான் :

"அந்த வீடு பெரிய பங்களா மாதிரி இருக்கணும்."

அவள் சிரித்தாள். சுடலைமுத்து தொடர்ந்தான் :

"அது நம்ம ரெண்டு பேருக்குமில்லே."

"வேறே யாருக்காம்?"

"கொளந்தைங்களுக்கு."

தான் சொன்னதெதுவும் அவளுக்குப் புரியவில்லை என்றே சுடலைமுத்து எண்ணினான். ஆனால் அவள் உண்மையில் எல்லாவற்றையும் 'பட்'டென்று புரிந்துகொண்டுவிட்டாள். ஆனால் அவனால்தான் அதை உணர முடியவில்லை.

வீதியோடு, மூக்கைப் பிடித்துக்கொண்டு போகிறவர்கள் அந்த மாமரத்தடிக் காதல் நாடகத்தைக் கவனித்திருக்க முடியாது. மலக் கிடங்கில் காதல் நாடகமா, அதுவும் பட்டப் பகலில்? ஆனால் நிலவு பொழியும் இரவிலே, பூந்தோட்டத்தில் ராஜகுமாரனும் ராஜகுமாரியும் சந்திக்கும்போது என்ன நிகழ்கிறதோ, அதுதான் இங்கும் நிகழ்கிறது. ஆண், பெண்ணிடம் மன்றாடுகிறான். வம்ச விருத்தியில் பங்கெடுத்துக்கொள்ளும்படி கெஞ்சுகிறான். காதல் இதயங்கள் கூடிக் கலக்கும்போது ஏற்படும் ஆவேச உணர்ச்சி இங்கும் இருக்கிறது. நெஞ்சு படபடக்கிறது; தொண்டை இடறுகிறது. சொல்ல எண்ணும் வார்த்தை வெளியே வராமல் தத்தளிக்கிறது.

சற்றுத் தொலைவில் இரண்டு பீப்பாய் வண்டிகள் வருவதை வள்ளியும் சுடலைமுத்துவும் கவனித்துவிட்டார்கள். இருவரும் அவரவர் வண்டியின் பக்கத்தில்போய் நின்றுகொண்டார்கள். மிகுந்த மகிழ்ச்சியுடனும் ஊக்கத்துடனும் அவர்களிருவரும் தங்கள் தங்கள் வேலையில் ஈடுபட்டனர். பார்ப்பவர்களுக்கு எவ்வித சந்தேகமும் தோன்றாது.

வள்ளிக்கும் சுடலைமுத்துவுக்கும் திருமணம் நடந்தது. தோட்டிகளிடையே அது ஒரு முக்கியமான நிகழ்ச்சி. வள்ளி அதிருஷ்டசாலி என்று எல்லோரும் சொன்னார்கள்.

சிறு வயதிலேயே தாய் தந்தையரை இழந்த வள்ளி, தனது ஒரே பற்றுக்கோலான அத்தையிடம் வளர்ந்தாள். அத்தை ஆலப்புழை நகரில் குப்பை கூட்டுபவளாகவும், சில சமயங்களில் தோட்டியாகவும் வேலை செய்துவருகிறாள். வள்ளியும் எப்போதாவது அத்தைக்கு உதவியாக வேலை செய்வதுண்டு.

மணம் முடிந்த மறுநாள் அவள் தன் கணவனுடன் தோட்டிகள் சேரியில், ஒரு பழைய குடிசையில் இடம் மாறினாள்.

முதல் வேலையாக அந்தப் பழங்குடிசை செப்பனிடப்பட்டது. தட்டிகளால் மறைப்புகள் ஏற்படுத்தப்பட்டன. தரைக்குப் புதிதாக சிமிண்ட் இடப்பட்டது. மொத்தத்தில் அந்த வீடு மற்றைய சேரி வீடுகளிலிருந்து மாறுபட்டிருந்தது. இப்படிப் புதுப்பிக்கப்பட்ட வீட்டுக்குத்தான் சுடலைமுத்து தன் மனைவியை அழைத்துச் சென்றான்.

ஒரு வீட்டுக்குத் தேவையான எல்லாச் சாமான்களும் அங்கிருந்தன. செம்புப் பாத்திரங்கள், தவலைகள், குவளைகள் என்று

இருந்தன. கட்டிலும் பெட்டிகளும்கூட இருந்தன. அறையின் ஒரு மூலையில் முருகக் கடவுளின் படம் ஒன்று மாலை அலங்காரத்துடன் காட்சியளித்தது.

வள்ளி பூரித்துப்போனாள். இங்கு மட்டுமல்ல; தன் அத்தையுடன் அவள் வசித்துவந்த கடலோரத்துத் தோட்டிகள் 'காலனி'யிலும்கூட இவ்வளவு நல்ல வீடு கிடையாது. அந்தக் குடிசைகளில் வெண்கலப் பாத்திரங்கள் ஏது? வள்ளியிடம் அவை இருந்தன. அவை அவளுக்குச் சொந்தம். அவள் கணவன் பணக்காரன்தான். அவளை அவன் பெருமையாக வைத்திருக்கிறான்.

அன்று சாயங்காலம் சிறிய குத்துவிளக்கை நன்றாகத் தேய்த்துத் துலக்கி, எண்ணெய் திரி போட்டு, தீபம் ஏற்றி முருகன் படத்தின் முன்னால் வைக்கும்படி அவன் அவளிடம் கூறினான். அவளும் அப்படியே செய்தாள். மற்றக் குடில்களில் குழந்தைகளின் ஓலமும், அடி உதையும், ஏச்சும் பேச்சும் நிறைந்திருக்க, இங்கே கணவனும் மனைவியும் தெய்வ சன்னிதானத்தில் பிரார்த்தனைக்காக சம்மணம் கூட்டி அமர்ந்திருக்கிறார்கள். சுடலைமுத்து சொன்னான் :

"நான் சொல்லுவேன்; அத நீ திருப்பிச் சொல்லணும். பக்தியோட சொல்லணும்."

வள்ளி தன் வாழ்க்கையில் முதன்முறையாக அன்று பிரார்த்தனை செய்கிறாள். கண்களை மூடியபடி, கூப்பிய கரங்களுடன் உட்கார்ந்திருக்கும் தன் கணவனை அவள் நீண்ட நேரமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. இவை எல்லாம் அவன் எங்கிருந்து கற்றுக்கொண்டான்? அவன் பாடினான். அவள் சேர்ந்து பாட முயன்றாள். பல இடங்களிலும் வார்த்தை பிசகிற்று; அவன் திருத்தினான்.

பிரார்த்தனை முடிந்ததும், பக்கத்து வீட்டில் அடி உதைகளுடன் சண்டை நடக்கும் அரவம் அவர்களுக்குக் கேட்டது. வள்ளி சொன்னாள் :

"அடிக்கிறானே, அங்கே போயேன்!"

"என்னத்துக்கு?"

"அடிச்சுக் கொன்னுபோடுவான் போலிருக்கு, போ!"

"சாவட்டும். இந்தச் சனியங்க வீட்டுப் பக்கத்திலே இருந்தா

உருப்பட மாட்டோம். வேறே எங்கேயாவது தொலைஞ்சிரணும்."

"எங்கே போறது? கடக்கரையிலும் இப்படித்தான்."

"அங்கே வேணாம். வேறே எங்கேயாவது பக்கத்து வீட்டுக்காரன் நல்ல மனிசனா இருக்கிற இடம் பாத்துப் போவணும்."

தோட்டிகளுக்கு, தோட்டிகள் வசிக்கும் இடம் தவிர்த்து வேறு இடத்திற்குப் போக முடியுமா என்பதுதான் வள்ளியின் சந்தேகம். பெரிய மனிதர்கள் தங்கள் அருகில் தோட்டிக்கு இடம் தருவார்களா? ஒப்புக்கொள்வார்களா? அப்போது சுடலைமுத்து கேட்டான் :

"என்னைக்கும் இப்படித் தோட்டியா இருந்தாப் போதுமா?"

அந்தக் கேள்வியின் பொருள் அவளுக்கு விளங்கவில்லை. தோட்டி என்றும் தோட்டியே அல்லவா? அவன் வேறொருவன் ஆகிவிட முடியுமா?

அன்றிரவு, தனது எதிர்காலத் திட்டங்களை எல்லாம் சுடலைமுத்து அவளிடம் சொன்னான். மகத்தான பல திட்டங்களை அவன் நிறைவேற்றியாக வேண்டும். படிப்படியாக அவன் வளர்வதற்கான வழிகள் அந்தத் திட்டத்தில் அடங்கியிருந்தன. எல்லாவற்றையும் வள்ளி கேட்டுக்கொண்டிருந்தாள்.

சுடலைமுத்து மேலும் கூறினான் :

"பெரிய மனிசங்களைப் போல நடந்துக்க நானும் பளகிக்கிட்டு வாறேன். எப்படியாவது முன்னுக்கு வரலாமுண்ணு ஆசை."

வள்ளி கேட்டாள் :

"நாம எப்பிடி பெரிய மனிசங்க மாதிரி ஆவ முடியும்?"

"பாத்துக்க; பாத்துக்கிட்டே இரு. ஆனா ஒரு விசயம். நமக்கு சொகுசா இருக்க எங்கே நேரம் கெடைக்கப்போவுது? இன்னும் பத்து நாள்தான் இதெல்லாம்."

"அப்புறம்?"

"அப்புறம் சொகமா இருக்க முடியாது. பாடுபடணும்."

வள்ளி சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுக் கூறினாள் :

"பிரியமா நாம இருந்திட்டா, எவ்வளவுதான் பாடுபட்டாலும், நமக்கு அது சொகந்தான்."

அவள் நம்பிக்கை அதுதான். சுகம் என்பதற்கு அவளுடைய பொருளும் அதுவேதான். பரஸ்பரம் அன்பு கொண்டுவிட்டால் பிறகு என்ன வேண்டும்? அதுதானே சுகம்! சுடலைமுத்துவுக்கு இது புரியவில்லை. சுகத்தைப் பற்றிய அவன் கற்பனையே வேறு. அவன் சொன்னான் :

"இல்லே வள்ளி. குஷாலா நாம இருக்க முடியாது. எலும்பு முறியப் பாடுபடணும். கடைசி மூச்சு இருக்கிறவரை உளைக்கணும்."

"அதுக்கென்ன வேலை செய்யணும்!" என்று வெள்ளையாகச் சொன்னாள் வள்ளி.

"அப்படி வேலை செஞ்சாதான் நம்ம குளந்தைங்க சொகமா இருக்கும்."

வாழ்வதற்காகத்தான் வேலை செய்கிறோம் என்பது அவளுக்குத் தெரியும். வேலை செய்வது அவளுக்குக் கஷ்டம் என்றும் தோன்றவில்லை. வேலை செய்யாமல் வாழ முடியாது. குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டும். அதற்காகத் தாயும் தகப்பனும் சிறிது சிரமப்பட நேரிடலாம். சில தியாகங்கள் செய்யும்படி ஏற்படலாம். ஆனால் சுகமாக இருக்க முடியாது என்று எப்படிச் சொல்ல முடியும்?

பிறக்கப்போகும் குழந்தைகளை எப்படிப் பேணிப் பெரியவர்களாக்க வேண்டும் என்பதை அவன் சொன்னான் :

"நம்ம குளந்தைங்க. தோட்டிகளாகக் கூடாது"

தன் கணவன் ஆசைப்படுவது போல் குழந்தைகள் பெரியவர்கள் ஆவார்களா? வள்ளிக்குச் சந்தேகமாகத்தான் இருந்தது.

சுடலைமுத்து பத்து தினங்களுக்கு விடுப்பு எடுத்துக்கொண்டான். ஒரு நோக்கத்தோடுதான் அவன் அதைச் செய்தான். அவன் கேட்டான் :

"உனக்கு ஊரைச் சுற்றிப் பாக்க வேணாமா?"

பார்க்க வேண்டுமென்று அவள் சொன்னாள். பத்து

தினங்கள்தான் உல்லாசமாக இருக்க முடியும் என்று தான் கூறியதற்கு விளக்கம் கொடுத்தான் சுடலைமுத்து.

இந்தப் பத்து நாட்களிலும் ஊரெல்லாம் உல்லாசமாகச் சுற்றித் திரிந்து வாழ்க்கையை அனுபவிக்க வேணும். ஆனந்தப்பட வேணும். பதினொன்றாவது நாள் திரும்பி வந்துவிட வேண்டியதுதான். அந்த நிமிஷம் முதல் குழந்தைகளுக்காகப் பாடுபட வேண்டும்.

தன் 'ஹனிமூ'னுக்கு வேண்டிய ஏற்பாடுகளை அவன் செய்யத் தொடங்கினான்.

'ஹனிமூன்' முடிந்து, சுடலைமுத்துவும் வள்ளியும் திரும்பி வந்தார்கள்.

அந்தப் பத்து நாட்களிலும் அவள் என்னென்னவெல்லாமோ அனுபவித்துவிட்டாள் புதுமையான ஓர் உலகத்தையே அவள் கண்ணாரக் கண்டாள். வாழ வேண்டிய ஓர் உலகம் அது. சுவைக்கும் சக்தி தோட்டியின் நாவிற்கும் உண்டு. தோட்டியின் நாசிக்கும் நறுமணங்களைத் தெரிந்துகொள்ள முடிகிறது. தோட்டியின் சருமத்திற்கும் ஸ்பரிச உணர்வு இருக்கிறது. நல்ல இன்பமான நாதங்களை அவனும் கேட்டு அனுபவிக்கிறான். இந்த உண்மைகளை எல்லாம் உலகத்திற்குத் தெரியப்படுத்த வேண்டும் என்பதுதான் அவள் ஆசை. பிச்சாண்டி, வடிவேலு போன்றவர்களின் மனைவிமார்களிடமும் இதைத்தான் வள்ளி விரிவாகச் சொன்னாள்.

நல்ல பட்டுச்சேலை உடுத்து, முல்லைப்பூ சூடி, எர்ணாகுளம் கடற்கரையில் கழித்த அன்றைய சாயங்காலப் பொழுது அலாதியாகத்தான் இருந்தது. ஆலப்புழைக் கடற்கரையில் அப்படி ஒருநாள் போக வேண்டுமென்று அவள் தீர்மானித்திருக்கிறாள். அவ்வளவு சுகமாக இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். ஆனால், அன்று அவள் உடுத்துக்கொண்டிருந்த சேலையை வண்ணான் கொண்டு போய்விட்டான். இன்னும் வேணுமானாலும் வாங்கலாம்.

பாலாய் நிலவெரிக்கும் இரவில், சிற்றலைகள் வந்து கொஞ்ச, சின்னஞ்சிறு ஓடத்தில் மிதந்தபோது அவர்கள் எத்தனை இன்பக் கதைகள் பேசினார்கள். அப்போது அனுபவித்தது போல் இனிமேல் அனுபவிக்க முடியுமா? முடியாது. ஏழு நாட்கள் - ஏழே நாட்கள் தான் வாழ்க்கையில் ஆனந்தப்பட முடியுமென்று அவன் சொல்லியிருக்கிறானே.

தன் அனுபவங்களையெல்லாம் தன் தோழிகளிடம் சொல்ல

வேண்டும் என்று வள்ளி ரொம்பவும் ஆசைப்பட்டாள். ஆனால் யாரையும் போய்ப் பார்க்கவோ, யாருடனும் இனி எந்தவிதத் தொடர்பும் வைத்துக்கொள்ளவோ கூடாது என்று சுடலைமுத்து உத்தரவு போட்டிருந்தான். அவள் ஒரு புதிய உலகத்தைக் கண்டாள். தோட்டியின் வாழ்க்கையிலுள்ள அழுக்கும் ஆபாசமும் அவளுக்கு நன்கு தெரியவந்தன.

இந்த விஷயங்களெல்லாம் அவளுக்குச் சொல்லித்தந்தவன் சுடலைமுத்துதான். ஆனால் அவர்களுடன் - பிற தோட்டிகளுடன் - எந்தவிதமான தொடர்பும் கூடாது என்றால் பின் யார்கூடத்தான் உறவு வைத்துக்கொள்ள வேண்டும் என்பது தெரியவில்லையே. உறவின்றி வாழ முடியுமா?

பக்கத்து வீட்டுப் பெண்களோடு பேசக்கூடாது. வேலையுமில்லாமல், பேச்சுத் துணைக்கு ஆளும் இல்லாமல் இருக்கும்போதெல்லாம், வள்ளி தன் வாழ்க்கையைக் குறித்தும் கணவனின் திட்டங்களைக் குறித்தும் சிந்திப்பாள். அவன் திட்டங்களெல்லாம் நிறைவேறுமா?

எல்லாம் சாத்தியமற்ற காரியங்களாகவே அவளுக்குப்பட்டது. நிறைவேறாத விஷயங்கள். அந்த ஏழு நாட்களிலும், தான் ஒரு தோட்டிச்சி என்பதை அவள் பூரணமாக மறந்திருந்தாள். மறுபடியும் தோட்டிச்சியாகத் திரும்ப வரவேண்டும் என்ற எண்ணமே அவளை உலுக்கிவிட்டது. ஆனால், அந்தப் புதிய வாழ்க்கையில் அவளுக்குக் கால் உறைக்கவில்லை. நன்றாக உடுத்திக்கொண்டு சுற்றுகிறபோதும் சிரிக்கிறபோதும் சினிமாவிற்குச் செல்லுகிறபோதும், அதட்டுவார்களோ என்கிற பயமும் தோன்றிக்கொண்டிருந்தது. அவ்வித அதட்டல்கள் புக முடியாத இடங்களில்தான் அவள் சுற்றுகிறாள் என்றாலும், அவளும் அவளுடைய கணவனும் தோட்டிகள்தாமே. தோட்டிகள், தோட்டிகளுடன் உள்ள பந்தத்தை அறுத்துக்கொண்டால் பிறகு யார்கூடத்தான் சேர்ந்து வாழ்வது?

ஒரு வயசு முதலே தன்னை எடுத்து வளர்க்கும் அத்தைக் கிழவியை வள்ளி பார்த்து மூன்று வாரமாகிறது. பாவம், அந்தக் கிழவி என்னென்ன எதிர்பார்த்து ஏமாந்தாளோ? தன் பெண் இன்று வருவாள், நாளை வருவாள் என்று ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கக்கூடும். தன்னால் அந்தக் கிழவிக்கு ஒரு நேரத்து வெற்றிலைச் சருகுக்குக்கூடப் பிரயோசனம் இல்லை. வள்ளி பெரியவளாகி அவளை எவன் கழுத்திலாவது கட்டுகிறபோதுதான் தன் கஷ்டங்கள் எல்லாம் தீரும் என்று கிழவி எண்ணியிருந்தாள்.

இன்றும், பாவம் அவள், தெருப் பெருக்கித் தன் காலத்தை ஓட்டுகிறாள். அவளையும் தன்னுடன் வைத்துக்கொள்ளலாம் என்றால், அதற்குச் சுடலைமுத்து ஒருநாளும் ஒத்துக்கொள்ள மாட்டான்.

வள்ளியை எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏமாற்றமடைந்து, ஒருநாள், பொழுதோடு வேலையை முடித்துக்கொண்டு கிழவி வள்ளியின் வீட்டுக்கு வந்தாள். இரண்டு கள் அப்பம் சுட்டுத் தன் மடியில் வைத்திருந்தாள். வள்ளியைக் கண்டதும், தான் வளர்த்த பெண் அவள் என்பதைக் கிழவியால் நம்ப முடியவில்லை. அழகாக உடுத்து, தலைசீவிக் கொண்டை போட்டு, பொட்டு இட்டுக்கொண்டு, வாளிப்பான தேகக் கட்டுடன் நிற்கும் ஒரு புதிய பெண்ணை அல்லவா அவள் பார்க்கிறாள்! கிழவி பூரித்துப் போனாள். அவளுக்குப் பிறவிப் பயன் கிடைத்துவிட்டது. ஆனால் வள்ளியின் இதயம் நொந்தது. அவளுடைய அத்தைக் கிழவி வாடி மெலிந்து பலவீனமடைந்திருக்கிறாள்.

"வருவாய் வருவாய் என்று உனக்காகக் காத்திருந்தேன்" என்று கிழவி சொன்னபோது வள்ளியின் மனசு நெகிழ்ந்து உருகியது. தான் வராததற்கு எந்தச் சாக்குப்போக்கும் அவளால் கூற முடியவில்லை. கிழவி இப்போது வந்ததே தன் கணவனுக்குப் பிடிக்காமல் போய்விடுமோ என்ற பயம் வேறு அவளை அலட்ட ஆரம்பித்துவிட்டது.

வள்ளி, கிழவியை நன்றாகக் குளிப்பாட்டினாள்; நல்ல உடை தந்தாள்; சோறு படைத்தாள். தான் தன் புருஷனுடன் உல்லாசமாக ஊர் சுற்றின பிரதாபத்தை எல்லாம் சொன்னாள். கணவன் கையில் பணமிருக்கிறது; இன்னும் கொஞ்சம் பணம் சேர்ந்த பிறகு நிலமும் வீடும் வாங்க வேண்டுமாம். வாங்கிக்கொடுப்பதாக 'சேர்மன்' பொறுப்பேற்றுக்கொண்டிருக்கிறாராம். இதைவிடவும் சந்தோஷம் தரும் பேச்சைக் கிழவி கேட்டிருப்பாளா?

சுடலைமுத்து வீட்டுக்குள் நுழைவதைக் கண்ட வள்ளி, மன்னிப்புக் கோரும் குரலில் சொன்னாள்:

"அந்தக் கௌவி வந்திருக்கு. வந்ததும் குளிப்பாட்டினேன்."

சுடலைமுத்து 'உம்' கொட்டினான். வள்ளி தொடர்ந்தாள்:

"என் ஒரு வயசிலே அப்பாவும் அம்மாவும் போயிட்டாங்க. அப்புறம் என்னை எடுத்துக் காப்பாத்தினது இவதான். அவளுக்கு

என்னை விட்டா வேறு யாருமே இல்லை."

சுரத்தில்லாத குரலில் சுடலைமுத்து கேட்டான் :

"அதுக்கு?"

"இல்லே, நீ அவளை ஒண்ணும் சொல்லக்கூடாது."

'சரி' என்று ஒப்புக்கொண்டான் அவன்.

அப்போது சிரித்த முகத்துடன் கிழவி அவனருகில் வந்தாள். அன்புடன் அவனைக் குற்றம் சாட்டினாள்.

"என்னப்பா, அந்தப் பக்கமே தலையைக் காட்டாம இருந்துட்டியே."

"ம் ஆமா, வர முடியாமப் போச்சு."

சுடலைமுத்து சிரித்தான். ஒரு கேலிச் சிரிப்பு. பிறகு அவன் பின்கட்டுக்குக் குளிக்கப் போனான். அவன் நடந்துகொண்ட முறையில் உள்ள அலட்சிய பாவனையை அந்த ஏழைக் கிழவியால் உணர்ந்துகொள்ள முடியவில்லை. வழக்கத்தை விடவும் சற்றுத் தாமதமாகவே குளித்துவிட்டுச் சுடலைமுத்து வந்தான். வந்தவன், சாப்பாட்டை முடித்துக்கொண்டு வெளியே போவதாகக் கூறினான்.

"ஆமாம், உன் அத்தை போகல்லியா?"

"போறதுக்கு . . . "

இப்படி இழுத்துவிட்டுக் கணவன் முகத்தைப் பார்த்தாள் வள்ளி. 'அவள் போய்விட வேண்டும்' என்று அவன் சொல்லிவிடுவானோ என்று அவளுக்கு நினைப்பு ஓடிற்று. ஆனால் அந்த வார்த்தை அவன் வாயிலிருந்து உதிரவில்லை.

அப்போது கிழவி அங்கே வந்தாள். விடை பெற்றுக்கொள்ள அவளுக்குப் பொழுதாகிவிட்டது.

"மூணுநாளித் தூரம் நடக்க வேண்டாமாப்பா, நான் போறேன்."

"சரி."

எவ்வளவு சட்டென்று, சங்கோசமில்லாமல் விடைகொடுத்து

விட்டான்.

வள்ளியின் கண்கள் துளும்பி நிறைவதைச் சுடலைமுத்து அன்று முதன் முதலாகப் பார்த்தான்.

"வள்ளியை ரெண்டுநாள் அங்கே அனுப்பி வெப்பியா அப்பா?"

"முடியாது."

முகத்தில் அடித்தாற் போல் பதில். அதன் வேகம் சொன்னவனையே ஒருகணம் தாக்கிற்று. கிழவியின் முகம் விழுந்துவிட்டது. பெரிய தவறு ஒன்றைத்தான் செய்துவிட்ட நினைப்பில் கிழவி சொன்னாள் :

"வேண்டாம், வேண்டாம். கேட்டேன் அவ்வளவுதான். அவ வந்துட்டா இங்கே பாக்கதுக்கு யாரு?"

சிறிது தூரம் வள்ளி கிழவியைப் பின் தொடர்ந்தாள். நிறைந்த கண்களுடன், அவள் நடந்துசெல்வதைப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

அந்த வீட்டில், ஒருவித அடிமைத்தனத்தை ஒவ்வொரு கணமும் வள்ளி உணர்ந்துகொண்டிருந்தாள். கண்ட இடத்திலெல்லாம் நலம் விசாரித்து, கிடங்கில் வைத்துக் காதல் பிச்சை கேட்டு, பின்னர் அவள் பெண்மையை மலர வைத்த காதலனை அல்ல இப்போது அவள் காண்பது. அவன் உருவத்தில் மாற்றம் ஏற்பட்டுவிடவில்லை. அவன் உடல் இப்போதும் திடமாகத்தான் இருக்கிறது. சுருண்ட அவன் மயிர்க் கற்றை இப்போதும் செழிப்பாகத்தானிருக்கிறது. முகத்தில் ஆண்மை குடிகொண்டுதானிருக்கிறது. ஆனால் இவை மட்டும்தானா ஒரு பெண்ணுக்குத் தேவை?

வள்ளிக்குச் சுத்தம் போதாதாம். வேண்டுமென்றே தன்னை அவன் இப்படிக் குற்றம் சாட்டுவதாகத் தோன்றிற்று அவளுக்கு. வீட்டைப் பெருக்கி, மெழுகி, சுத்தப்படுத்துகிறாள் அவள். குளிக்கிறாள் தினமும். சுத்தமாகத்தான் வெளியே வருகிறாள். பின் எங்கே இருக்கிறது அசுத்தம்? அந்தக் குற்றச்சாட்டைக் கேட்டுக் கேட்டு அலுத்துவிட்டது அவளுக்கு. சுத்தத்தைப் பற்றி வரையறுத்து விளக்கம் தரவும் அவனால் முடியாது. அவன் எண்ணத்தை அவளால் புரிந்து கொள்ளவே இயலவில்லை.

இன்னும் ஒரு விஷயம். வள்ளி பெரிய ஊதாரியாம். இதுவும்

அவளால் புரிந்துகொள்ள முடியாத சங்கதிதான். கணவன் பணம் சம்பாதிக்கிறான் என்பது உண்மை. ஆனால் அவள் கையில் கால் துட்டு கிடையாது. கணவன் சொல்லை அணுவளவும் அவள் அலட்சியம் செய்ததில்லை. ஆனாலும் அவள் ஊதாரியாம்.

வள்ளி குடிசையை விட்டு வெளியே செல்வதில்லை. எந்தப் பெண்ணுடனும் அவளுக்குச் சகவாசம் கிடையாது. சுடலைமுத்து அப்படி உத்தரவிட்டிருந்தான். அவளும் வார்த்தைக்கு வார்த்தை அவன் சொல்லை அனுசரித்துத்தான் வந்தாள். பல சமயங்களில், இந்தக் கட்டுதிட்டங்களெல்லாம் அவளால் பொறுத்துக்கொள்ள முடியாததாக இருந்தது. எனினும் அவள் எப்படியோ சகித்துக்கொண்டாள்.

வள்ளி பெரிய ராங்கிக்காரி என்பது அண்டை வீட்டுக்காரர்களின் எண்ணம். அவளிடம் எவருமே அத்தனை சுமுகமாகப் பழகுவதில்லை. அப்படி இருந்தும் கணவனின் கண்களுக்கு அவள் குற்றவாளிதான். எப்போதாவது, அக்கம்பக்கத்துப் பெண்பிள்ளை எவளாவது ஒரு வார்த்தை கேட்டுவிட்டால், அப்போதுகூடவா பதில் சொல்லக் கூடாது?

'நீ ஒருநாளும் உருப்படப்போவதில்லை' என்று ஒருநாள் சுடலைமுத்து பல்லைக் கடித்துக்கொண்டு கோபத்தில் சொன்னான். அன்று வெகுநேரம் வள்ளி அழுதுகொண்டிருந்தாள்.

அவளுக்குக் கடவுள் பக்தி போதாதாம். பக்தியுடன்தான் நடந்துகொண்டாள் அவள். பல பாட்டுகளும் சுலோகங்களும் அவளுக்குப் பாடமாகி இருந்தன. தினமும் அவள்தான் கணவனுடன் சேர்ந்து பிரார்த்தனை செய்கிறாள். இருந்தாலும் அந்த விஷயத்திலும் அவள்மீது குற்றச்சாட்டு.

சுடலைமுத்து அவளைக் கண்டிப்பதில்லை; கோபப்படுவதில்லை. எனினும் அவளுக்கு அவனிடம் பயம்தான். ஒவ்வொரு நிமிஷமும் நிபந்தனைகளும் புதிய புதிய உத்தரவுகளும் பிறந்துகொண்டிருந்தால், ஒரு பெண் அவற்றை எப்படிப் பொறுத்துக் கொண்டிருக்க முடியும்? அது அடி உதைகளைவிடவும் பயங்கரமானதாக இருந்தது அவளுக்கு. செய்வதெல்லாம் தப்பென்றும் தவறென்றும் ஏற்பட்டுவிட்டால், அதைவிடவும் துன்பம் வேறு என்ன இருக்க முடியும்.

சுடலைமுத்து ஊரிலுள்ள பெரிய மனிதர்களைப் பார்த்து, ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு புதிய விஷயம் தெரிந்துகொண்டு

வருவான். அவற்றை அப்படியே 'காப்பி' அடிக்கவும் முயலுவான். அவனது கற்பனைகளும் கனவுகளும் வள்ளிக்குப் பிடிபடுவதாக இல்லை. எனவே அவன் எண்ணம் போல் பல விஷயங்கள் நடைபெற முடியாமல்போய்விட்டது.

எவ்வளவோ பெரிய பெரிய காரியங்களைப் பற்றியெல்லாம் சுடலைமுத்து சிந்திக்க வேண்டியிருக்கிறது. எனவே, தன் மனைவியுடன் ஆனந்தமாகச் சல்லாபங்கள் புரிவதற்குக்கூட அவனுக்குப் பொழுது கிடைப்பதில்லை. இதை ஒரு இளம் மனைவி பொறுத்துக் கொண்டிருக்க முடியுமா?

பத்து நாட்கள்தான் வாழ்க்கையை - வாழ்க்கையின் சுகங்களை - அனுபவிக்க முடியும் என்று அவன் சொன்ன வார்த்தைகள் பொருள் நிறைந்ததாகத்தான் வள்ளிக்குப்பட்டது. உண்மையில் அந்தப் பத்து நாட்களிலும்தான் அவள் ஆனந்தமாக வாழ்ந்தாள். அதற்குப் பிறகு, மனம் நிறைய ஒரு பேச்சுக்கூட அவன் பேசவில்லை. அவள் இளமை பயனின்றி அழிகிறது.

எப்போதும் காசுக் கணக்குப் பார்த்துக்கொண்டிருந்த கணவனின் ரத்தத்தில் இளமைக் கொதிப்பு இல்லை. அவன் அவளை அணைத்துக்கொண்டான்; ஆனால் அந்த அணைப்பு அவளை மூச்சுத் திணற அடிக்கவில்லை. அவனது முத்தம் கடனைக் கழிக்கும் காரியமாகவே இருக்கிறது. காதலனாக இருந்தபோது அவன் உணர்ச்சி வயப்பட்டுத் திளைத்தான். கணவனான பிறகு அது மாறிவிட்டது. அவனது உணர்ச்சியின் ஊற்றுக்கண் வற்றி வறண்டுவிட்டது.

தன் வாழ்க்கைத் திட்டங்களை ஏற்றுக்கொள்ளச் சுடலைமுத்துவுக்கு ஒரு பங்காளி தேவையாக இருந்தது. அது அவனுக்குக் கிடைத்துவிட்டது.

அதிருப்தியில் மூழ்கிக்கொண்டிருந்த வள்ளி, நாளுக்கு நாள் கணவனின் திட்டங்களில் சந்தேகப்படத் தொடங்கினாள். அவன் வீடும் நிலமும் வாங்கப்போவதில்லை. அந்த வீடு ஓட்டு வீடாகவும், பின்னர் மாளிகையாகவும் ஆகப்போவதில்லை. தோட்டி பெரிய மனிதனாக மாற முடியாது. அவனுடைய குழந்தைகள் எப்படிப் பெரியவர்கள் ஆக முடியும்? அவர்கள் எழுதவும் படிக்கவும் தெரிந்துகொள்ள முடியுமா? எப்படியும் தோட்டிக் குழந்தைகள் தோட்டிக் குழந்தைகள்தாமே. தோட்டிகளுடன்தானே அவர்கள் கூடிக் கலந்து வாழ முடியும். கட்டிய கோட்டைகள் யாவும் தரைமட்டமாகத்தான் போகிறது.

அவனது பிரார்த்தனைகள் வெறும் நடிப்பு என்றே அவளுக்குப்பட்டது. அவன் அன்பைக்கூடச் சில வேளைகளில் அவள் சந்தேகித்தாள்.

வள்ளி பொறுத்துப் பொறுத்துக் கடைசியில் அவனுடன் இணங்கிப்போனாள். இப்படி வாழ்க்கை இழைந்துகொண்டு போயிற்று. என்ன இருந்தாலும் அவளுக்குத் தேவையானவையெல்லாம் அங்கு இருந்தன. பல சமயங்களில் ஏதேதோ கேள்விகளை எழுப்ப அவள் வாயைத் திறந்திருக்கிறாள். ஆனால் கேட்பதற்கு என்னவோ துணிச்சல் வரவில்லை.

இப்படி ஒரு கணவன்- மனைவி உறவை அவள் கண்டதுமில்லை, கேள்விப்பட்டதுமில்லை. மனைவி வாயைத் திறக்கக் கூடாது. அவளுக்கென்று எவ்வித அதிகாரமும் கிடையாது. அவள் கணவன் சொல்லியபடி நடந்துகொள்ள வேண்டும். அஞ்சி நடுங்க வேண்டும். இவ்வித அச்சம் வேறு எங்கும், எப்போதும் அவளுக்கு ஏற்பட்டதில்லை. தோட்டிகளின் வீடுகளில் புருஷனும் பெண் சாதியும் சண்டை பிடித்துக்கொள்வார்கள். ஒருவரையொருவர் அடித்துக் கொள்வதும் உண்டு. ஆனாலும், அங்கேயும்கூட இதைப் போல் ஒன்றுமில்லை.

ஒருவேளை, பெரிய மனிதர்களின் வீடுகளில் இப்படித்தான் நடக்கும் போலிருக்கிறது. அவர்களுடைய அன்பு, மனைவியை அடிமைப்படுத்திவைக்கும் அன்பாக இருக்கலாம்.

ஒரு இரவு, இருட்டி வெகு நேரமாகிவிட்டது. அந்தக் குடிசையில் கணவனும் மனைவியும் உறங்கவில்லை; உறக்கம் பிடிக்கவில்லை அவளுக்கு. இடையிடையே புரண்டு படுக்கும் ஓசை தவிர, மற்றபடி ஆழ்ந்த நித்திரையில் லயித்துவிட்டது போன்ற நிசப்தம். இருவரும் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளவில்லை. பேசிக்கொள்ளத்தான் என்ன இருக்கிறது?

சுடலைமுத்துவைப் பொறுத்தவரை, தூக்கமின்றி இரவில் வெகு நேரம் விழித்துக்கொண்டிருப்பது பழக்கப்பட்டுப்போன விஷயம். இரவில் அவன் சிந்தனை செய்வதற்கு எத்தனையோ காரியங்கள் இருந்தன. அவ்வாறு சிந்திப்பவர்களுக்கு ஆழ்ந்த தூக்கம் ஏது?

கடைசியில் வள்ளி அமைதியைக் குலைத்தாள்.

"என்னைக் கட்டிக்கிட்டது தப்புன்னு படுதோ?"

சட்டென்று பதிலுரைக்க முடியாமல் சுடலைமுத்து திணறிப் போய்விட்டதாகத் தோன்றிற்று வள்ளிக்கு.

கேள்வியைப் புரிந்துகொள்ளாத பாவனையில், 'என்ன என்ன?' என்று தடுமாறினான் சுடலைமுத்து. அவன் சிந்தனை தடைபட்டது மட்டுமல்ல; அது தடுமாறியே போய்விட்டது. விடை தெரியாத வினாவுடன் அவன் மோத நேர்ந்துவிட்டது.

வள்ளி அதே கேள்வியை மீண்டும் கேட்டாள் :

"இல்லே, நான் கேக்கிறேன். என்னைக் கட்டிக்கிட்டதினாலே நீ நெனச்சதெல்லாம் நடக்காமப்போறது போலப் படுதான்னு கேக்கிறேன்."

"அப்படி ஒண்ணும் இல்லே."

சொல்லி முடித்ததும் அந்தப் பதில் சரியில்லை; உசிதமானதாக இல்லை என்று பட்டது அவனுக்கு. ஆனால் அந்த விஷயத்தைப் பற்றிய அவனது சிந்தனை ஓட்டம் திரிந்து, தடுமாறிப் போய்விட்டதால், பதில் என்ன சொல்வதென்பதே அவனுக்குப் பிடிபடவில்லை. வள்ளி தொடர்ந்து கேட்டாள்:

"வேறொண்ணைக் கட்டிக்கிட்டிருக்கலாமுன்னு நெனைக்கிறே இல்லே நீ?"

"அது எப்படி உனக்குத் தெரிஞ்சுது?"

"அது என்னமோ, நான் சொன்னது சரிதானாண்ணு சொல்லு."

மீண்டும் சுடலைமுத்து திண்டாடினான். அவளது கேள்விகள் ஆபத்தானவை. அவளிடமிருந்து இப்படி வெளிப்படும் என்று அவன் கனவிலும் எதிர்பாராதவை. தர்மசங்கடமாகப்போய்விட்டது அவனுக்கு. ஆனால் சட்டென்று, ஆபத்திலிருந்து அவனைக் காக்க வந்தது போல் ஒரு கேள்வி அவன் நாவிலிருந்து உதிர்ந்தது.

"ஒன்னை எனக்குப் புடிக்கலையின்னு நெனைக்கிறியா?"

சடக்கென்று அவள் பதில் சொன்னாள் :

"அப்படி ஒண்ணும் நான் நெனக்கல்லே."

"பின்னே, ஏன் அப்பிடிக் கேட்டே?" பிடி கிடைத்துவிட்டது

போலிருந்தது சுடலைமுத்துவுக்கு.

"இல்லே, பணமும், சுத்தமும், மதிப்புமா ஒருத்தியைப் புடிச்சிருக்கலாமுன்னு தோணுதோ?"

ஒரு நிமிஷத்திற்குப் பிறகு அவனிடமிருந்து பதில் வந்தது:

"அப்படிக் கெடச்சிருந்தா இன்னும் கொஞ்சம் நல்லா இருந்திருக்கும்."

ஒரு மனைவி கேட்டுச் சகித்துக்கொள்ளக்கூடிய வார்த்தைகளா இவை? அவளை விடவும் ஒசத்தியாக ஒருத்தி கிடைத்திருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்று கணவன் எண்ணுகிறான்; ஆசைப்படுகிறான். ஆனால், அதை அவனே மனைவியிடம் கூசாமல் கூறுவதா? அதைக் கேட்டுக் கோபத்தால் அவள் கொதித்தெழுந்தாள் என்றால் அதில் தவறு என்ன இருக்க முடியும்? அவனை எதிர்த்துப் பேசும் ஆவேசம் முதன் முதலாக அவளுள் அன்று தலை தூக்கிற்று. கேள்விக்கு மேல் கேள்விகளாக அவள் கேட்கத் துடித்தாள்.

"அப்படியானா, வேறே ஆள் பார்த்துவெச்சிருக்கியா?"

"அப்பிடி நான் சொன்னேனா?"

"அவளை இங்கே கொணாந்து வெச்சிக்க."

அன்று முதன் முதலாக அவனை அவள் எதிர்த்தாள். தன் உரிமையை நிலைநிறுத்தினாள். தன் கணவனை எச்சரித்தாள். முன்பு அவளை அவன் சுற்றிக்கொண்டிருந்தபோது, எத்தனையோ வாக்குறுதிகள் அவன் அவளுக்குக் கொடுத்திருக்கிறான்.

"நான் ஒண்ணையும் மறக்கல்லே. நீ சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் எனக்கு நெனவிருக்கு. எனக்கு நீ வஞ்சனை செஞ்சியானா . . ."

அவனை பயமுறுத்தும் சொற்கள் வெளிப்பட்டன. அவள் தொடர்ந்து கேட்டாள்:

"என் கழுத்திலே தாலி கட்டிட்டு . . . எங்கே அவளைப் பாத்து வச்சிருக்கே?" அவள் அவனுக்கு உரிமைப்பட்டவள் என்பதை அவள் அவ்வாறு நிலைநாட்டினாள்.

"எப்படியும் ஒரு தோட்டிச்சிதானே ஒனக்கு வருவா. எங்கே அவ,

சொல்லு."

சுடலைமுத்து ஆபத்தில் மாட்டிக்கொண்டுவிட்டான். வள்ளியிடம் மனசைப் பறிகொடுத்துவிட்டு, அவள் நினைவாகவே கிடந்த நாட்களை அவன் இன்னும் மறந்துவிடவில்லை. மறக்கவும் இயலாது. வாழ்வின், ஆசாபாசங்களின் உருவமாகவே அவன் அவளைக் கண்டான். உலகத்தில் ஒருவனுக்குக் கிடைக்க முடியாத, அடைய முடியாத பெரும் பேறாகவே அவள் அவன் கண்களுக்குத் தோன்றியிருக்கிறாள். அப்போதெல்லாம் அவள் முன்னிலையில் கால் தடுமாறாமல் நடப்பதும், குரல் இடறாமல் பேசுவதும் அவனுக்கு இயலாத காரியங்களாக இருந்தன. அவள் சொல்வது உண்மைதான். என்றென்றும் ஆசையுடன் வைத்துக் காப்பாற்றுவதாக அவன் அவளிடம் சத்தியம் செய்திருந்தான்.

இருந்தாலும், வாழ்க்கையில் திட்டங்களும், லட்சியங்களும் கொண்ட ஒருவனுக்கு, தன் மனைவியை விடவும் இன்னும் சிறந்தவளாக ஒருத்தி கிடைத்திருந்தால் நன்றாக இருந்திருக்கும் என்னும் எண்ணம் தோன்றுவது இயல்புதானே. அதனால் தன் மனைவியிடம் அன்பில்லை என்று ஆகிவிடுமா? அவளை விலக்கிவிட வேண்டும் என்று கருதிவிட்டதாகக் கூற முடியுமா?

"அவள் எங்கே, எங்கே" என்று வள்ளி தொடர்ந்து கேட்டுக்கொண்டே இருந்தாள். அவளுடன் இப்போதெல்லாம் சுடலைமுத்து முகம் கொடுத்துப் பேசாமலிருப்பதற்குக் காரணம் 'அந்த இன்னொருத்தி' தான். 'அவள்' நினைவாகவே தன் கணவன் இருப்பதாக வள்ளி குற்றம் சாட்டினாள்.

வள்ளியின் தாக்குதல் கடுமையானது; ஆற்றல் நிறைந்தது. அவள் அழுதாள்; நெஞ்சில் அடித்துக்கொண்டாள். பைத்தியம் பிடித்தது போல் ஆகிவிட்டது அவளுக்கு.

சுடலைமுத்து செய்வதறியாமல் தவித்தான். எப்படி அவளைத் தேற்றுவது, அவள் மனசில் குடிபுகுந்துவிட்ட சந்தேகத்தை அகற்றுவது எப்படி, அந்தச் சந்தேகம் அகற்றப்படாவிட்டால், அவனது எதிர்காலத் திட்டங்களெல்லாம் தகர்ந்து தூளாவதற்கு அதுவே காரணமாகிவிடும். தன் வாழ்க்கையில் வள்ளியின் பங்கு எத்தனை முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை அன்று போல் அவன் என்றும் உணர்ந்ததில்லை; அறிந்துகொண்டதில்லை.

சுடலைமுத்து தோற்றுப்போனான்; படுதோல்வி அடைந்தான். அவளின்றி அவனால் வாழ முடியாது. அவள் அவனது தவிர்க்க

முடியாத தேவை என்பதை அவன் ஒப்புக்கொள்ள நேர்ந்தது. வள்ளி அந்த பலவீனத்தை நன்கு தெரிந்துகொண்டாள்.

# 4

அந்தக் கோடையின் பயங்கரம், அதற்குமுன் எப்போதும் இருந்ததில்லை. மழையைக் கண்டு மாதங்களாகிவிட்டன. அப்பப்பா என்ன உஷ்ணம்! பயிர் பச்சைகள் தீய்ந்து கரிந்தன. ஏதோ பயங்கரமான தொற்றுநோயின் ஆக்கிரமிப்புக்குக் கட்டியம் கூறுவது போலிருந்தது அந்தக் காலநிலை.

கடைசியில் அது வந்தேவிட்டது. வைசூரி.

வைசூரி என்றால், சாதாரண ரகத்தைச் சேர்ந்ததல்ல; அதி பயங்கரமானது. ஆறு அல்லது எட்டு நாட்களுக்குமேல் போவதில்லை. அப்புறம் சாவோலைதான். உயிரோடு கரையேறியவர்களே இல்லை என்று சொல்லிவிடலாம்.

மக்கள் பீதி அடைந்தார்கள். ஆனால் அந்தச் சமயத்திலும் ஊரில் கடை கண்ணிகளில் வியாபாரத்திற்கு ஒன்றும் குறைவில்லை; அது நடந்து கொண்டுதானிருந்தது. தொழிற்சாலைகள் இயங்குகின்றன. தெருவெல்லாம் கூட்டம் மொய்க்கிறது. வியாதி எங்கெங்கு பரவியிருக்கிறது என்பது யாருக்குமே தெரியவில்லை.

முனிசிப்பாலிட்டி என்னென்ன நடவடிக்கைகள் எடுத்தது என்பதும் எவருக்குமே புலப்படவில்லை. உருப்படியாக எதுவும் அது செய்ததாகச் சொல்ல முடியாது. மக்கள் கேள்விக் குரல் எழுப்பினார்கள். வைசூரிக்குத் தடுப்பு ஊசி போடும் இளைஞர்கள் மட்டும் அங்கும் இங்குமாகத் திரிந்து கொண்டிருந்தார்கள். அவ்வளவுதான். நகரத்தின் பக்கத்திலிருந்த குட்ட நாட்டிலும் சேர்த்தலைத் தாலுகாவின் சில பகுதிகளிலும் நோய் பரவத் தொடங்கிற்று.

மொத்தத்தில் வியாதி அபாயகரமாக மாறிக் கொண்டிருந்தது. சினிமாக் கொட்டகைகளின் உரிமத்தை ரத்து செய்யப்போவதாகவும் பேசிக்கொண்டார்கள். இரவு வேளைகளில் எந்த விதமான கூட்டங்களோ, கொண்டாட்டங்களோ கூடாது என்று தடுக்கப்போகிறார்களாம். சில தொழிற்சாலைகள் தாற்காலிகமாக

மூடப்பட்டுவிட்டதாம். ஏனெனில், அந்தப் பிரதேசங்களில் வைசூரியின் விளையாட்டு அதிகமாகப்போய்விட்டதாம். உடனே கூடவிருந்த முனிசிப்பாலிட்டியின் அவசரக் கூட்டத்தில் இந்த விஷயம் சர்ச்சைக்கு வரப்போகிறதாம். நகரசபை உறுப்பினர் ஒருவர் நோட்டீஸ் அனுப்பியிருக்கிறாராம்.

கவுன்சிலர்கள், சேர்மன், முனிசிபல் சுகாதார அதிகாரி இவர்கள் வீடுகளை எல்லாம் சினிமாக் கொட்டகைக்காரர்கள் முற்றுகையிடுவதற்கு மேற்சொன்ன பொய் வதந்தி காரணமாகிவிட்டது. நகரசபையின் அவசரக் கூட்டத்தில் சுகாதார அதிகாரி அனுப்பிவைத்த அறிக்கை வாசிக்கப்பட்டது. இவ்வளவு பயங்கரமான நிலைமை இதற்கு முன் எப்போதுமே ஏற்பட்டதில்லை என்று புள்ளி விவரங்களுடன் அவர் நிரூபித்துக் காட்டியிருந்தார். அந்த ஒரு மாத காலத்தில் ஒன்பது வைசூரிக் கேசுகள்தான் தாக்கல் செய்யப்பட்டதாம். சாவு ஏற்பட்டது இரண்டு கேசுகள் தானாம். கடந்த பத்து தினங்களாகப் புதிய கேசுகள் எதுவும் அறிவிக்கப்படவில்லையாம். இப்படி இருந்தது அந்த அறிக்கை. அந்த அறிக்கையை ஆதாரமாகக் கொண்டு தனது நோட்டீஸை வாபஸ் பெற்றுக்கொண்டார், அதைக் கொண்டுவந்த அங்கத்தினர். ஆனால் தடுப்புஊசி போடுவதற்கு மேலும் நால்வரை நியமிக்கச் சேர்மனுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.

இவ்வளவும் நடந்த பிறகு மற்றொரு விஷயம் சேர்மன் அவர்களைச் சங்கடப்படுத்திற்று. அவர் வீட்டைச் சுற்றியுள்ள வீடுகளிலெல்லாம் வைசூரி ஆட்சி செய்துகொண்டிருந்தது. அவசரமாகத் தன் மனைவியையும், குழந்தைகளையும் அவர் திருவனந்தபுரத்திற்கு அனுப்பிவைத்தார். வீட்டைப் பூட்டிவிட்டுத் தனது ஜாகையையும் தற்காலிகமாகப் பாதுகாப்பான ஓர் இடத்திற்கு மாற்றிக்கொண்டார். ஆனால், இவையெல்லாம் அவருக்குத் தற்காலிகமான அசௌகரியங்கள்தாம். அவரை ரொம்பவும் தொல்லைப்படுத்திய பிரச்னை வேறு. கடற்கரையில் வசிக்கும் தோட்டிகளின் சேரியில் ஒவ்வொரு நாளும், ஒன்று இரண்டு ஆட்கள் குறைந்துகொண்டே வந்தனர். கேசவ பிள்ளை அப்போதைக்கு நிலைமையை எப்படியோ சமாளித்துக்கொண்டு போகிறார். ஆனால் இப்படியே நிலைமை நீடித்துக்கொண்டு போகுமானால் தோட்டிகளிடையே காலியாகி வரும் இடத்தை நிரப்ப முடியாமல் ஆகிவிடும். சேர்மனும், ஓவர்சீயரும் தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கினார்கள்.

"கடற்கரையில் மட்டும்தானா இருக்கிறது, கேசவ பிள்ளை?"

"இப்போதைக்கு அப்படித்தான். இந்தப் பக்கங்களில் ஒன்றும் இல்லை."

"இருந்தாலும், இனிமேல் பரவக் கூடாது என்பதில்லையே. தொத்திக்கொண்டால் இந்தச் சனியன்கள் ஒன்றுகூட மிஞ்சாது."

கேசவ பிள்ளை அதை ஒப்புக்கொண்டார். இருபது ஆண்டுகளுக்கு முன் இப்படித்தான் ஒரு முறை ஏற்பட்டது. அன்று அசுத்தம் பிடித்த இந்தச் சனியன்கள் ஒன்றுகூட மிஞ்சவில்லை. பழைய கதையை அவர் சேர்மனுக்குக் கூறினார். பதினைந்து நாட்களில் நகரத்தில் தோட்டி என்ற வர்க்கமே பூண்டோடு அழிந்துபோய்விட்டதாம். அன்றும் கேசவ பிள்ளைதான் ஓவர்சீயராக இருந்தார். சேர்மன் ஆவலோடு கேட்டார் :

"அன்று என்ன செய்தீர்கள் கேசவ பிள்ளை?"

"எப்படியோ சமாளித்தேன். நினைத்தாலே ரொம்ப அதிசயமாக இருக்கும். பணம் நிறையச் செலவாச்சு."

"தோட்டி வேலை சுணங்கியிருக்குமே?"

"அப்படி ஒண்ணும் இல்லே; அதுக்கு நான் இடம் வெச்சுக்கிடல்லே."

"எப்படி முடிந்தது?"

"இந்த வியாதி ஆரம்பித்ததுமே, பணத்தை எடுத்துக்கிட்டுத் திருநெல்வேலிக்குப் போனேன். அங்கே கொஞ்சம் ஆட்களை ஏற்பாடு செய்துகொண்டு வந்தேன். இங்கே திரும்பிவந்து ஒரு வாரத்திற்குள் பழைய தோட்டி வர்க்கமே பூண்டோடு அழிந்துவிட்டது."

சற்று நேரம் யோசித்துவிட்டுத் தலைவர் கேட்டார்:

"இந்தத் தடவையும் நாம் திருநெல்வேலிக்குப் போக வேண்டுமோ?"

கேசவ பிள்ளை சட்டென்று பதில் சொல்லவில்லை. சேர்மன் பேசினார் :

"முன்னதாகவே போய் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாமே. எல்லாம் ஒரே குழப்பமாக முடிந்துவிடாமலிருக்க

வேண்டும்."

"நானும் அதைத்தான் நெனைச்சிக்கிட்டிருக்கேன். சொல்லணுமுன்னு இருந்தேன்."

"எவ்வளவு பணம் வேண்டிவரலாம், கேசவ பிள்ளை?"

"அப்போ ரெண்டாயிரம் கொண்டுபோனேன். ஆள் கிடைப்பது பெரும் பாடாய்ப்போச்சு. முன்பணம் கொடுக்கணும். வழிச் செலவும் கொடுக்கணும். சிரமமான காரியம்தான். நாம் அவசரப்பட்டா அந்தப் பயக கொம்புலே ஏறிக்கிடுவான்."

"சரி, எப்படியும் போய்த்தான் ஆக வேண்டும், கேசவ பிள்ளை."

கேசவ பிள்ளை ஒப்புக்கொண்டார். ஆனால் மற்றொரு முக்கியமான விஷயம் சேர்மன் மூளையில் தட்டுப்பட்டது.

"நாளைக்கே ஒரு காரியம் செய்ய வேணும் கேசவ பிள்ளை. எல்லாத் தோட்டிப் பயல்களுக்கும் ஊசி போட்டுவிடணும். நீ திரும்பி வருகிறவரையாவது வேலை நடக்க வேண்டாமா? அதுக்கு முன்னாடியே எல்லாரும் வாயைப் பிளந்துட்டா என்ன பண்ண முடியும்?"

அனுபவசாலியான கேசவ பிள்ளை அந்த அபிப்பிராயத்தை எதிர்த்தார்.

"வேண்டாம், வேண்டாம். அது இன்னும் ஆபத்து. ஊசி போட்டால் காய்ச்சல் வரும்; காய்ச்சல் வந்தால் வேலை நடக்காது. சில சமயங்களில் ஊசி போடுவதாலேயே வியாதி கிளம்பிவிடும்."

சரி என்று பட்டது சேர்மனுக்கும். கேசவ பிள்ளை மெல்லச் சொன்னார் :

"இன்னும் ஒரு சமாசாரம். கொஞ்ச நாளாகவே மனசுக்குள்ளே வெச்சிருக்கேன் சொல்லாமல். பழைய தோட்டிகளையெல்லாம் கழுத்தைப் பிடிச்சுத் தள்ள வேண்டிய காலமும் வந்துவிட்டது. பத்து வருஷங்களுக்கு மேலே இவங்களை வெச்சுக்கக் கூடாது. அது மட்டுமல்ல, காலமும் இப்போ அப்படித்தானே இருக்கிறது. சங்கம் முடங்கிப்போனப்பறமும் சங்கம் சங்கமின்னு பொலம்பிக்கிட்டுத் தானிருக்கா. இனிமேலும் சங்கம் ஏற்படக்கூடும். இவங்களை வெச்சு வேலை வாங்குவதும் சிரமம்தான். இது நல்ல சந்தர்ப்பம்."

கேசவ பிள்ளையின் கடைசி வார்த்தையின் பொருள் பிடிபடவில்லை சேர்மனுக்கு.

"எதற்கு நல்ல சந்தர்ப்பம்?"

கேசவ பிள்ளை முக்கி முனகிக்கொண்டு கூறினார்:

"இல்லே, வேலையிலிருந்து நாமாக விலக்கிவிட்டதாக ஏற்படாதல்லவா?"

"தானாகச் செத்துத் தொலையட்டும் என்று சொல்லுகிறீர், அப்படித்தானே? பேஷ்!"

பெரிய ஹாஸ்யமொன்றை உதிர்த்துவிட்ட பாவனையில் சிரித்தார் சேர்மன். கேசவ பிள்ளைக்கும் சிரிப்பு வந்தது.

"பரவாயில்லை கேசவ பிள்ளை, பரவாயில்லை!"

"இல்லை, இவங்ககூட கொஞ்ச நாட்களாகவா மாரடிக்கிறேன்! பத்துப் பதினைஞ்சு வருஷமாயிட்டா, இவங்களை எல்லாம் வெளியே புடிச்சித் தள்ளிவிட்டுப் புதியவங்களெக் கொண்டுவறது தான் நல்லது. அப்போதுதான் வேலை நடக்கும்."

சரி என்று ஒப்புக்கொண்டார் சேர்மன். ஆனாலும் அவர் இதயத்தின் ஒரு மூலை துடித்தது. அவர் கேட்டார் :

"அவர்களும் மனிதர்கள் அல்லவா? குழந்தை குட்டிகள் அவர்களுக்கும் இல்லையா?"

ஆச்சரியத்துடன் கேசவ பிள்ளை கேட்டார்:

"இவங்க மனிசப் பிறவி என்று நினைச்சிக்கிட்டிருக்கீங்களா? நல்லாயிருக்கு!"

அதுவும் சேர்மன் அவர்களுக்குக் கேட்க ரசமாக இருந்தது. செய்ய வேண்டியதைத் தாமதமின்றிச் செய்யும்படி உத்தரவு பிறப்பித்துவிட்டுக் கேசவ பிள்ளையை அனுப்பிவைத்தார். நகரசபைக்கு மிகவும் உபயோகமான மனிதர் கேசவ பிள்ளை என்னும் திருப்தி பொங்கிற்று அவருடைய மனதில். கேசவ பிள்ளை இல்லாமல் நகரசபை இயங்குவதே சிரமமாகத்தான் இருக்கும் போலிருக்கிறது.

அந்தப் பக்கத்தில் உள்ள எல்லா அம்மன் கோயில்களிலும் இரவு பகல் என்ற பேதமில்லாமல் வழிபாடுகள் நடைபெற்றவாறு இருந்தன. வழிபாடுகளெல்லாம், ஒரு மாதத்திற்கு முன்னதாகவே பதிவு செய்யப்பட்டுவிட்டன. செவ்வாய்க் கிழமை அல்லது வெள்ளிக் கிழமைகளில் கோயிலுக்குக் காணிக்கை செலுத்தும் வாய்ப்பு தங்களுக்குக் கிடைக்க வேண்டும் என்பதற்காகச் சிலர் தேவஸ்தான அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுத்ததாகக்கூடப் பேசிக்கொண்டார்கள். வழிபாடுகள் எல்லாம் லேசுப்பட்டவைகள் அல்ல. பெரும் பணம் படைத்த முதலாளிகள் ஆலப்புழை நகரத்தில் எவ்வளவு பேர் இருக்கிறார்கள் தெரியுமா? ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவர் கணக்கில் அபிஷேக ஆராதனைகள். ஒவ்வொருவர் பெயரும் தாராளமாக அடிபட்டது; அடிக்கடி காதில் விழுந்தது. முதலாளிகள் ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு வழிபாடுகள் செய்தனர். ஒருவரை ஒருவர் மிஞ்சும் எண்ணம் அவர்களிடம் தலைதூக்கியிருப்பதாகத் தெரிந்தது. இதன் மூலம் தங்கள் புகழை அதிகரிக்கச் செய்யலாம் என்பது அவர்கள் எண்ணம் போலும். ஆம், அப்படித்தானிருக்க வேண்டும். தங்கள் வியாபாரங்களை விருத்தி செய்வதற்காக அவர்கள் கையாண்ட மறைமுக விளம்பரங்களே அவை.

இந்துக் கோவில்களில் மட்டுமல்லாமல் கிருஸ்துவத் தேவாலயங்களிலும் அவர்களது மதச் சம்பிரதாயப்படி பூஜைகள் நடந்துகொண்டிருந்தன. இந்து முதலாளி கிருஸ்துவக் கோயில்களில் வழிபாடுகள் நடத்தினார். கிருஸ்துவ தனவந்தர் இந்துக் கோயில்களில் அர்ச்சனைகள் நிகழ்த்தினார். இரவு வேளைகளில் மந்திரங்களை வாய்விட்டுக் கூறியபடி புகையும் நெருப்புமாக, வீதிவலம் வந்தனர் முகமதியர்கள், தூக்கத்தைத் துறந்து.

மக்களைக் கிலி பிடித்து ஆட்டிற்று. எப்படித்தான் இந்தப் பேராபத்து ஒழியப்போகிறதோ? புஷ்பார்ச்சனைகளினாலோ, தொழுகைகளினாலோ இது ஒழியலாம். மூடக்கொள்கைகளைப் பொறுத்தவரையில் மதங்கள் ஒன்றாக இணைந்துவிடுகின்றன. எனவே அர்ச்சனையைக் கிருஸ்துவர்கள் நம்பினர். கிருஸ்துவத் தொழுகைகளை இந்துக்களும் நம்பினார்கள். ஜபமுழக்கத்துடன் முகமதியர்கள் வீதிவழி சென்றபோது, உள்ளம் நடுங்கி, உடல் நடுங்கி விழுந்து கிடந்த இந்து ஆசுவாசப்பட்டுக்கொள்கிறான்.

முனிசிபல் சேர்மன் தம் செலவில் அபிஷேக அர்ச்சனைகளுக்குச் சிறப்பாக ஏற்பாடு செய்தார். வழிபாடு முல்லைக்கல் கோயிலிலும், சுற்றுப்புறங்களிலுள்ள பிற

கோவில்களிலும் நடந்தேறிற்று. அங்கு மட்டுமா, மாதா கோயில்களிலும் விசேஷ வழிபாடு நடந்ததாம். அன்று ஊரே அல்லோலகல்லோலப்பட்டது. இந்த விசேஷங்களை ஒட்டித் தோட்டிகளுக்குத் தலைக்கு மூன்று ரூபாய் கொடுப்பதென்றும் நிச்சயித்தார்கள்.

ஆச்சு. எல்லாம் முடிந்தது. ஆனால் இத்தனை நடந்த பிறகும் அபாயம் அகன்றபாடில்லை; ஆபத்து குறைந்தபாடில்லை. கடற்கரையில் வசிக்கும் தோட்டிகளிடையே மரண தேவதை ஆனந்தமாக விளையாடினாள். வடக்குப் பகுதியில் வசிப்பவர்களும் பீதியுற்றார்கள். இப்போது என்ன செய்ய முடியும்?

சுடலைமுத்துவின் தலைமையில் தோட்டிகளெல்லாம் ஒன்றுகூடி ஆலோசித்தார்கள். கடவுளைச் சரண் புகுந்தால்தான் இந்த மாபெரும் ஆபத்திலிருந்து தப்ப முடியுமென்று சுடலைமுத்து கூறியதை எல்லாரும் பலமாக ஆமோதித்தார்கள். ஈசன் அருளைப் பெற வழிபாடுகள் செய்ய வேண்டுமென்று அவன் சொன்னபோது யாரும் அதை எதிர்க்கவில்லை. இப்படித் தோட்டிகள் தங்கள் செலவில் கோயில்களுக்கும் தேவாலயங்களுக்கும் காணிக்கைகள் செலுத்துவது என்று முடிவு செய்தனர். அதற்கான பொறுப்பை சுடலைமுத்து ஏற்றுக் கொண்டான். எல்லாவற்றையும் மேற்பார்வையிடும் பொறுப்பு ஓவர்சீயர் கேசவ பிள்ளைக்கு.

இரண்டொரு தினங்களில் பணம் வசூலாகிவிட்டது. சண்டை சச்சரவின்றி வேறு எந்தக் காரியத்தையும் இத்தனை மன ஒருமைப்பாட்டுடன் அந்தத் தோட்டிகள் செய்ததில்லை. வசூலான தொகை முழுவதும் மறுநாள் ஓவர்சீயரிடம் ஒப்படைக்கப்பட வேண்டும். சுடலைமுத்து சாயங்காலம் பணத்தை எண்ணிக் கணக்கிட்டுக் கொண்டிருந்தபோது வள்ளி கேட்டாள் :

"எல்லாப் பணமும் வந்திடுச்சா?"

சுடலைமுத்து 'உம்' என்றான்.

"நம்ம பங்குப் பணம் போட்டாச்சுதா?"

சுடலைமுத்து ஏதோ முனகினான். வள்ளிக்கு அவநம்பிக்கை ஏற்பட்டது. அவனை அவள் படிப்படியாகப் புரிந்துகொண்டு வருகிறாளல்லவா? தங்கள் பங்குக்குப் போட வேண்டிய பணம் போடப்படவில்லை என்பதை உணர்ந்துகொண்டாள். போடப்படும் என்றும் தோன்றவில்லை. அவள் சற்று நேரம் மௌனமாக இருந்தாள்.

பிறகு, "கடற்கரையிலே ஒரு கிளவி கெடக்கா, நாதி இல்லாதவ. அவளுக்கும் சேத்துக் காசு போடணும்."

கொஞ்சம் அதிகாரத் தோரணையில் வள்ளி இதைச் சொன்னாள். மனப்பூர்வமாக யோசித்துச் சொன்னதல்ல. அவளறியாமலே அவள் குரலில் சற்றுக் கனம் ஏறிவிட்டது. அவ்வளவுதான். மூன்று ரூபாய் முழுசாகக் கையிலிருந்து கழன்றுவிடும். தலையை நிமிர்த்திக் கேட்டான் சுடலைமுத்து :

"எதுக்கு?"

"எதுக்கா? எதுக்காக இதெல்லாம் செய்யிறே?"

சுடலைமுத்துவுக்குப் பதில் வரவில்லை.

"கையிலே காலணாக் கெடையாது" என்று கூறியபடி உள்ள பணத்தையெல்லாம் துண்டுத் துணியொன்றில் சுற்றி முடித்தான்.

வள்ளியால் பொறுக்க முடியவில்லை. அழுகையே வந்துவிட்டது அவளுக்கு. அவளுடைய ஆசை, உரிமை இரண்டும் புறக் கணிக்கப்படுகிறது. ஒவ்வொரு நாளும் இரண்டு மூன்று என்று இப்படி மண்டையைப் போட்டுக்கொண்டிருந்த இடத்தில் அந்த ஏழைக் கிழவி தன்னந்தனியாக இருக்கிறாள். தெய்வ வழிபாட்டில் அவளுக்குப் பங்கு இல்லை.

கணவனிடம் பொரிந்து தள்ளுவதற்காகத் துடித்த தன் நாவைச் சிரமப்பட்டு அடக்கிக்கொண்டாள் வள்ளி. ஆனால் எவ்வளவு நேரம்தான் பொறுத்துக்கொண்டிருக்க முடியும்? அவள் கேட்டாள் :

"இதிலிருந்து எம்பிட்டுப் பணம் மிச்சம் புடிக்க நெனைச்சிருக்கே?"

சற்றும் எதிர்பாராத தாக்குதல் இது. அதுவும் வள்ளியிடமிருந்து வருகிறது. சுடலைமுத்து சிறிது நடுக்கத்துடன்தான் அவளைப் பார்த்தான். அவன் பணத்தை எண்ணிக்கொண்டிருந்த போதே அவளும் மனசுக்குள் தொகையைக் கணக்குப்போட்டு விட்டாளோ? எப்படியும் அவன் மனதில் சிறு அழுக்கு ஏறித்தானிருக்கிறது. அது இல்லை என்று யாரும் சொல்ல முடியாது. ஒரே அதட்டலில் அவள் வாயைக் கட்டிவிட அவனுக்கு உரிமை உண்டென்றாலும் அவன் இப்படித்தான் சொன்னான் :

"இது பொது வளிபாடுதானே. எல்லாருடைய பணமும் வேணுமுண்ணு இல்லே. வேணுமானா அதையும் நாளைக்குப் போட்டுடுறேன்."

அப்போதைக்கு அந்தக் கணவன் மனைவி மோதல் அடங்கிற்று. வள்ளி வெற்றி பெற்றுவிட்டாள். அந்த வெற்றி, அவள் மனசுக்குள் அகப்பட்டுக் கிடந்த பல ஆசைகளைக் கிளறிவிட்டது. கிழவி தனியாளாக அங்கே கிடக்கிறாள். அவளையும் தன்னுடன் கூட்டி வைத்துக்கொண்டால் என்ன? இப்போதைக்கு அவள் இங்கு வந்து இருக்கட்டுமே. அவளைக் காப்பாற்ற வேண்டியது வள்ளியின் கடமை அல்லவா? அந்தக் கடமையைத் தன் கணவன் மூலமாக நிறைவேற்றிக் கொள்வது அவளது உரிமை அல்லவா?

இந்தச் சமயம் சுடலைமுத்துவின் சிந்தனை வேறொரு கிளையில் பாய்ந்து ஓடிற்று. வள்ளி அவனுக்குப் பெரும் தடையாக வந்துவிட்டாள். குதர்க்கமான கேள்விகளை அவள் கிளப்புகிறாள். அவள் முன்னால் அவன் சிறியவனாகிவிடுகிறான். இல்லை, இல்லை; அவள் அவனைச் சிறியவனாக்கிவிடுகிறாள். அவனது திட்டங்களைப் பற்றி அவளுக்கு என்ன தெரியும், எப்படித்தான் அந்தத் திட்டங்களை நிறைவேற்றப்போகிறானோ?

வள்ளி சொன்னாள் :

"இந்தச் சனியன் ஒளியரதுவரை அத்தைக் கிளவியை இங்கே கொணாந்து வெச்சுக்கிடணும்."

குடி கெட்டது! சுடலைமுத்து ஏற்கனவே நினைத்ததுதான் இது. அந்தக் கிழவி கடற்கரைக் குடிசையிலேயே மரித்துவிட்டால் தேவலை என்றுதான் அவன் எண்ணியிருந்தான். ஆனால் விஷயம் இப்போது திசை திரும்புகிறது. அவளைக் கூட்டிவர சுடலைமுத்து ஒப்புக்கொண்டான்.

வள்ளிக்கு மீண்டும் ஒரு வெற்றி. அவள் மனசு ஆறுதல் அடைந்தது.

சுடலைமுத்து மறுநாள் வேலை முடிந்து வீடு திரும்பியதும் தன் மனைவியிடம் சொன்னான் :

"உன் அத்தைக்குக் காய்ச்சல்."

சுந்தரத்தின் பெண்சாதிக்குக் காய்ச்சல் அதிகமாயிற்று. ஒரு

செவ்வாய்க் கிழமை அவள் உடம்பில் கொப்புளங்கள் தோன்றின.

அங்கும் அந்த நோய் பரவிவிட்டது. சுடலைமுத்து கவலைப்பட்டான். ஒன்று அங்கிருந்து தன் ஜாகையை மாற்றிவிட வேண்டும்; அல்லது வியாதிக்காரியை அங்கிருந்து அகற்ற வேண்டும். திடுதிப்பென்று அங்கிருந்து குடிபெயரச் சுடலைமுத்துவுக்கு வசதியில்லை.

தோட்டிகள் பிச்சாண்டியின் வீட்டில் கூடினார்கள். சுடலைமுத்துவும் போயிருந்தான். பரவிவரும் இந்த வியாதி பற்றி நன்கு தெரிந்த ஒருவனையும் அங்கு அழைத்திருந்தார்கள். அவன் வியாதிக்காரியைப் பார்த்துவிட்டுத் தன் அபிப்பிராயத்தை வெளிப்படையாகச் சொன்னான். வியாதி லேசுப்பட்டதல்லவாம். கொப்புளங்கள் இன்னும் தெளிவாக வெளிப்படாததால் மூன்று நாட்களுக்கு முன் இன்ன வியாதி என்று சொல்ல முடியாதாம்.

சுந்தரம் வாய்விட்டு அழுதான். பன்னிரெண்டு வயதுச் சிறுமியாக இருந்தபோது அவளை அவன் மணந்துகொண்டான். இருவரும் சண்டை சச்சரவிட்டுக்கொள்வார்கள் என்றாலும், ஒருவர் மேல் ஒருவர் உயிரையே வைத்திருந்தார்கள். ஒருநாள்கூட அவள் சோறு பொங்காமலிருந்ததில்லை. கள் குடிக்கக் காசு இல்லை என்று சொன்னால் உடனே கொடுப்பாள். இப்படி அவளை எவ்வளவோ அவனால் புகழ முடியும். சுந்தரம் ரொம்பவும் வேதனைப்பட்டான். ஐந்து குழந்தைகள் அவனைச் சுற்றிச் சுற்றி வருகின்றன. மூத்ததுக்கு எட்டு வயசு. அவன் பரிதாபக் குரலில் கேட்டான் :

"இதுகளை வெச்சுக்கிட்டு நான் என்ன செய்வேன்?"

வைத்தியர் சொன்னார் :

"தீந்து போயிடுமுன்னு சொல்ல முடியாது. இப்போ இருக்கிற நிலமையைப் பாத்தா வெள்ளைமுத்துப் போல இருக்கு. இனிமே கறுத்த முத்தாக மாறினாலும் மாறலாம். அப்போ கவனமாயிருக்கணும்."

தன் மனைவியின் நலத்திற்குச் சுந்தரம் கடவுளைப் பிரார்த்தித்தான். அதைத் தவிர அவனால் வேறு என்ன செய்ய முடியும்?

அடுத்து, வியாதிக்காரிக்குச் செய்ய வேண்டிய சிகிச்சை பற்றிப் பேச்சு எழுந்தது. நாட்டு வைத்தியம் என்றால் ஐம்பது ரூபாய் குறைந்த

பட்சம் வேண்டிவரும். உதவிக்கு யாராவது இரண்டு பேர் கூட இருக்க வேண்டும். வைத்தியமும் வேண்டும். வைத்தியர் சொன்னார் :

"இது கொறஞ்ச செலவுதான். கொறவுண்ணா ரொம்பக் கொறவு. கணக்குப் போட்டுப் பாருங்க. வியாதி புடிச்சவளைச் சேத்து மூணு பேருக்குச் செலவு என்னாகும்? அப்புறம் மருந்துக்கு எல்லாம் என்ன ஆகும் பாருங்க."

சுடலைமுத்து இடைமறித்தான் :

"நாட்டு வைத்தியம் வெறும் பயித்தியக்கார வெளையாட்டுத்தான். அதுவும் இந்த வியாதிக்கு அது சொகப்படாது. வேணுமானா நெறயக் காசு செலவழிக்கணும். அதுக்கு ஒங்கிட்ட வளி இருக்கா?"

சுந்தரம் கையை விரித்துவிட்டுக் கண்ணீர் நிறைந்த கண்களுடன் ஆகாயத்தைப் பார்த்தான்.

"கையில் கால் துட்டு இல்லியே, என்னப் படச்ச தெய்வமே!"

அந்தக் கூக்குரல் எல்லார் மனசையும் கரைத்தது. சுடலை முத்து நிலைமையைப் புரிந்துகொண்டான். எல்லாரையும் முந்திக்கொண்டு அவன் பேசினான் :

"ஆசுபத்திரிக்கு அனுப்பணுமுன்னுதான் எனக்குப்படுது. அதுதான் நல்லது."

இதற்கு என்ன பதில் வருகிறது என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் சுடலைமுத்து. அவன் அபிப்பிராயம் ஏற்றுக்கொள்ளப்படுமா என்பது சந்தேகமாகவே இருந்தது. அத்தனை தூரத்திற்கு சுந்தரத்தின் பரிதாபநிலை எல்லோர் மனத்தையும் தொட்டிருந்தது.

சுப்பு சற்றுக் கடுமையான குரலில் கூறினான் :

"அப்படிண்ணா அவளை இப்பமே கொன்னுபோடுங்க!"

"அதுக்காகவா சர்க்கார்காரங்க பணம் செலவளிச்சு ஆசுபத்திரி கட்டியிருக்காங்க? ஆசுபத்திரிக்குக் கொண்டுபோனா செத்து போவாளாமில்லே!" என்று எதிர்த்துப் பேசினான் சுடலைமுத்து.

வடிவேலு சுப்புவை ஆமோதித்தான்.

"பணமிருந்தா ஆசுபத்திரி தேவலை; இல்லைன்னா எல்லாம் அப்படி அப்படித்தான்."

தன் யோசனையை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் என்று சுடலைமுத்துவுக்குப்பட்டது. அவன் மற்றொரு உபாயத்தைப் பிரயோகித்தான்.

"ஆயுசு இல்லைன்னா எப்படியானாலும் சாவத்தான் செய்யும். பின்னே என்ன, சரியா கவனிச்சோம் என்கிற ஆறுதலாவது இருக்கும்."

வடிவேலு சொன்னான் :

"அப்படி ஒண்ணுமில்லே. ஆயுசு முடியாமலும் சாகிறாங்க."

"அது எப்படி?" என்று கேட்டான் சுடலைமுத்து.

இதற்கிடையில் பழனி வாயைத் திறந்தான் :

"இந்த வியாதிக்கு நாட்டு வைத்தியம்தான் நல்லது."

சுந்தரம் பேசவே இல்லை. அவன் அழுதுகொண்டிருந்தான். குழந்தைகள் ஒன்று சேர்ந்து கூட்டமாக உட்கார்ந்திருந்தன. ஒன்று சுந்தரத்தின் மடியில் படுத்தபடி தூங்கிப்போய்விட்டது. தன் நண்பர்கள் சொல்வது போல் சுந்தரம் எதையும் செய்யத் தயாராய் இருந்தான். அவர்களை விட்டால் அவனுக்கு வேறு யார் இருக்கிறார்கள்?

சுடலைமுத்து கேட்டான் :

"சரி, அப்படீன்னா நாட்டு வைத்தியத்துக்காவது பணமிருக்குதா?"

சிறிது நேரம் அங்கே மௌனம் நிலவிற்று. சுந்தரமோ தன் கையில் ஒன்றுமில்லை என்று சொல்லிவிட்டான். சுப்பு அமைதியைக் குலைத்துப் பேசினான் :

"இங்கே இருபது வீட்டுக்காரங்க இருக்கோம். தலைக்கு ரெவ்வெண்டு ரூவா போடணும். வைத்தியம் செய்யணும் . . . இவன் நம்ம மனிசனில்லையா?"

வடிவேலு அதை ஆமோதித்தான். மற்றவர்களும் அதை

ஏற்றுக்கொண்டார்கள்.

சுடலைமுத்து பேசாமல் இருந்தான். எல்லாரும் தலை நிமிர்ந்து உட்கார்ந்தார்கள். இப்போது ஒரு வழி பிறந்துவிட்டதல்லவா? மறுநாளே தங்கள் பங்கைக் கொடுத்துவிடக்கூட அவர்கள் சம்மதித்தார்கள். ஏதோ பெரிசாக யோசனை கூறுவது போல் சுடலைமுத்து சொன்னான் :

"இது தொத்து வியாதீங்கிறது தெரியுமா?"

சுப்பு முந்திக்கொண்டு பேசினான் :

"தெரியுமப்பா, நல்லாத் தெரியும்."

"அப்படியானா, இதை இங்கேயே போட்டிருந்தா எல்லாருக்கும் தொத்திக்கிடும். பொறவு பணம் வசூல் செய்யறது யாரு?"

சுப்புவுக்கு ஆத்திரம் வந்தது.

"எல்லோரும் விழுந்து சாவமடா! எப்படியும் அஞ்சு வருசத்துக்கு ஒரு தரம் இப்படி ஏதாவது வசூரியோ, வயத்துப் போக்கோ வந்து நம்ம எனத்தையே சுருட்டிக்கிட்டுப் போவத்தானே செய்யுது."

சுடலைமுத்துவை ஆதரிப்பவர்கள் அங்கு யாரும் இல்லை என்பது தெளிவாகிவிட்டது. அவன் சொன்னான் :

"என்னாலே கால் துட்டுக் கொடுக்க முடியாது."

ஒருவன் குண்டு வெடிப்பது போல் கத்தினான் :

"உன் காசே வேண்டாமின்னு சொல்றோம்."

வேறொருவன் தொடர்ந்தான் :

"ஆமாம், உன் காசை இதுக்கு நாங்க வாங்கப்போறதா இல்லே. ஒன்னை எங்களுக்கு நல்லாத் தெரியும். எங்க சங்கத்தை ஒடச்சவன் நீதானே. டேய், இந்தக் கொளந்தைங்களைப் பாருடா. அந்தப் பொம்பளையை ஆசுபத்திரியில் கொண்டு போட்டுக் கொன்னுப்புடலாமுன்னு சொல்றியே. அக்குருமம்டா இது! நீ ஒரு மனுசன்தானா?"

சுடலைமுத்துவுக்குக் கோபம் வந்தது. சட்டென்று அங்கிருந்து

வெளியேறினான். அந்தத் தோல்வி அவனுக்கு மன உளைச்சலைத் தந்தது.

வள்ளி ஆவலுடன் விஷயத்தை விசாரித்தாள்.

"அவுங்க அதை இங்கேயே போட்டு ஊரையே முடிச்சிடுவாங்க" என்றான் சுடலைமுத்து.

வள்ளிக்கு ஒன்றும் புரியவில்லை. ஆசுபத்திரிக்கு அனுப்பா விட்டால் நோய் பரவும் என்பதை அவன் விளக்கினான். ஆசுபத்திரிக்கு அனுப்பினால் வியாதிக்காரி இறந்துபோவாள் என்று வள்ளி சொன்னாள். அனாதையாகப் போகவிருக்கும் குழந்தைகளுக்காக அவள் வருந்தினாள். சுடலைமுத்து தன் அபிப்பிராயங்களை விழுங்கினான். அவளைக் கண்டு அஞ்சினான். இருந்தாலும் ஒரு திட்டம் அவன் மனசில் உருவாகி உறைந்துவிட்டிருந்தது.

அந்தக் காட்சி மனசை உருக்கக்கூடியதாய் இருந்தது. நோயாளி, தன்னை ஆசுபத்திரிக்கு அனுப்பக் கூடாது என்று கெஞ்சுகிறாள். ஆசுபத்திரி என்றால் சாவு என்பது அவளது திட நம்பிக்கை. யாருடைய உதவியும் அவளுக்குத் தேவையில்லை. அவள் குடிசையில் அவள் கிடக்கிறாள். செத்தால் செத்துவிட்டுப் போகிறாள். இதுதான் அவள் முறையீடு.

தோட்டிகள் செயலற்று நின்றார்கள். முனிசிபல் சேர்மன் அவளை ஆசுபத்திரிக்குக் கொண்டுபோக வேணுமென்று உத்தரவிட்டு விட்டார். ஜன நெருக்கடியான இடத்தில் வைசூரி நோயாளியை வைத்திருக்கக் கூடாதாம். அதனால், தூக்கிக்கொண்டு போக வேண்டியவர்கள் நீண்ட கழிகளுடன் வந்துவிட்டார்கள். தோட்டிகளால் என்ன செய்ய முடியும்? பணம் வசூலித்து சுந்தரத்தின் பெண்சாதிக்கு வைத்தியம் செய்யலாம் என்று அவர்கள் திட்டமிட்டார்கள்; கொஞ்சம் வசூலும் நடந்தது. ஆனால் என்ன பிரயோசனம்? சுந்தரம், தன் குழந்தைகளின் தாய் இறந்துவிட்டது போல் அழுது புலம்பினான். குழந்தைகளும் செய்வதறியாது தாயைச் சூழ்ந்து கொண்டிருந்தன. ஏதோ அசாதாரணமான சம்பவம் நடைபெறுகிறது. அவ்வளவுதான் குழந்தைகளுக்குத் தெரியும். துயரம் தேங்கிய முகத்துடன் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தன அவை.

அவளைத் தூக்கி வைத்தபோது வீறிட்டு எழுந்த கதறல் உடல் நோயினால் ஏற்பட்டதல்ல; அது மரண வேதனைதான். அவளை,

அவள் விரும்பும் உலகத்தை விட்டுப் பெயர்த்துக்கொண்டு போகிறார்கள். பார்க்க ஆசைப்படும் எதையும் அவளால் இனிப் பார்க்க முடியாது. மீண்டும் அவள் அலறினாள். "என்னே இங்கேயே போட்டிடுங்க."

சுந்தரம் அதைக் கேட்டான். தன் மனைவியை மயானத்திற்குக் கூட்டிக்கொண்டு போவதாகவே அவனுக்குத் தோன்றிற்று. கடைசியாக அவளை ஒருமுறை பார்க்க அவன் துள்ளி எழுந்தான். பக்கத்தில் நின்றவர்கள் அவனைப் பிடித்துக்கொண்டார்கள். அப்போதும் அவள் அலறிக்கொண்டிருந்தாள்:

"என் குளந்தைங்களை ஒருதரம் காமிப்பீங்களா?"

சுந்தரம் அவள் வேண்டுகோளை நிறைவேற்றும்படி கேட்டுக்கொண்டான். ஆனால் அது முடியாத காரியம்; அந்தக் கடைசி ஆசையை நிறைவேற்றி வைக்கமாட்டார்கள். வியாதி வைசூரி அல்லவா?

சுந்தரத்தின் பெண்சாதியைத் தூக்கிப் போட்டுக்கொண்டு குடிசையைவிட்டு வெளியேறினார்கள். குழந்தைகளில் ஒன்று இதைப் பார்த்துவிட்டு, "அம்மா, அம்மா!" என்று கூச்சலிட்டது. அது தன் தாயைப் பார்த்து இரண்டு நாட்களாகிவிட்டன.

மற்ற குழந்தைகளும் இதைப் பார்த்தன. கைக்குழந்தை தன் அம்மாவுக்காக அழத் தொடங்கிற்று. சுந்தரத்தின் இடுப்பில் தொத்திக்கொண்டு அது கதறிற்று. அதற்கு மூத்த குழந்தையும் அழுதுகொண்டே இருந்தது.

எல்லோருக்கும் மூத்தது, "அம்மாவெ எங்கே தூக்கிட்டுப் போறாப்பா?" என்று கேட்டது.

யாரும் பதில் கூறவில்லை. ஆனால், குழந்தைகளின் தாய் மட்டும் தன் ஒவ்வொரு குழந்தையின் பெயரையும் சொல்லி அழைத்தவாறிருந்தாள். அவள் அங்கிருந்து அப்புறப்படுத்தப்படுவதை எல்லாரும் பார்த்துக்கொண்டு நின்றார்கள். சுந்தரம் நெஞ்சு உடைந்து புலம்பினான் :

"அம்மூ! அம்மூ!"

தூரத்திலிருந்து பதில் வந்தது :

"என்னா?"

அந்த மயான யாத்திரையைப் பார்த்தவர்களெல்லாம் பெருமூச்செறிந்தார்கள்.

சுடலைமுத்துவும் வள்ளியும் தங்கள் குடிசை வாசலில் நின்று பார்த்துக்கொண்டிருந்தார்கள். வள்ளி அழுதுவிட்டாள். அம்முவைத் தூக்கிச் சென்றவர்கள் தூரத்தில் சென்று மறைந்ததும் சுடலைமுத்து அமைதி அடைந்தான்.

"அப்பாடா, ஒருமட்டுக்கும் இந்த ஆபத்து ஒளிஞ்சது."

இதயமற்ற இச்சொற்கள் வள்ளியின் நெஞ்சைக் கிளறின. பீறிட்டு எழுந்த உணர்ச்சியை அவளால் அடக்க முடியவில்லை. தன்னையறியாமலே பல்லைக் கடித்துக்கொண்டு சொன்னாள் :

"மகாப் பாவி!"

சுடலைமுத்து துணுக்குற்றான். வள்ளி பேசினாள் :

"அந்தப் பெத்த தாயையும் கொன்னுப்புட்டு, குஞ்சும் குளுவானு மாயிருக்கிற கொளந்தைங்களையும் அனாதையா ஆக்கிப்புட்டு . . ."

மிச்சத்தைச் சொல்ல அவளால் முடியவில்லை. அவர்கள் இருவருக்குமிடையே பெருத்த இடைவெளி விழுந்துவிட்டாற் போலிருந்தது. சற்று நேர மௌனத்திற்குப்பின் சுடலைமுத்து சொன்னான் :

"அவங்க விதி அவ்வளவுதான்."

"விதி! பின்னே எதுக்காக சாமி படத்துக்கு முன்னாடி கண்ணை மூடிக்கிட்டு நிக்கிறியாம்?"

அதிகாரக் குரலில் சுடலைமுத்து கத்தினான் :

"போ, போ, ஊட்டுக்குள்ள போ."

"அடே . . . யப்பா!"

அவள் போய்விட்டாள்.

சுடலைமுத்து, தோட்டிகள் வாழும் பகுதிக்கு நேரவிருந்த

ஆபத்தை ஒழித்துக்கட்டுவதற்காக, முனிசிப்பாலிட்டியில் தன் செல்வாக்கைப் பயன்படுத்தி, சுந்தரத்தின் மனைவியை ஆசுபத்திரிக்குப் பலியிட அனுப்பி வைத்த பிறகும், அந்த ஆபத்து அங்கிருந்து அகன்றுவிடவில்லை. மறுநாள் வீரபாகு என்னும் தோட்டிக்குக் காய்ச்சல் கண்டது. இப்படி ஒரே வாரத்தில் தோட்டிகள் காலனியில் இருபது பேருக்கு மேல் வைசூரி பீடித்துக்கொண்டது. அநேகமாக எல்லாருமே ஆபத்தை நெருங்கிய நிலையில் இருந்தனர்.

சுடலைமுத்து வேறு வீடு தேடத் தொடங்கினான்.

சுந்தரத்தின் மூத்த குழந்தை, கடைசிக் குழந்தையை இடுப்பில் தாங்கிக்கொண்டு தெரு வழியே அலைவதை இப்போது பார்க்கலாம். மற்ற மூன்று குழந்தைகளும் பின் தொடர்கின்றன. சில தினங்களில் அந்தக் குழந்தைகளின் எண்ணிக்கை மூன்றாகக் குறைந்தது. இன்னும் சில தினங்கள் ஓடி மறைந்தன. இப்போது மூத்த குழந்தையின் இடுப்புச் சுமை ஒழிந்துவிட்டது. மற்றவைகளும் சின்னாபின்னமாகப் பிரிந்துபோய்விட்டன. கடைத் திண்ணைகளிலும், வீதியோரங்களிலும் அழிந்துபோன அந்தக் குடும்பத்தின் மிச்ச சொச்சங்களைப் பார்க்கலாம்.

வைசூரி எத்தனை பேரைக் கொன்றது, எத்தனை பேரை உயிரோடு வைத்திருக்கிறது என்பதற்குக் கணக்குக் கிடையாது. எது எப்படிப் போனாலும் சரி, இம்முறையும் கேசவ பிள்ளை முனிசிபாலிட்டியைக் காப்பாற்றிவிட்டார். அவரும் சுடலைமுத்துவுமாக திருநெல்வேலிக்குப் போய் ஆட்களைக் கொண்டுவந்தார்கள். அவர்கள் நன்றாக வேலை செய்யக்கூடியவர்களாம். முனிசிப்பாலிட்டிகளுக்குக் கூடுதலாகக் கொஞ்சம் பணம் செலவாகிவிட்டால்தான் என்ன கெட்டுவிடப் போகிறது!

# 5

மலக்கிடங்கின் அருகிலிருக்கும் தோட்டிகள் காலனி. நிலவெரிக்கும் இரவு. குடிசைகளுக்கு முன்பக்கமுள்ள திறந்தவெளியில், ஒரு குடத்தைச் சுற்றித் தோட்டிகள் அமர்ந்திருக்கிறார்கள். அவர்களில் நமக்குப் பரிச்சயமான மனிதன் ஒரே ஒருவன் தானிருக்கிறான். அவன் பிச்சாண்டி. மற்றபடி எல்லாம் புதுமுகங்கள்.

சம்பளம் பெற்ற மறுநாள், எல்லாருடைய குடிசைகளிலும் அடுப்பு எரிகிறது. குழந்தைகளின் அழுகை ஓலமும், தாய்மார்களின் அதட்டலும் - மனிதர்கள் மாறிவிட்டாலும் குறிப்பிடும்படி வேறு மாற்றம் எதுவுமில்லை. இப்படி எத்தனையோ பேரை அந்தக் குடிசைகள் பார்த்திருக்கின்றன. இரண்டு அல்லது மூன்று வருஷங்கள்; அவ்வளவுதான் - ஏதாவது தொத்துநோய் அவர்களை வாரிச் சுருட்டிக்கொண்டு போய்விடும். இதுதான் அந்த வர்க்கத்தின் சரித்திரம்.

ஒவ்வொருவரும் தங்கள் சம்பளக் கணக்கைச் சொல்லுகிறார்கள். பழனியாண்டிக்கு அன்று பன்னிரண்டு ரூபாய் கிடைத்ததாம். தன் சம்பளம் பதினெட்டு ரூபாய் என்னும் உண்மையை ஒரு மாதத்திற்கு முன்புதான் அவன் அறிந்துகொண்டிருந்தான்.

"அதை எப்படிடா தெரிஞ்சிக்கிட்டே?" என்று கேட்டான் முனிசாமி.

"ஓவர்சீர் எசமான் சொல்லித் தெரிஞ்சிக்கிட்டேன்."

அப்படியானால் அது பொய்யாகத்தான் இருக்க முடியும் என்று எல்லாருக்கும் தோன்றிற்று.

ஒருவன் கேட்டான் :

"நமக்கெல்லாம் ஒரே மாதிரித்தான் சம்பளம். மம்மட்டிக்காரங்களுக்கும், குப்பை கூட்டுறவங்களுக்கும் அதே

கணக்குத்தான்."

அதை எல்லாராலும் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆனாலும் அவர்களிடையே சூடான விவாதம் எதுவும் கிளம்பவில்லை. வீண் சர்ச்சை எதற்கு சம்பளம் எவ்வளவானால் என்ன? அவர்களுக்குத் தான் முழுச் சம்பளமும் என்றுமே கிடைப்பதில்லையே.

அவர்கள் பேச்சு மேலும் தொடர்ந்தது. கடைசியில், அவர்கள் ஒவ்வொருவரும் சுடலைமுத்துவுக்குக் கொடுத்த தொகை பற்றிப் பேச்சு ஆரம்பமாயிற்று. முனிசாமி ஏழு ரூபாய் கொடுத்தானாம்; பழனியாண்டி ஆறு ரூபாய் கொடுத்தானாம்; வள்ளிநாயகம் கொடுத்ததோ எட்டு ரூபாய். இப்படிக் கணக்கு வந்துகொண்டிருந்தது.

ஒருவன் கேட்டான் :

"ஆமா, நம்ம கையிலிருந்து இண்ணைக்கி எத்தனை ரூவா சுடலைமுத்துவுக்குக் கெடச்சிருக்கும்?"

மற்றொருவன் கணக்குப் போட்டான்; எல்லாருமே கணக்குச் சொல்ல ஆரம்பித்தார்கள். இடையே கணக்குத் தப்பிப்போய்விட்டது. மீண்டும் கூட்டிப் பார்த்தார்கள். எண்பது ரூபாய் வந்தது. அப்போது ஒருவன் சொன்னான் :

"கடற்கரையிலேயும் அவனுக்குப் பணம் கெடச்சிருக்குமே."

மற்றொருவன் கேட்டான் :

"இப்ப, நாம அஞ்சு ரூவா கடன் வாங்கினோமுன்னு வெச்சுக்கிடுவம்; எத்தனை ரூபா அவனுக்குத் திருப்பிக் கொடுக்கணும்?"

முனிசாமி ஐந்து ரூபாய் வாங்கிவிட்டு ஏழு ரூபாய் திருப்பிக் கொடுத்தானாம். கடன் வாங்கிப் பதினைந்து நாட்களே ஆகியிருந்தன. இப்படி ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் கணக்கைச் சொன்னார்கள். இந்த விவகாரங்களின் நெளிவு சுளிவுகளையெல்லாம் நன்கு அறிந்தவன் போல் வள்ளிநாயகம் கூறினான் :

"ஆனா, இந்த லாபத்திலே பாதி ஓவர்சீர் எசமானுக்குத்தான் போவுது. அவருதானே எல்லாம் பிரிச்சு எடுத்துக் கொடுக்காரு."

"இருந்தாலும் 'ஐயா' கையிலே காசு சேர்ந்திருக்கும்."

இத்தனை நேரம் பேசாதிருந்த பிச்சாண்டி, பேச்சில் கலந்து கொண்டான்.

"காசா? அவன் கையில் ரூபா சேர்ந்திருக்கும் ரூபா. கள்ளுக் கிள்ளு குடியாமே அவன் உருப்படறான். பாருங்க, அவன் வீடும் வயலும் வாங்கிடுவான்."

வள்ளிநாயகம் கேட்டான் :

"அவன் ஏன் நம்ம பக்கத்திலே இருந்து வெலகிப்போய் தங்குதான்?"

"அது அப்படித்தான், அவன் குளந்தைங்க தோட்டி ஆகாமயிருக்க வேணாமா? அதுக்குத்தான்."

பிச்சாண்டி சுடலையின் வாழ்க்கை வரலாற்றை விவரித்தான். இசக்கிமுத்துவின் சாவு, சுடலைமுத்துவின் கல்யாணம், இப்படியே சொல்லிக்கொண்டுபோய், கதை தோட்டிகள் சங்கம் பற்றிய இடத்திற்கு வந்தபோது, பிச்சாண்டி உணர்ச்சிவசப்பட்டுச் சொன்னான்.

"சொடலை எனக்கு நெருங்கின சினேகம்தான். ஆனா அந்தப் பாவி செஞ்ச ஒவ்வொரு காரியத்துக்கும், நான் ஒரு ஆம்புளைத் தோட்டியினா பதில் கேக்காமெ இருக்கமாட்டேன். ஒட்டும் ஒறவும் வேறே விசயம். ஆமா, அதுமட்டும் நிச்சயம்."

சங்கத்தின் சரித்திரத்தைக் கேட்க அவர்கள் துடித்தார்கள். பிச்சாண்டி விவரித்தான். கடைசியில், "அவன் சதிவேலையில்லே செஞ்சிருக்கான்" என்றான்.

"ஆமா."

ஒரே குரலில் அந்த பதில் எல்லாருடைய நாவினின்றும் வெளிப்பட்டது.

தங்கள் சம்பளம் எவ்வளவு என்று அவர்களுக்குத் தெரியாது. இன்னும் அவர்கள் ஏமாற்றப்பட்டுக்கொண்டுதானிருக்கிறார்கள். இந்த அறிவு எவ்வளவோ பேசிய பிறகுதான் அவர்களுக்கு ஏற்பட்டது. அவர்களுடைய மயக்கம் தெளிந்தது. அவர்கள் சங்கம்

அமைக்கத் தீர்மானித்தார்கள். அதைச் செயலில் கொண்டுவர, ஆலப்புழைப் பட்டணத்தைப் பற்றிப் பூரண அனுபவ அறிவுவாய்ந்த பிச்சாண்டிதான் தகுதியானவன் என்பது ஒருவனுடைய கருத்து.

பிச்சாண்டியும் ஒப்புக்கொண்டான் நெஞ்சைத் தட்டிக்கொண்டு.

"நான் சங்கத்தை உருவாக்கறேன். எனக்குத் தெரியும். எனக்குத் தெரியும். ஆனா எல்லாருக்கும் ஒரு விஷயம் ஞாபகமிருக்கணம். தைரியமா நிக்கணம். விட்டுக்கொடுக்கப்படாது. சுடலைமுத்து எதிர்க்க வருவான். அதையும் ஞாபகம் வச்சுக்கிடணம்."

முனிசாமி சரேரென்று எழுந்து நின்று சொன்னான்:

"யாரு வேணுமானாலும் எதிர்க்கட்டும், நமக்குச் சங்கம் வேணும்."

ஆம். எதையும் எதிர்த்துப் போராட அவர்கள் தயார். அவர்களுக்குச் சங்கம் வேண்டும்.

தன் தலைமை ஸ்தானத்தை எண்ணிப் பிச்சாண்டி கர்வப்பட்டுக் கொண்டான். தலையைக் குலுக்கினான்.

"சரி, அப்படியானா நீங்க ஒரு காரியம் செய்யணும். பட்டினி கெடந்தாலும் சரிதான். இனிமே சொடலைமுத்துகிட்டே கடன் வாங்கக் கூடாது. இதுக்கு சம்மதிச்சா, மத்த விசயங்களை நான் கவனிச்சுக்கிடுவேன்."

"ஆமா அது நல்லதுதானே."

அந்த விஷயத்தை எல்லாரும் ஏகமனதாக ஒப்புக்கொண்டார்கள்.

அடுத்த திட்டம் பற்றி அவர்கள் பேசினார்கள். ஒரு கூட்டம் கூட்ட வேண்டும். அதற்கு நாளும் நிச்சயித்தார்கள். எல்லாம் ரகசியமாக இருக்கவேண்டுமென்று பிச்சாண்டி எச்சரிக்கை விடுத்தான்.

இவ்வாறு, அவர்களிடையே மீண்டும் வர்க்கபோதம் தலைதூக்கிற்று. பிச்சாண்டி அவர்களுடைய தலைவனாகிவிட்டான்.

ஏதோ மயக்க நிலையிலிருந்த பிச்சாண்டி சுயஉணர்வுக்கு வந்ததும், அவனது உற்சாகம் செத்துவிட்டது. சுடலைமுத்துவை

என்னென்ன பேசினோம் என்று அவன் எண்ணிப்பார்த்தான். அவன் சொன்னவை எல்லாம் உண்மைக்குப் புறம்பானவை அல்லவென்றாலும், அவன் அவற்றைச் சொல்லாமலே இருந்திருக்கலாம். அவனது வார்த்தைகள் எப்படியும் சுடலைமுத்துவின் காதுக்கு எட்டாமலிராது. அவன் முகத்தில் எப்படி விழிப்பது? அவனைப் பிச்சாண்டி நேசிக்கிறான்; இப்போதும் நேசிக்கிறான். சுடலைமுத்து நல்ல நிலையை அடைந்ததில் பிச்சாண்டியைப் போல், சுத்தமான மனசுடன் மகிழ்ச்சியடைபவர்கள் வேறு யாரும் கிடையாது. அவன் 'பெரிய மனிசனாக' உயர்ந்ததில் பிச்சாண்டிக்கு எவ்வளவோ பெருமைதான். ஆபத்து சமயங்களிலெல்லாம் சுடலைமுத்துவுக்குப் பக்கபலமாக, உறுதுணையாக நின்றது பிச்சாண்டி அல்லாமல் வேறு யார்?

சுடலைமுத்துவால் தனிப்பட்ட முறையில் பிச்சாண்டிக்கு எந்த விதமான பிரயோசனமும் இல்லை. ஆனாலும் அவனிடம் பிச்சாண்டிக்குப் பிரியம்தான். இந்தப் பிரியம் அர்த்தமற்றதாகத் தோன்றலாம். ஆனால் இம்மாதிரிப் பிணைப்பு சாதாரணமாக ஏற்படுவதில்லையா? இனம் தெரியாத ஒரு பாசம்.

மற்றொரு விஷயம், இனிமேல் சுடலைமுத்துவையும் எதிரியாக நினைத்துப் போராட வேண்டிவரும். அதற்கு வேண்டிய மன வலிமை தனக்கு இருக்குமா என்று சந்தேகப்பட்டான் பிச்சாண்டி. என்ன இருந்தாலும், சங்கம் என்று ஒன்று இல்லாமல் முடியாது.

இப்படி, தோட்டி காலனியில் பேச்சு நடந்துகொண்டிருக்க சவக்கோட்டைப் பாலத்திற்குப் பக்கத்திலுள்ள தன் வாடகை வீட்டின் சன்னல் கதவுகளையெல்லாம் அடைத்து மூடிவிட்டு, உள்ளே பணத்தை எண்ணிக் கணக்குப் பார்த்துக்கொண்டிருந்தான் சுடலைமுத்து. அவன் அருகில் வள்ளி நிற்கிறாள். தொகையை எண்ணித் திட்டப்படுத்தியதும், அவன் ஏதோ கணக்குப் போடத் தொடங்கினான். கணக்கு வெகு நேரத்திற்கு நீண்டுவிட்டது.

வள்ளி ஏதேதோ கேட்க எண்ணினாள். தன் புருஷன் இதுவரை எவ்வளவு பணம் சம்பாதித்திருப்பான் என்று அறியும் ஆவல் அவளுள் எழுந்தது. முனிசிபல் சேர்மனிடம் தன் புருஷன் எவ்வளவு கொடுத்து வைத்திருப்பான்? வீடும் நிலமும் வாங்குவதற்கு என்ன வேண்டி வரும்? இப்படி எத்தனையோ கேள்விகள். ஆனால் தன் புருஷன் பணம் எண்ணிக்கொண்டிருக்கிறபோது குறுக்கிட்டு ஏதாவது கேட்கலாமா? அப்புறம் கணக்குத் தப்பிப் போனாலும் போய்விடும். ஆனால் அவளுள் ஒருவித எதிர்ப்பு மனோபாவம் தலைதூக்கிற்று.

அவன் போடுகிற கணக்குகளை அவளும் தெரிந்துகொள்ளக் கூடாதா? அவளிடம் மறைக்கும்படி அதில் என்ன இருக்கிறது?

நாணய ஓசை எழாதபடி மெதுவாகப் பணத்தை அள்ளிப் பைக்குள் போட்டான் சுடலைமுத்து. எத்தனை பேராசை! அந்தப் பணம் அவளுக்கும் உரிமையானதல்லவா?

வள்ளி கேட்டாள் :

"எவ்வளவு ரூவா இருக்கு?"

அவள் குரல் கொஞ்சம் உரத்துக் கேட்டது. சுடலைமுத்து பதில் சொன்னான் :

"கத்தாதே, மெதுவாக் கேளு."

"ஏன் அப்படி?"

"யாரு காதிலேயாவது விளுந்து வைக்கும்."

"விளுந்தா?"

சுடலைக்குக் கோபம் வந்தது. "அப்படியானா, 'இங்கே பணம் இருக்குதுடோய்'ன்னு கூச்சல் போடு."

பணப் பையைப் பெட்டிக்குள் வைத்துவிட்டு எழுந்தான் சுடலைமுத்து. வள்ளியின் மனசுக்குள் கிளர்ந்து எழுந்த ஒருவித ஆக்கிரமிப்பு மனோபாவம், அவளைப் போட்டு அலைக்கழித்தது. எல்லா சங்கதிகளும் அவளுக்குத் தெரிந்தாக வேண்டும். அவ்வாறு தெரிந்துகொள்ளும் உரிமை தனக்கு உண்டு என்பதை அவள் நிலைநாட்டியாக வேண்டும். ஆனால், அவள் கேட்காமலே அவன் எல்லாவற்றையும் அவளிடம் கூறியிருக்க வேண்டாமா? அப்படி அவள் எதிர்பார்ப்பதில் என்ன தவறு இருக்க முடியும்?

தான் நினைத்த அளவுக்குத் தன் பெண்சாதி சாமர்த்தியசாலி அல்ல என்கிற தோரணையில் பேசினான் சுடலைமுத்து.

"இப்படி எல்லாம் பேசுவதால் என்ன ஆச்சு? வீடும் நிலமும் வாங்கணுமுன்னா இப்படி இன்னும் கொஞ்ச நாளு களியணும். வீட்டுக்காரி கொணமா இருந்தாத்தானே எல்லாம் ஒளுங்கா முடியும்."

வள்ளி பளிச்சென்று கேட்டாள் :

"என்னவாம் என் கொணத்துக்குக் குத்தம்?"

"ஒன்னாலே ஒரு பிரயோசனமும் இல்லே. இல்லேன்னா, இங்கே இருந்துக்கிட்டே கொஞ்சம் காசு பணம் சேக்க முடியாதா?"

"அதுக்கு, எங்கிட்டே நீ கொடுத்தா வெச்சிருக்கே?"

"கொடுத்தாலும் பிரயோசனமில்லே."

காசு சேர்க்கும் வழியை விஸ்தாரமாக விவரித்துச் சொன்னான் சுடலைமுத்து. அவர்களது அண்டை வீட்டுக்காரர்களெல்லாம் பணமுடை உடையவர்கள்தாம். நல்ல வட்டிக்குக் கடன் கொடுக்கலாமே அவர்களுக்கு? ஜாக்கிரதையாகச் செய்தால் பணம் மிகத் துரிதமாகச் சேர்ந்துவிடாதா?

அவன் கூறியவைகளை எல்லாம் கவனமாகக் கேட்டாள் வள்ளி. ஆனால் ஒன்றும் அவள் மனசில் ஏறவில்லை. அதுமட்டுமல்ல, அவளுக்கே இனம் தெரியாத ஒரு குரோதமும், துவேஷமும் அவளுள் வளர்ந்துகொண்டிருந்தது. அவள் சொன்னாள் :

"இப்படி உறிஞ்சி, உறிஞ்சிக் காசு சேர்த்தா அது ஒருநாளும் தங்காது."

அவளது வார்த்தைகளில் தொனித்த துவேஷ உணர்ச்சியை அவன் புரிந்துகொள்ளவில்லை. ஆனால் அதன் அர்த்தத்தைப் புரிந்துகொண்டான்.

"பின்னே பெரியவங்க எப்படித்தான் பணம் சேக்கிறாங் களாம்?"

உலக விவகாரங்களை எல்லாம் தான் தெரிந்துகொண்டது எப்படி என்பதைச் சுடலைமுத்து தொடர்ந்து விவரித்தான். மண்வெட்டியும் வாளியுமாகக் கக்கூசுகளில் ஏறி இறங்கும்போதெல்லாம், மற்ற தோட்டிகளைப் போலன்றி, புதிய புதிய விஷயங்களை அவன் பார்த்துப் பார்த்துப் படிக்கிறான்; கேட்கிறான்; தெரிந்துகொள்ளுகிறான். இவ்வாறு தெரிந்துகொண்டவைகளைச் சந்தர்ப்பச் சூழ்நிலைகளுக்கு ஏற்பத் தன் வாழ்க்கையிலும் பிரயோகிப்பதற்குரிய அறிவு அவனுக்கிருக்கிறது. ஆனால் ஒரே ஒரு குறை; அவன் மனைவிக்குத்தான் ஒன்றும் புரியமாட்டேன் என்கிறது.

"ஒன்னே நான் ஏன் தோட்டி வேலைக்கு அனுப்பாமே இருக்கேன்னு நெனச்சுப் பாத்திருக்கியா? அனுப்பினா இன்னும் காசு கெடைக்கத்தானே செய்யும்? இந்த வீட்டைத் துப்புரவா வைவைன்னு ஏன் சொல்லுறேன்; யோசிச்சுப் பாரு. எல்லாத்தையும் ஒரு நோக்கத்தோடேதான் செய்யிறேன். ஆனா, ஒனக்கு ஒரு எளவும் மண்டையிலே ஏறமாட்டேங்குது."

இதைத் தொடர்ந்து சுடலைமுத்து மீண்டும் ஒருமுறை தன் வாழ்க்கைத் தத்துவங்களை எடுத்து அவள் முன் பரப்பினான். அவன் இன்று செய்யும் ஒவ்வொரு செயலும் அவனுக்காக அல்ல, அவளுக்காகவும் அல்ல. அடுத்த தலைமுறையைக் கருத்தில் கொண்டே அவன் பாடுபடுகிறான். தனது பரம்பரையின் எதிர்காலம் நிலை எவ்வாறிருக்கும் என்பதுதான் இன்று அவனை அலைக்கழிக்கும் பிரச்னை. அவர்கள் தோட்டிகளாகக் கூடாது. அதுவரை தான் சம்பாதித்தவை என்னென்ன என்று கணக்குச் சொன்னான் அவளிடம். முன்னூறு ரூபாய் முனிசிபல் சேர்மனிடம் கொடுத்து வைத்திருக்கிறான். மொத்தம் எல்லாமாகச் சேர்ந்து எழுநூறு ரூபாய் இருக்கும். இப்போது கைவசமிருக்கும் பணத்தில் ஒரு பங்கையும் மறுநாள் சேர்மனிடம் கொடுக்கப்போகிறான்.

வள்ளியின் வெறுப்புணர்ச்சி சற்று அடங்கிற்று. இவ்வளவாவது விஷயம் தெரியவந்ததே. இருந்தாலும் திருப்தி ஏற்படவில்லை. அவளுடன் எல்லாவற்றையும் கலந்து ஆலோசித்துச் செய்வது அவளுக்குப் பெருமை அல்லவா? அது அவள் உரிமை அல்லவா? பிரயோசனமற்றவள், குணம் கெட்டவள் என்பது போன்ற குற்றச்சாட்டுகளை அவளால் பொறுக்க முடியவில்லை.

அவள் கேட்டாள் :

"சேர்மன் ஐயா பணத்தைத் திருப்பி கொடுக்காமலிருந்திட்டா?"

சுடலைமுத்து நடுங்கிப்போனான். திருப்பிக் கொடுக்காவிட்டால்? கொடுக்காவிட்டால் என்ன செய்ய முடியும்? பணமல்லவா? பணம் என்றால் பிணமும் வாயைத் திறக்குமாமே! ஆசை யாரை விட்டது?

சுடலைமுத்துவுக்கு மூச்சுத் திணறிற்று. அவன் தவிப்பை வள்ளி கவனித்துக்கொண்டிருந்தாள். சிறிது ரசித்தாள் என்றுகூடச் சொல்லலாம்.

முதன் முதலில் சேர்மனிடம் பணம் கொடுத்தபோது சுடலை

முத்துவின் கையில் இத்தனை பணம் இருக்கவில்லை. இத்தனை பேராசை இருக்கவில்லை. வள்ளிக்கும் புத்தி இருக்கத்தான் செய்கிறது. உலக விவகாரம் அவளுக்கும் தெரிகிறது. இருந்தாலும், சேர்மன் ஐயாவைப் போன்ற ஒரு பெரிய மனிதர் தோட்டிக்குத் துரோகம் செய்வாரா?

அன்று இரவு தன் மனைவியுடன் பலமாகச் சர்ச்சை செய்தான் சுடலைமுத்து; எவ்வளவோ விஷயங்களைப்பற்றி வள்ளியின் கருத்துகளை அவன் ஆதரித்தான். ஆனாலும், அவனது வாழ்க்கைத் திட்டங்களில் ஒன்றுபட்டுப் போகுமளவுக்கு அவள் வளர்ந்திருப்பதாக அவனுக்குத் தோன்றவில்லை.

பிச்சாண்டி சங்கத்தைக் கூட்ட உறுதி பூண்டுவிட்டான். சுடலை முத்துவிடம் அவன் யோசனை எதுவும் கேட்கவில்லை. சுடலை முத்துவைத் தனிமைப்படுத்திவைக்க வேண்டும் என்பதுதான் தோட்டிகளின் முடிவு. அவனுடன் எந்தத் தொடர்பும் வேண்டியதில்லை.

எப்படியும் நாசமாய்ப் போகட்டும் என்றுதான் சுடலை முத்துவுக்கும் தோன்றிற்று. அவர்கள் சங்கம் அமைத்துக்கொள்ளட்டும்; அவனைத் தனிமைப்படுத்திவைக்கட்டும். ஆனால் தன்னோடு எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ள வேண்டாம் என்று அவர்கள் எண்ணுவது - நடைமுறையில் சாத்தியமற்ற காரியம் என்பது சுடலைமுத்துவுக்குத் தெரியும். கடன்படாமல், ஆலப்புழைத் தோட்டிகள் வாழ்க்கை நடத்தும் காலம் வரப்போகிறதா, என்ன? மற்ற தோட்டிகளுக்கும் அவனுக்கும் பலவந்த முடிச்சிடும் விவகாரம் அதுதான்.

ஆனால் அப்படியும் விலகி நிற்க சுடலைமுத்துவால் முடியவில்லை. சங்கம் அமைக்கப்படவிருந்த சங்கதி ஓவர்சீயருக்குத் தெரிய வந்தது. சேர்மனுக்கும் எட்டிற்று. அந்த முயற்சியைத் தகர்த்தெறியும் பொறுப்பு சுடலைமுத்துவுக்கு அல்லாமல் வேறு யாருக்கு?

மீண்டும் எதிர்க்க வேண்டிய நிலைமை சுடலைமுத்துவுக்கு ஏற்பட்டுவிட்டது. யாரை? பிச்சாண்டியைத்தான். அதுமட்டுமல்ல, தோட்டிகள் இப்போது ஒன்றுபட்டு நிற்கிறார்கள். ஆனால் இந்த உண்மையைச் சேர்மனிடம் சொன்னால் அவருக்கு ஏறாது.

"பிச்சாண்டி கிட்டே நீ முறிச்சிக்கிட்டா என்னடா வந்திடப்

போகிறது?" - இப்படிக் கேட்டார் ஓவர்சீயர் எசமான். தர்ம சங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டான் சுடலைமுத்து. அவன் சொன்னான் :

"பிச்சாண்டி அண்ணனெ முறிச்சிக்கிட முடியாது. சண்டைக்கி வர மனிசன் இல்லே அவன். சண்டை போடவே தெரியாத மனிசன்."

ஓவர்சீயருக்கு அது புரியவில்லை. சுடலைமுத்து சொன்னான் :

"அப்படியானா, பிச்சாண்டி அண்ணனுக்குச் சீட்டுக் கிழிச்சிட்டா என்ன?"

அது நல்ல யோசனைதான். ஆனால் அதில் ஒரு விபரீதம் ஏற்படக்கூடும். பிச்சாண்டி இப்போது தோட்டிகளின் தலைவன். அவனை வேலையிலிருந்து பிரித்துவிட்டால், எல்லோரும் ஒன்று சேர்ந்துகொண்டு வேலைநிறுத்தம் செய்தாலும் செய்யலாம். முன் யோசனை இன்றி அவசரப்பட்டு ஏதாவது செய்தால் குழப்பம் விளைந்துவிடக்கூடும்.

எப்படியாவது, தோட்டிகளின் ஒன்றுபடும் முயற்சியைத் தகர்த்தெறிய வேண்டுமென்று ஓவர்சீயர் கண்டிப்பாக இருந்தார்.

மறுநாள் சுடலைமுத்து பிச்சாண்டியைப் பார்த்தான்; பேசவில்லை. அதற்கு மறுதினம், மலக்கிடங்கில் நல்ல கக்கூசுகள் எவ்வாறு இருக்க வேண்டும் என்பது குறித்துச் சர்ச்சை நடந்தபோது, சுடலைமுத்து வேண்டுமென்றே பிச்சாண்டியைக் கேலி செய்தான். மூன்றாவது நாள் பிச்சாண்டி சுடலைமுத்துவை ஏசினான் என்று கதை பரவிற்று. அன்று சாயங்காலம் பிச்சாண்டி சுடலைமுத்துவை அவன் வீட்டிற்குப் போய்ப் பார்த்தான். மன வேதனையுடன் கூறினான் :

"நான் அப்படிச் சொல்லவுமில்லே, சொல்லவும் மாட்டேன். நீ நல்லா இருக்கதெப்பத்தி நா சந்தோசப்படத்தான் செய்யிறேன். சத்தியம் இது."

வாயில் வந்தபடி பிச்சாண்டியை ஏசினான் சுடலைமுத்து. 'வீட்டை விட்டு வெளியே போ' என்றுகூடச் சொன்னான். கண்ணீருடன் பிச்சாண்டி படி இறங்கிப் போவதைப் பார்த்துக்கொண்டிருந்த வள்ளி கேட்டாள் :

"என்னுது இது?"

அதற்குப் பின்னால் வள்ளி, பிச்சாண்டி - சுடலைமுத்து இருவருக்குமிடையேயுள்ள தொடர்பு பற்றித் தன் கணவனைக் கேட்டறிந்தாள். தங்கள் குடும்பத்துக்காகப் பிச்சாண்டி என்னென்ன உதவிகள் செய்திருக்கிறான் என்றும் கேள்விகளை அடுக்கித் துளைத்தாள்.

சுடலைமுத்துவுக்குக் கடந்தகாலச் செய்திகளை எல்லாம் மறக்கவே முடியவில்லை. ஒவ்வொரு சம்பவமும் நினைவில் குவிந்தது. அவனிடம் அன்பு கொண்ட மனிதன் உலகில் ஒரே ஒருவன்தான் உண்டு. அவனே பிச்சாண்டி. இப்படியெல்லாம் இருந்தாலும் பிச்சாண்டியை முறித்துக்கொள்ள வேண்டிய அவசியம் சுடலைமுத்துவுக்கு ஏற்பட்டு விட்டது. வள்ளிக்குப் புரியாத விஷயம் இது. ஏன், யாருக்குமே புரியாது.

அன்று ஒரு புதிய சேதியுடன் சுடலைமுத்து மலக்கிடங்கை அணுகினான். அப்போது அங்கு பழனியாண்டி மட்டும்தான் இருந்தான். மற்றவர்கள் வந்து சேரவில்லை. அந்தச் செய்தி சுடலைமுத்துவின் மனசில் திமிறிக்கொண்டிருந்தது. இல்லை, அதை வெளியேற்றுவதற்கு ஏதோ ஒன்று உள்ளேயிருந்து நெட்டித் தள்ளிக்கொண்டிருந்தது. இனம் தெரியாத ஒரு காரணத்தால் அந்தச் செய்தி வறண்டுபோன அவன் தொண்டை வழி வெளியேறத் திக்கித் திணறியது. அவன் சொல்லப்போவது முக்கியமானதொரு விஷயம்.

உணர்ச்சிப் பெருக்கால் மன வெளி நெறிந்துபோன நீண்ட நிமிஷங்கள் சுடலைமுத்துவின் வாழ்க்கையில் இது போல் எப்போதுமே தோன்றியதில்லை. அவன் தன்னையறியாமலே பழனியாண்டியிடம் அந்தச் சேதியைச் சொல்லிவிட்டான் :

"ரெட்டியாரு வீட்டுல களவு போயுட்டுதாம்" - குரலைத் தணித்துக்கொண்டு அவன் சொன்னான். "அது பிச்சாண்டி அண்ணனாயிருக்குமுண்ணு பேச்சு அடிபடுது."

பழனியாண்டி சுடலைமுத்துவின் பக்கம் நெருங்கிக் கேட்டான்.

"அண்ணைக்கு நடந்ததே, அந்தக் களவா?"

"ஆமா."

சுடலைமுத்து அலட்சிய பாவத்தில் தொடர்ந்தான் :

"ஒரு கொளந்தெ களுத்திலேருந்து

அறுத்தெடுத்துப்பிட்டானாம்."

"போலீசுக்குத் தெரிஞ்சாச்சா?."

"தெரிஞ்சிருக்கும். நாம வாயைத் திறக்கப்படாது."

சுடலைமுத்து வேலையைச் சுருக்க முடித்துவிட்டுப் போய்விட்டான்.

தோட்டிகள் குடியிருப்பில் இச்செய்தி காட்டுத் தீயாகப் படர்ந்தது. பிச்சாண்டி திருடிவிட்டான்!

பிச்சாண்டி, தான் நிரபராதியென்று கூச்சல் போட்டபின் சத்தியமும் செய்தான். தன் வீட்டைச் சோதனை செய்து பார்த்துக்கொள்ளும்படி சொன்னான். "திருட்டுச் சொத்து கையிலிருந்தால் நான் இப்படிப் பசியால் செத்துக்கொண்டிருப்பேனா?" என்று அவன் கேட்டான். அவன் வீட்டில் இரண்டு வேளை அடுப்பெரிந்து எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டன. நாற்பது வயசுக்கிடையில் இந்த மாதிரி ஒரு காரியம் அவன் செய்திருப்பானா?

முனுசாமி சொன்னான் :

"கொஞ்ச நாளெக்கி இங்கிருந்து ஓடி ஒளிஞ்சுக்கிட்டா என்ன?"

அந்த அபிப்பிராயத்தை எல்லோரும் ஆதரித்தார்கள். உண்மை முடிவில்தான் வெளிப்படும். அதற்கு முன்பே ஆபத்து நெருங்கிவிட்டால் என்ன செய்வது? பிச்சாண்டி இதயம் உடைந்துபோய்ச் சொன்னான் :

"எங்கொளந்தெக என்ன செய்யும்?"

வள்ளிநாயகம் ஆறுதல் கூறினான் :

"அதைப் பத்தி நீ கவலைப்படாதே. நாங்க பாத்துக்கறோம். ஆபத்து வேளேல அதுங்க எங்க கொளந்தெகதான். எங்க வீட்டு அடுப்புப் புகஞ்சா அதுலெ அதுங்களுக்கும் பங்குண்டு."

பழனியாண்டியும் முனுசாமியும் ஒப்புக்கொண்டார்கள்.

"அப்படீன்னா இன்னைக்கு ராத்திரியே கம்பிய நீட்டிரணும். ஒரு சமயம் போலீசுக்காரங்க தேடிக்கிட்டுத் திரிவாங்க."

அதையும் எல்லோரும் ஆமோதித்தார்கள்.

அப்பொழுது மற்றொரு பிரச்னை உதித்தது. 'லீவு' வாங்காமல் போனால் திரும்பி வருகிறபோது வேலையிருக்குமா? எப்படி லீவு எடுப்பது? அந்தப் பொறுப்பை முனுசாமி ஏற்றுக்கொண்டான். ஓவர்சீயரைப் பார்த்து அவன் லீவு கேட்பதாகச் சொன்னான். ஆனால் அதில் ஒரு கஷ்டம் இருக்கிறது. லீவு அனுமதிக்கிறதென்றால் அவருக்கு ஐந்து ரூபாயாவது கொடுத்தாக வேண்டும்.

கண்ணீர் வழியப் பிச்சாண்டி சொன்னான் :

"எங்கையிலே காத்துட்டுக் கெடையாது."

ஒரு நிமிஷத்திற்கு மௌனம் நிலவியது. பிறகு முனுசாமி சொன்னான் :

"நாம் பணம் வசூல் செய்யணும்."

முனுசாமியிடம் ஏழு சக்கரம் இருந்தது. வள்ளிநாயகத்தின் கையிருப்பு ஒன்பது சக்கரம். அப்படி ஒவ்வொருவரும் அவர்களால் இயன்ற தொகைக்கு வாக்களித்தார்கள். மற்றொரு பிரச்னை : என்ன காரணத்தைக் காட்டி 'லீவு' கேட்பது? காய்ச்சல்தான்.

ஒவ்வொருவரும் அளவுகடந்து நம்பிக்கை வைத்துள்ள, பரிசுத்தமென்று எண்ணுகிற பரம்பொருளின் பேரைச் சொல்லி, பிச்சாண்டி லீவு எடுப்பதன் உண்மைக் காரணத்தை வெளியே சொல்லுவதில்லையென்று சத்தியம் செய்தார்கள். தன் குடும்பத்தைத் தோழர்களிடத்திலும் தெய்வத்தினிடத்திலும் ஒப்படைத்துவிட்டுக் கூக்குரலுக்கும் அழுகை ஓலங்களுக்குமிடையே தன் குழந்தைகளை வாரியணைத்து முத்தமிட்டுவிட்டுப் பிச்சாண்டி வெளியேறினான்.

மறுநாள் வள்ளிநாயகமும் முனுசாமியும் சுடலைமுத்துவிடம் விஷயங்களை விசாரித்தார்கள்.

சுடலைமுத்துவுக்குத் தகவல் கிடைத்தது ஒரு போலீசுக்காரனிடமிருந்தாம். முனுசாமி சொன்னான் :

"ஆனால், அதைப் பிச்சாண்டி செய்யல்லெ."

சுடலைமுத்து பொருள் பொதியச் சிரித்தான்.

"ஒங்களுக்கொண்ணும் பிச்சாண்டியண்ணெனத் தெரியாது.

அவன் பெரிய அமுக்கன்."

"கையிலெ காசு இருந்தா அதையும் வச்சுக்கிட்டு ஆராவது பட்டினி கிடப்பாங்களா?"

"அதுதான் அசல் திருடனுக்கு லச்சணம். புடிச்சுப்புடுவாங்கண்ணு செலவளிக்கமாட்டான். ஆனா அது வெளியிலே வந்திடும்."

பொன்னுசாமியும், வள்ளிநாயகமும் ஒன்றும் பேசவில்லை. ஒரு சமயம் சுடலைமுத்து சொல்வது சரியாகவே இருக்கலாம். சுடலைமுத்து தொடர்ந்தான் :

"பிச்சாண்டியண்ணனைப் பத்தி இல்லாததும் பொல்லாததும் நான் சொல்லமாட்டேன். எனக்கு ரொம்ப உதவின மனுசன். ஆனா ஒண்ணு சொல்லுதேன்: பிச்சாண்டியண்ணன் இதுக்கொண்ணும் பயப்படுற ஆசாமியில்லே."

வள்ளிநாயகம் தன் அபிப்பிராயத்தை வெளியிட்டான் :

"அது நெசந்தான், எடுத்திருக்கலாம்."

"ஆமா."

முனுசாமி ஒப்புக்கொண்டான்.

"விஷயம் அப்படித்தான்னா நகை எங்கே இருக்குதாம்?"

சுடலைமுத்து சொன்னான் :

"எங்கேயாவது இருக்கும். இல்லேண்ணா கையிலேயிருக்கும்."

முனுசாமியும் வள்ளிநாயகமும் வாய் திறவாமல் நின்றார்கள். பாவம். அவர்கள் எதையும் நம்புவார்கள்; எதையும் சொல்லி எளிதில் நம்ப வைத்துவிடலாம். சுடலைமுத்து, பிச்சாண்டி தனக்குச் செய்திருக்கும் உதவிகளை எண்ணி எண்ணிச் சொன்னான். கடைசியில் அவன் கேட்டான் :

"இப்படிப்பட்ட ஆளைப் பத்தி இல்லாதது பொல்லாதது நான் சொல்லுவேனா?"

முனுசாமி தலையாட்டி ஆமோதித்தான் :

"சொல்லமாட்டே."

சுடலைமுத்துவை விட்டுப் பிரிந்துபோன பிறகு முனுசாமி வள்ளிநாயகத்திடம் கேட்டான் :

"அப்படியானா நாம எதுக்கு அவனெக் கட்டினவளுக்கும் குளந்தெகளுக்கும் சோறு போடணும்?"

வள்ளிநாயகம் பதில் சொன்னான் :

"நானும் அதெத்தான் சொல்லுதேன்."

எண்ணிய காரியம் நடந்தது என்றாலும் சுடலைமுத்து லேசான மனதுடன் போகவில்லை. அப்போதைக்குச் சங்கத்தின் தோற்றம் சுணங்கிப்போயிற்று. பிச்சாண்டிக்குத் தோட்டிகளிடையேயிருந்த செல்வாக்கும் குறைந்தது. ஆனால் . . . அவனிடம் அன்பு வைத்திருந்த ஒரே மனிதன் சுடலைமுத்து. பிச்சாண்டியின் பேரில் அப்படியொரு திருட்டுக் குற்றம் உண்மையிலேயே ஏற்பட்டதா? அல்லது அவனை அச்சுறுத்துவதற்காக ஓவர்சியர் கட்டிவிட்டது தானா? அச்செய்தியை வெளியே சொன்னதும் பிச்சாண்டி ஊரை விட்டே ஓடிவிடுவான் என்று சுடலைமுத்து எண்ணவில்லை. எல்லாவற்றுக்கும் இப்போது காரணம் சுடலைமுத்துதான். இனி மேல் பிச்சாண்டி திரும்பிவரும்போது அவன் முகத்தை எப்படி ஏறிட்டுப் பார்ப்பது? என்ன சமாதானம் சொல்வது? சுடலைமுத்துவின் கவலை அதுதான். அதுமட்டுமல்ல, வள்ளிக்கு இந்த சமாசாரங்களெல்லாம் தெரிந்துவிட்டால் . . . அவளுக்குத் தெரியாமலிருக்குமா?

மீண்டும் தோட்டிகள் சுடலைமுத்துவிடமிருந்து கடன் வாங்கத் தொடங்கினார்கள்.

காலனியில், தோட்டிகள் ஒன்றுகூடி உட்கார்ந்திருக்கிறார்கள். முக்கியமான சில விஷயங்களை அவர்கள் கலந்தாலோசிக்க வேண்டியிருந்தது. அந்தத் திருட்டைச் செய்தவன் பிச்சாண்டிதான். நகையைப் பிச்சாண்டியின் பெண்சாதி மறைத்து வைத்திருக்கிறாள். இந்நிலையில் பிச்சாண்டியின் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அவர்களுக்கில்லை.

முனுசாமி தன் அபிப்பிராயத்தை பலமாக அடித்துச் சொன்னான். அப்படியானால் பிச்சாண்டியின் குடும்பத்திற்கு எதுவும் கொடுக்க வேண்டிய அவசியமில்லை என்று எல்லோராலும்

ஒப்புக்கொள்ளப்பட்டது. வள்ளிநாயகம் கேட்டான் :

"நாம அந்தப் பொம்புளயெ நேரே கூப்பிட்டுக் கேட்டா என்ன?"

வீரபாகு பிச்சாண்டியின் குடிசைக்கு ஓடினான்.

பழனியாண்டி கேட்டான்:

"பிச்சாண்டி எங்கே?"

அது யாருக்கும் தெரியாது.

"எவ்வளவு நாளைக்கு லீவு?"

"பதினைஞ்சு நாளைக்கு."

"அப்படீன்னா பதினாறாம் நாள் வரணுமே."

"வரணும்."

"ஆனா இப்படி எல்லாம் இருந்தா அவன் வரமாட்டான்."

"வராட்டாப் போக்களிஞ்சு போறான்."

பிச்சாண்டியின் மனைவி அலமேலு அங்கு ஆஜரானாள். பழந் துணியைச் சுற்றிக்கொண்டிருக்கும் எலும்பு உருவம் அவள். அதிகாரக் குரலில் முனுசாமி கேட்டான் :

"உண்மையைச் சொல்லிப்போடு பொம்புளே! அந்த நகைய எங்கே ஒளிச்சு வச்சிருக்கே?"

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை.

"எந்த நகை அண்ணெ?"

முனுசாமி நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டான்.

"ஹூம், ஏதுண்ணு கேக்கறே? ரெட்டியாரு வீட்டிலெ எடுத்தாந்தது."

அலமேலு கூச்சல் போட்டு அலறிவிட்டாள்.

"எதுக்குப் பொம்புளே கத்தறே? நெசத்தைச் சொல்லிப்போடு. பிச்சாண்டி அதைத் திருடிப்புட்டான்."

அந்த அப்பாவிப் பெண் என்ன பதில் சொல்லுவாள்? அவள் புருஷன் அப்படிச் செய்யக்கூடியவனில்லை. செய்ததில்லை. அதற்குக் கடவுள்தான் சாட்சி. ஆனால் அந்தச் சாட்சியை யாருமே நம்புவதில்லையே. அலமேலு அழுதாள். இன்னும் நம்பிக்கை ஏற்படுத்துவதற்காக முந்திய மாதம் தன் குடும்பம் பட்ட துயரத்தை எடுத்துச் சொன்னாள்:

"போன மாசத்திலே படியரிசி முளுசா வடிச்ச நாளில்லய்யா. கையிலே ஏதாவதிருந்தா குளந்த குட்டிங்க வயத்துக்குத் தராம இருப்பாரா? அப்படிப்பட்ட அப்பன் இல்லெ அவரு."

முனிசாமி நம்பிக்கையில்லாமல் தலையசைத்தான்.

"விறுதாலெ திருடிப்புட்டான்னு யாருமே சொல்லமாட்டாங்க. இம்மியளவு நெசமாவது இருக்கத்தான் செய்யும். சொல்லிப்போடு."

அவள் சத்தியம் செய்தாள். இதைத் தவிர வேறு என்னதான் செய்ய முடியும், சொல்ல முடியும்? முனுசாமி தன்னையொரு நீதிபதியாக எண்ணிக்கொண்டு பேசினான்:

"இதோ பாரு. இதுவரை நாலுபடி அரிசிக்கு மேலே நாங்க தந்தாச்சு. எதுக்குத் தந்தோம்? எங்க கூட்டத்தைச் சேந்தவளாச்சேண்ணுதான். இனிமே அது கெடையாது. அதெச் சொல்லத்தான் கூப்பிட்டோம். திருடினவனுக்கு உதவி செஞ்சா அதுவும் குத்தம்தான்."

அந்தக் குடும்பத்தை அவர்கள் கைவிட்டுவிட்டார்கள். அலமேலு மீண்டும் தன் பக்கம் பிசகில்லை என்பதை விளக்கிச் சொல்ல முயற்சித்தாள். யாருமே இதுவரை கண்டிராத தெய்வங்களின் மேலெல்லாம் ஆணையிட்டுத் தன் கதையைச் சொன்னாள்.

வள்ளிநாயகத்தின் மனது சிறிது இளகிற்று.

"பிச்சாண்டி நகையையும் எடுத்துக்கிட்டுத்தான் போயிருப்பான். இவளுக்குத் தெரியாமெ இருந்திருக்கும்" என்றான் அவன்.

முனுசாமி எதிர்த்தான்.

"போடா போ! ஒனக்கென்ன தெரியும்? இந்தப் பொம்புளதான் மறச்சு வைச்சிருக்கா."

கேவிக் கேவி அழுதுகொண்டே அலமேலு மீண்டும் சத்தியம் செய்தாள்.

"எங்கொளந்தெக நாலு பேர் மேலே ஆணை. நான் எடுக்கலே."

"போ போ. உன் சோலியப் பாத்துக்கிட்டுப் போ."

அலமேலு அங்கிருந்து நகர்ந்தாள். இனிமேல் அந்தக் குடும்பத்திற்கு உதவிசெய்ய வேண்டியதில்லை என்று தோட்டிகள் ஏக மனதாகத் தீர்மானித்தார்கள். பிச்சாண்டி திருடியிருக்கிறான்; அலமேலு அதை மறைக்கிறாள் என்பதுதான் அவர்கள் முடிவு.

ஓவர்சீயர் கேசவ பிள்ளை பிச்சாண்டியைப் பயமுறுத்துவதற்காகக் கையாண்ட தந்திரம்; சுடலைமுத்துவும் பிச்சாண்டியும் சண்டை போடுவதற்குக் காத்திருந்த வேளை; விஷய ஞானமில்லாத அப்பாவிகளான தோட்டிகள் - இத்தனையும் ஒன்றுசேர்ந்தபொழுது விஷயத்திற்கு ஒரு முக்கியத்துவம் ஏற்பட்டுவிட்டது. போலீசுக்காரர்கள் பிச்சாண்டியைத் தேடித் தோட்டிகள் குடியிருப்புக்கு வந்தார்கள். அவர்கள் அவன் குடிசையைச் சோதனை செய்தார்கள். அலமேலுவை ஸ்டேஷனுக்கு அழைத்துப் போனார்கள். அன்றைய தினம் ஒரு தோட்டியும் வீட்டுக்கு வரவில்லை. எல்லோரும் பயந்து போயிருந்தார்கள்.

மறுநாள் நடக்க முடியாமல் தள்ளாடியபடி அலமேலு வீட்டிற்கு வந்து சேர்ந்தாள். அவளுடைய நான்கு குழந்தைகளும் கூனிக் குறுகி உட்கார்ந்திருந்தன. முதல் நாளே அவைகள் பட்டினி. அவள் என்ன செய்வாள்?

அலமேலு படுத்த படுக்கையாகிவிட்டாள். எலும்பும் தோலுமாக இருந்த அவள் உடல் நீரடித்து ஊதிப் பருத்தது. மூத்த குழந்தை பிச்சை எடுக்க பட்டணத்திற்குப் போயிற்று. இரண்டாவது குழந்தை வியாதி பிடித்துக் கிடந்தது.

திருடனின் மனைவி அனுதாபத்திற்கு உரியவளல்ல; அவன் குழந்தைகளும் அப்படித்தான். பிச்சாண்டி திருடினான் என்று தோட்டிகள் எல்லோரும் நம்பினார்கள். முனுசாமியின் கண்டிப்பான உத்தரவிற்கு உட்பட்டு யாரும் எந்த உதவியும் செய்யவில்லை. திருடனைச் சேர்ந்தவர்களுக்கு உதவி செய்வது பெரிய

குற்றமல்லவா?

நாட்கள் மறைந்துகொண்டிருந்தன.

வியாதிக்காரியான அலமேலு சாவதற்கு நாள் எண்ணிக்கொண்டிருந்தாள்.

"இன்னம் அஞ்சுநாள் களிஞ்சுட்டா அப்பன் வந்திருவான்" என்று அவள் குழந்தைகளுக்கு ஆறுதல் சொன்னாள். அப்பன் வந்துவிட்டால் எல்லாம் ஒழுங்காகிவிடும். அப்பன் கஞ்சியும் சோறும் கொண்டு வருவான். உப்பும் புளியும் வாங்கலாம். இப்படி குழந்தைகள் எதிர்பார்த்தன.

பிச்சாண்டி ஊரை விட்டுப் போன பதினைந்தாம் நாள், அலமேலுவுக்கு எழுந்து உட்காரலாம் என்கிற நிலை ஏற்பட்டது. அன்று பொழுது அஸ்தமித்துப் பொழுது புலர்ந்துவிட்டதென்றால் - பிச்சாண்டி வந்ததும் போலீசுக்காரர்கள் அவனைப் பிடித்துக்கொண்டு போய்விட்டால்? வராமலிருந்தால் அவளும் குழந்தைகளும் என்ன ஆவது? எப்படியாவது அவன் வந்து அவளையும் குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு போய்விட்டால் அதுவே போதும்.

இரவு முழுவதும் அலமேலு கண் மூடவில்லை. அவள் கணவனின் கால் அரவம் கேட்குமா என்று எதிர்பார்த்துக் கிடந்தாள். பொழுது புலர்ந்தது. அன்றும் பிச்சாண்டி வரவில்லை.

"ஏம்மா அப்பா வரலை?"

குழந்தைகள் கேள்வி கேட்கத் தொடங்கிவிட்டார்கள். அடுத்த நாளும் அதற்கு மறுநாளும் அவன் வரவில்லை. இப்படி ஒரு வாரம் ஓடியது.

ஒருநாள் மத்தியானம் ஓவர்சீயர் ஒரு தோட்டியின் குடும்பத்துடன் அங்கு வந்தார். வீட்டிலிருந்து அலமேலுவும் குழந்தைகளும் வெளியேற வேண்டுமென்று சொன்னார். இரண்டு பானைகளும், மூன்று சட்டிகளும், இரண்டு பீற்றல் பாயும் எடுத்துக்கொண்டு, உடம்பெல்லாம் நீரடித்து வீங்கிப்போயிருந்த அலமேலு தன் குழந்தைகள் சகிதம் வெளியேறினாள். புதிய குடும்பம் அங்கு வசிக்கத் தொடங்கியது.

## 6

சுடலைமுத்து வீட்டுக்கு வந்தபோது வள்ளியைக் காணவில்லை. வழக்கமாக அவள் முன் பக்கம்தான் இருப்பாள். அவன் வேலை முடிந்து திரும்பி வருகிறபோது அவளைத் திண்ணையில் பார்க்கலாம். இன்று கதவுகளெல்லாம் திறந்து கிடந்தன. வீட்டுப் பின்புறம் யாரோ வாந்தி எடுப்பது கேட்டது. திகைத்துப்போன சுடலைமுத்து பின்புறம் சென்றான்.

வள்ளிதான் வாந்தி எடுத்துக்கொண்டிருந் தாள். வாந்தி எடுக்கும் அவஸ்தையில் வள்ளி அப்படியே சுருண்டுபோனாள். அவளுக்கு மூச்சுத் திணறுகிறது.

"வள்ளி என்ன?"

மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க வள்ளி சொன்னாள்.

"ஒண்ணுமில்லே."

"நான் போய் டாக்கிட்டரே கூட்டிவரட்டுமா?"

"வேண்டாம்."

சிறிது ஆசுவாசம் ஏற்பட்டவுடன் அவள் எழுந்தாள். சுடலைமுத்து முத்துவின் பிரமிப்பு சற்றுத் தணிந்தது.

"என்ன உனக்கு?"

அதற்குப் பதில் ஒரு புன்சிரிப்பு. என்ன வியாதி என்று கேட்கிறபோது நோயாளிகள் புன்னகை புரிவதுண்டா?

வள்ளி சில தினங்களாகவே சோர்ந்துபோகிறாள். அதன் காரணத்தைச் சுடலைமுத்து விசாரிப்பது உண்டு. ஒன்றுமில்லை என்று சொல்லிவிடுவாள். அப்போதெல்லாம் ஓயாமல் ஒழியாமல் அவள் எச்சில் உமிழ்ந்துகொண்டேயிருந்தாள். அதைப் பற்றியும் ஒரு முறை அவன் விசாரித்தான். அவள் சரியாகச் சாப்பிடுவதுமில்லை.

இப்போது வாந்தி வேறு எடுக்கிறாள். என்ன வாந்தியெடுப்பு இது?

"உனக்கு என்ன செய்யுது வள்ளி, சொல்லு."

"ஒண்ணுமில்லேன்னு சொன்னேனே."

"பின்னெ ஏன் வாந்தி எடுக்குறே?"

"ப் . . . பூ. அதுதான் வளக்கம்."

"வளக்கமா, என்ன வளக்கம்?"

மீண்டும் சிரிப்பு.

அன்று சாப்பாடு முடிந்தது. சுடலைமுத்து வெளியே எங்கும் செல்லவில்லை. சாயங்காலம் வீட்டு முற்றத்தில் நட்டுப் பயிராக்கியிருந்த செடிகளுக்குக் கிளறிக் கொடுத்துக்கொண்டிருந்தபொழுதும் அவள் வீட்டுப் பின்பக்கம் ஓங்கரிக்கிறாள். இது என்ன தொந்தரவு? அவளுக்கு வியாதியுமில்லையாம். ஆனால் ஓயாத வாந்தியெடுப்பு. என்ன என்று கேட்டால் சிரிப்பு.

கடைசியில் விஷயத்தைச் சொன்னாள். சுடலைமுத்து அவளை வாரி எடுத்துத் தாண்டவமாடினான். அதுதான் அந்தச் சிரிப்பின் அர்த்தம். தான் கர்ப்பவதி என்று ஒரு மனைவி கணவனிடம் சொல்லுகிறபோது அது அவளுடைய கர்ப்பமானாலும் அவள் வெட்கப்பட்டுக் குறுகிப்போகத்தான் செய்வாள்.

சுடலைமுத்துவின் திட்டங்களின் உருவம் விரிவடையப் போகிறது. அன்று சாயங்காலம், தோரணங்களால் தங்கள் வீட்டை அவர்கள் அலங்கரித்தார்கள். ஊதுபத்தி, சாம்பிராணி இவைகளின் வாசனை எங்கும் கமழ்ந்தது. அதோடு வாசனைப் புகை உயர்ந்து தெற்கு வீட்டு முதலாளியின் பங்களா மேல்மாடியை அடைந்தது. அன்று அந்தச் சிறு வீட்டு விளக்குச் சுடர்கள் ஒரு புதிய ஒளியுடன் பிரகாசித்தன. வள்ளியின் கண்கள் சுவாமி படத்தின் முன்னே பக்தி மயக்கத்தில் மூடின; கைகள் அவளை அறியாமலே கூம்பின. அன்று ஆண்டவனைப் பிரார்த்திக்கப் பல விஷயங்கள் இருப்பதாக அவளுக்குப்பட்டது. அவள் தாயாகப் போகிறாள். பிறக்கப்போகும் குழந்தைக்கு நிறைந்த ஆயுள் வேண்டும், நிறைந்த ஆரோக்கியம் வேண்டும், அது நல்வாழ்வு வாழ வேண்டும். அதற்காகவே அவர்கள் பிரார்த்தனை செய்ய வேண்டும். அந்தரங்கமாக உணர்ச்சி பொங்கி

வழிய அவர்கள் ஆண்டவனைத் துதித்துப் பாடினார்கள். சுடலைமுத்து பிரார்த்தனை முடிந்து எழுந்த பின்பும் வள்ளி பிரார்த்திக்கிறாள். அவன் அதைப் பார்த்துக்கொண்டேயிருந்தான். தன் குழந்தையின் பொருட்டுப் பிரார்த்தனை செய்யும் தாய்க்கு ஆண்டவனிடம் எவ்வளவோ விஷயங்கள் கேட்க வேண்டியிருக்கும்.

அன்றிரவு கணவனும் மனைவியும் கண்மூடவில்லை. ஆனால் ஒருவரோடு ஒருவர் பேசிக்கொள்ளவுமில்லை. சுடலைமுத்து தன் வாழ்க்கைத் திட்டங்களைப் பற்றி எண்ணும் அதே வேளையில் எவ்வளவு மகத்தானதொரு சிருஷ்டியை வயிற்றில் சுமந்திருக்கிறோம் என்று வள்ளி எண்ணி வியந்துகொண்டிருந்தாள். எதிர்காலத்தில் பெரிய மனிதனாகப்போகும் ஒரு சிசு அவள் வயிற்றில் தூங்குகிறது. அவனுக்கு அவள் உயிரையே தானமாகக் கொடுக்கிறாள்.

மறுநாள் சாயங்காலம் சிறு மாத்திரைகள் கொண்ட குப்பி ஒன்றைச் சுடலைமுத்து மனைவியிடம் கொண்டுவந்து கொடுத்தான். அந்த மருந்து முல்லைக்கல்லிலுள்ள ஒரு வைத்தியசாலையிலிருந்து அவன் வாங்கி வந்தது. எதற்கு என்று வள்ளி கேட்டாள்.

"உனக்குச் சாப்பிடத்தான். பெரியவீட்டுப் பொம்பளைங்களெல்லாம் வவுத்திலே பிள்ளை உண்டானா இதத்தான் திம்பாங்களாம். வயித்தியர் சொன்னாரு."

"எதுக்குத் திங்கறாங்களாம்?"

"நோவுல்லாம பெத்திடலாம். கொளந்தையும் அளகாயிருக்கும்."

பிறகு அவன் கேட்டான். வள்ளி ஆண் குழந்தை வேண்டுமென்று விரும்புகிறாளா அல்லது பெண் குழந்தை வேண்டுமென்றா என்பது தான் அவன் கேள்வி. அவளுக்கு ஆண் குழந்¬தான் வேண்டும். அதேதான் சுடலைமுத்துவின் ஆசையும். ஆனால் பெண்ணாகப் பிறந்துவிட்டால், அதனால் என்ன? வளர்ப்பார்கள்.

"வவுத்திலே வச்சே ஆம்புளயா பொம்புளயாண்ணு தெரியுமா?"

"பெத்த பொம்புள்ளங்களுக்குத் தெரியுமுண்ணுதான் சொல்லுறா."

ஒவ்வொரு நாளும் ஏதாவதொரு புதிய விஷயத்தைக் குறித்துச் சுடலைமுத்துவும் வள்ளியும் பேசினார்கள்; ஆலோசித்தார்கள்.

சுடலைமுத்து பல புதிய விஷயங்களைத் தினந்தோறும் தெரிந்துகொண்டு வருவான். ஒருநாள் கர்ப்பிணி சாப்பிட வேண்டிய உணவுகளைப்பற்றி; மறுநாள் கர்ப்பிணியின் தினசரி நடவடிக்கைகள் எப்படி எப்படி இருக்க வேண்டும் என்பது குறித்து . . . இப்படி எத்தனையோ. எல்லாவற்றையும் அவள் நடை முறையில் கொண்டுவரவும் செய்தாள். இந்நாட்களிலெல்லாம் சுடலைமுத்துவால் கால்துட்டுக்கூட மிச்சம் பிடிக்க முடியவில்லை. செலவுதான் என்ன கொஞ்சமா! இருந்தாலும் அவனுக்குத் திருப்தியே. அவனது கனவுகளெல்லாம் பிறக்கப்போகிற குழந்தையை மையமாக வைத்தல்லவா இயங்குகிறது. இந்தச் செலவுகளெல்லாம் அந்தக் குழந்தைக்காகத்தானே? இருந்தாலும் அவன் ஒரு வரம்பில்லாமல் செலவு செய்வது வள்ளிக்குச் சம்மதமில்லை. அதற்குச் சுடலைமுத்துவின் சமாதானம் இது :

"ஆமா, ஒன் வவுத்திலே கெடக்கிறது யாருன்னு நெனச்சிக்கிட்டிருக்கே?"

அவள் சிரிப்புடன் பதில் சொன்னாள் :

"ஆமா. தோட்டியின் மவன்."

சுடலைமுத்து நடுங்கிப்போனான். அவன் கனவிலும் எண்ணாததல்லவா அது! ஆனால் அது எத்தனை பயங்கரமான உண்மை. அந்தக் குழந்தை தோட்டியின் மகனாம்!

சுடலைமுத்து உபதேசிக்கத் தொடங்கினான் :

"நீ அப்படி எல்லாம் நெனைக்காதே. அன்னைக்கு முல்லைக்கல் ஆசிரமத்திலே ஒரு சாமியாரு சொன்னாரு. எப்பவும் நல்லதைத்தான் நீ நினைக்கணுமாம். அப்படியின்னாத்தான் கொளந்தையும் நல்லாயிருக்குமாம். தோட்டிக்கு மவனுண்ணு நெனச்சிக்கிட்டே இருந்தா அவனும் தோட்டியாயிருவான்."

"வேறே யாராகணுமுன்னு நெனக்கிறதாம்?"

அக்குழந்தை யாராக இருக்க வேண்டும், ஜட்ஜாகவா, டாக்டராகவா, அல்லது முனிசிபல் சேர்மனாகவா? ஒன்றிலும் சுடலைமுத்துவின் மனம் ஒட்டவில்லை. அவளும் இவை பற்றி எதுவும் சிந்தித்துப் பார்க்கவில்லை.

ஏகாந்தமாகத் தன் வீட்டில் அமர்ந்தபடி தன் குழந்தை யாராக

வேண்டும் என்று வள்ளி சிந்தித்துக்கொண்டிருந்தாள். இன்னும் ஐந்து மாதங்களுக்குப் பின் அவள் வயிற்றிலிருக்கும் அந்த தேவதூதன் வெளியே காட்சி அளிப்பான். அவன் எப்படி இருப்பானோ? அவன் வந்துவிட்டால் தன்னந்தனியாக அவள் உட்கார்ந்திருக்க வேண்டியதில்லை. அவன் உருவம். அப்பாவைப் போல் இருந்துவிட்டால் போதும்.

பழந்துணிகள் சிலவற்றைச் சலவைக்குப் போட்டு வாங்கி வைத்தாள் வள்ளி.

ஒரு தொட்டில் வாங்கினாள். தண்ணீர் கொதிக்க வைக்க ஒரு பாத்திரமும் வாங்கினாள்.

இப்படி அவள் பிரசவத்திற்குத் தயாரானாள்.

வெகு நேரமாக வீட்டுக்குள் குழந்தை அழுதுகொண்டிருக்கிறது. என்ன அழுகை இது! அவர்கள் அங்கே என்ன செய்கிறார்கள்? இப்போது தான் பிரசவமாகியிருக்கிறது. இப்படி அதை அழவைத்தால்? அதற்கு வேண்டிய பலம் இருக்கிறதா?

சுடலைமுத்து உரக்கச் சொன்னான் :

"அதெப்போட்டு அளவெக்காதே."

வீட்டுக்குள் இருந்த பெண்கள் வந்த சிரிப்பைக் கஷ்டப்பட்டு அடக்கிக்கொண்டு சிரித்தார்கள். அதற்கு அதுதான் பதில். அந்தக் கேள்வி பைத்தியக்காரத்தனமாகப் போய்விட்டதைச் சுடலைமுத்து உணர்ந்தான்.

குழந்தையின் அழுகை மெதுவாக அடங்கிற்று. ஆனாலும் அதை அவர்கள் வெளியே கொண்டுவரவில்லை. குழந்தையை முதன் முதலில் பார்க்கும் உரிமை அதன் அப்பாவுக்கல்லவா? இல்லை. அந்த முதல் உரிமை தாய்க்குத்தான். இருந்தாலும் ஒரு தடவை வெளியே கொண்டுவந்துவிட்டு உள்ளே கொண்டு போகட்டுமே!

கதவின் இடைவழியாகச் சுடலைமுத்து உள்ளே பார்த்தான். ஒன்றும் தெரியவில்லை. அவ்வாறு பார்ப்பது சரியல்ல என்று 'சட்'டென அவனுக்குப் பட்டது. குழந்தையை வெளியே கொண்டு வரும்படி சொல்ல மூன்று நான்கு முறை அவன் வாயெடுத்தான்.

குழந்தை மீண்டும் அழத் தொடங்கிற்று. சுடலைமுத்து தத்தளித்தான். அப்படி அழுதுகொண்டே இருந்தால் அதற்கு மூச்சு நின்றுவிடாதா? அவன் திரும்பவும் கூப்பிட்டுச் சொன்னான் :

"அதெ அளவெக்காதே."

உள்ளே இருந்து பதில் வந்தது:

"குளிப்பாட்டுறா."

அது அவன் மனைவியின் குரல். சிறிது நேரத்திற்குப் பின் கதவைத் திறந்துகொண்டு பேறு பார்க்க வந்த கிழவி குழந்தையும் கையுமாய் வெளியே வந்தாள்.

விறைத்துச் சுருண்டுபோகும் அந்தக் குஞ்சுக் குழந்தையின் மீது பார்வை விழுந்தபோது சுடலைமுத்துவுக்குத் தன் கனவுகளெல்லாம் நிறைவேறியதுபோல் தோன்றிற்று.

அன்றுவரை உணராததொரு குளிர்ச்சியைக் கண்ணும் மனசும் அனுபவித்தன.

இவன் எங்கிருந்து வந்தான்? கண்களில் ஒளி இருக்கிறது. தெளிவிருக்கிறது.

கிழவி சொன்னாள் :

"கொளந்தெய வாங்கிக்க."

சுடலைமுத்துவுக்குக் கை உயரவில்லை. உள்ளேயிருந்து வந்த மற்றொரு கிழவி சொன்னாள்:

"பத்துச் சக்கரம் கொடுத்துப் போட்டுத்தான் கொளந்தய வாங்கணும்."

சுடலைமுத்து அரை ரூபாய் எடுத்து வந்தான். ஆனால் குழந்தையைக் கையில் வாங்க அவனுக்குப் பயம். அவன் ஒரு தோட்டி. கக்கூசு அள்ளும் கையால் குழந்தையை வாங்க வேண்டுமா?

ஆனாலும் அதைச் செய்யாமல் முடியாது. கை நீட்டிக் குழந்தையை வாங்கிக்கொண்டான். உடனே திருப்பியும் கொடுத்துவிட்டான்.

தோட்டியாக இருப்பது குறித்து, சொல்ல முடியாத அருவருப்பு அன்று போல் என்றுமே சுடலைமுத்துவுக்குத் ஏற்பட்டதில்லை. அந்தச் சிசுவுக்கும் அருவருப்புத் தோன்றுகிறதோ என்னவோ! துர்நாற்றத்தை உணர அதற்குத் தெரியுமா? தோட்டி குளித்தாலும் நாறுவான். தான் குழந்தையைத் தொடுவதால் ஏதேனும் விபரீதம் நேரிட்டு விடுமோ என்று அவன் சந்தேகப்பட்டான். தோட்டியைத் தொடாமலே அவன் வளர வேண்டும். ஆனாலும் கிழவி கையில் குழந்தையைக் கொடுத்தபோது அதை மீண்டும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சுடலைமுத்துவுக்குத் தோன்றிற்று.

பேறு பார்க்க வந்தவர்கள் போய்விட்டார்கள். சுடலைமுத்து வள்ளியின் அறைக்குள் நுழைந்தான். அவள் சிசுவை அணைத்தபடி நீட்டி நிமிர்ந்து கிடக்கிறாள். சிரித்தாள். ஒரு புதுமையான சிரிப்பு. சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைச் சுடலைமுத்து கூர்ந்து நோக்குகையில் அவள் கேட்டாள் :

"அவனை ஏன் அப்படி முளிச்சுப் பாக்கிறே?"

அவள் குரலில் அதிகார மிடுக்கு தொனித்தது. குற்றவாளியைப் போல் சுடலைமுத்து சொன்னான் : "இல்லே, இவன் நாத்தமா நாறுதான்."

பழந்துணியின் விளிம்பினால் குழந்தையின் தொப்புழை அவள் மறைத்தாள். நிற்க இடமில்லாமலானது போல் தத்தளித்தான் சுடலைமுத்து. ஆனால் அங்கிருந்து செல்லவும் அவனுக்கு மனம் வரவில்லை.

வள்ளி கேட்டாள் :

"அவன் ஆராகணுமின்னு சொன்னே?"

தன் மகன் யாராக வர வேண்டுமென்பது பற்றிச் சுடலைமுத்து எப்போதும் சிந்திப்பதுண்டு. ஆனால் ஒரு தீர்மானமான முடிவு இன்னும் ஏற்படவில்லை. இன்னும் அதுபற்றிச் சிந்தித்தாக வேண்டும்.

தனது கடமை பற்றிய எண்ணம் சுடலைமுத்துவுக்குப் பெருமையாக இருந்தது. அவன் மகன் யாராக வேண்டும் என்று கேட்கப்படும் கேள்வி சாதாரணமான கேள்வி அல்ல. அவனை யாராக நிச்சயித்திருக்கிறாய் என்று குழந்தையின் தாய் கேட்கிறாள். இல்லை, அவனே கேட்டுக்கொள்கிறான்.

தாயையும் குழந்தையையும் பார்த்த பின்பு அவர்கள் ஒரு தனி உலகில் இருக்கிறார்கள் என்றும், அவர்களுடைய ஆசை அபிலாஷைகள் ஒன்றுபட்டவைதாம் என்றும் அவனுக்குப்பட்டது. அவள் மூலம் குழந்தை அடைய விரும்புவதை எல்லாம் அவன் கொடுத்துத்தானாக வேண்டும்.

ஆம், அது சரிதான். அவன் கொடுத்துக்கொண்டிருந்தால் மட்டும் போதாது. அவைகள் சுடலைமுத்துவின் உரிமைகளல்ல; அவனது கடமைகள். அந்தக் கடமைகளை அவன் நிறைவேற்றியே ஆக வேண்டும். அந்தக் குழந்தையின் தாய் - அவளுடைய உத்தரவுகளுக்கும் ஈடு கொடுக்கத்தான் வேண்டும்.

மறுநாள் வேலைக்குப் போனபோது வக்கீல் முதலியார் வீட்டிலும் ஒரு குழந்தை அழுவது கேட்டது. வக்கீல் எஜமானின் மகளும் பூரண கர்ப்பிணியாக இருந்தாள். இதற்கு ஒருநாள் முன்னே பிரசவம். பிறந்திருப்பது பெண் குழந்தை.

வக்கீலின் மனைவி கேட்டாள் :

"நேற்று எப்போடா பிரசவமாச்சு?"

"மதியத்துக்கு மேலேயம்மா."

"அப்படியானா நட்சத்திரம் பூரமல்லவா?"

சுடலைமுத்து ஒன்றும் பேசவில்லை. அது பற்றி அவனுக்கு எதுவும் தெரியாது. அந்தச் சின்ன எசமானி அம்மாள் தொடர்ந்து கேட்டாள் :

" 'கால்' ஏதாவது உண்டா?"

கால் உண்டா என்று கேட்கிறாள்! அதுவும் அவனுக்குப் புரியவில்லை. குழந்தைக்குக் காலும் கையும் சரியாகவே இருந்தது. அங்க பங்கம் எதுவுமில்லை. அந்த அம்மாள் 'குப்'பென்று சிரித்தாள்.

"டேய், அதில்லைடா, அந்த நட்சத்திரத்துக்குக் கொஞ்சம் தோஷமுண்டு. அந்த நட்சத்திரத்தில் பிறந்தால் தாய்க்கோ தகப்பனுக்கோ கெடுதல் உண்டாகும்னு சொல்வாங்க. அதுதான் 'கால்' உண்டா என்று கேட்டேன்."

சுடலைமுத்துவின் மனசு தீ விழுந்தது போல் எரிந்தது.

யாருக்குக் குறை ஏற்படப்போறது? என்ன கெடுதல், அதை எப்படித் தெரிந்துகொள்ள முடியும்? எசமானி அம்மாள் சொன்னாள் :

"அந்த மலையாளி ஜோசியரிடம் கேளு. ஜாதகம் எழுதி வாங்கினால் எல்லாம் தெரிஞ்சுபோகும்."

ஜோசியர் வீட்டிலும் சுடலைமுத்துதான் வேலை செய்கிறான். ஜாதகம் எழுதி வாங்க அன்றே ஏற்பாடு செய்தான். உடைந்த மனசுடன் தன் வீட்டில் அன்று நுழைந்தான் சுடலைமுத்து. அவன் முகத்தில் அசாதாரணக் கவலை தேங்கிவிட்டது. உடம்பும் தளர்ந்துபோயிருந்தது. அவனது ஆசைக் கோட்டையில் குண்டு விழுந்துவிட்டது. அது தகர்ந்து அழிந்துபோய்விடலாம். குழந்தையின் ஜாதகம் தீமை விளைவிப்பதாக இருந்தால் - அப்படி இருக்கக் கூடாதே என்று அவன் பிரார்த்தித்தான். வேறு என்னதான் செய்வது?

பிரசவம் விசாரிக்க அன்று சிலர் வீட்டுக்கு வந்திருந்தார்கள். வள்ளியின் தோழிகள். இவர்கள் வருகை சஞ்சலத்தில் ஆழ்ந்திருந்த சுடலைமுத்துவின் நெஞ்சைக் கிளறிற்று. அவன் மனைவியிடம் கேட்டான் :

"எதுக்கு வந்தாங்களாம்?"

அர்த்தமற்ற கேள்வி! வள்ளி பதில் சொன்னாள்:

"இது வளக்கம்."

"வளக்கமா? இங்கே யாரும் வர வேண்டாம்."

"அப்படீன்னா ஊர் முளுக்கப் போயி இங்கே யாரும் வர வேண்டாமுன்னு சொல்லிட்டு வா. இதென்னாது, பெரிய கூத்தாயிருக்கு."

அவள் எதிர்க்கிறாள். திராணியான, அதிகாரத் தொனி கொண்ட எதிர்ப்பு. ஆம், அவளுக்கு அதிகாரம் உண்டு. அன்று அவன் தெரிந்து கொண்ட விஷயத்தை முகத்தில் அறைந்தாற் போல் அவளிடம் சொன்னால் என்ன? அடங்கி ஒடுங்கிப்போய் விடுவாள். ஒரு தாயால் அதைப் பொறுத்துக்கொள்ள முடியுமா?

சுடலைமுத்துவின் கோபம் வேறு திசையில் திரும்பிற்று.

"எல்லாரும் சேந்து எங்குளந்தெயக் கசக்கிக் கொன்னுப்

போடுவாங்க."

அவள் முகம் சிறிது மாறிற்று.

"எங் கொழந்தேன்னா சொன்னே?"

அசாதாரணமான கேள்வி அது. பொருள் பொதிந்த கேள்வி. அதன் அர்த்தம் சுடலைமுத்துவுக்குப் புரியவில்லை. அவன் விழித்தான். கோபத்துடன் அவன் கேட்டான் :

"ஆமா. எங்கொளந்தேன்னுதான் சொன்னேன். ஆமா, அதுக்கு அப்பன் நானில்லையா?"

வள்ளி உறுதியாகச் சொன்னாள்.

"அதெல்லாம் சரிதான். அதுக்கு நீ அப்பன்தான். அதிலே ஒண்ணும் தப்பில்லே. ஆனா, கடவுளை நெனச்சுத்தான் பேசணும். பிஞ்சு ரத்தமாக்கும். அது செத்துக்கித்துப்போயிட்டாலோ?"

சுடலைமுத்து நடுங்கிப்போனான்.

"அடி பாவி!"

"என்னாது? இது கடவுள் தந்த கொளந்தெயாக்கும். நெனவிருக்கட்டும். அப்படியெல்லாம் சொல்லப்படாது."

சுடலைமுத்துவின் வாய் அடங்கிற்று. கட்டுப்படுத்த முடியாத மன உளைச்சலில் மீண்டும் அவன் அலைக்கழிந்தான். வக்கீல் மனைவி சொன்ன விஷயம் வள்ளிக்கும் தெரிந்துவிட்டதோ?

குழந்தை குட்டி ஒன்றுமில்லாமலிருப்பதுதான் பரமசுகம் என்று சிலர் சொல்லிக் கேட்டிருக்கிறான் சுடலைமுத்து. அது சரிதானென்று அவனுக்குத் தோன்றிற்று. குழந்தை குட்டி இல்லாமலிருந்தால் தொல்லை இல்லை; நிம்மதியாக இருக்கலாம்.

குழந்தைக்கு நீண்ட ஆயுளைக் கொடுக்கும்படி கடவுளை வேண்டினான் சுடலைமுத்து. ஆனால் அதோடு மட்டும் அவன் திருப்தி அடைந்துவிட முடியுமா? குழந்தையின் தாய்க்கும் நீடித்த ஆயுள் வேண்டாமா? அதற்கும் பிரார்த்தனை செய்தான். இவை இரண்டு மட்டும் போதுமா? அவனும் நிறை ஆயுளுடன் வாழ்ந்திருக்க வேண்டாமா? தனக்காகப் பிரார்த்தனை செய்யவும் அவன் தவறவில்லை. இப்படி எத்தனையோ விஷயங்களுக்காக

எத்தனையோ பிரார்த்தனைகள். இன்னும் பிரார்த்தனைக்குரிய விஷயங்கள் எவ்வளவோ அவனிடம் இருந்தன.

வள்ளி இத்தனை சிரமப்படவில்லை. அது ஏன்? அவன் விரும்புமளவுக்கு அவள் தன் குழந்தையை நேசிக்கவில்லையா? தன் மனைவியின் ஆயுளுக்காகத்தான் பிரார்த்தித்தது போல், தன் கணவனுக்காக வள்ளி பிரார்த்திப்பாளா என்று சந்தேகப்பட்டான் சுடலைமுத்து. அவனது நல்வாழ்விலல்லவா அவனது குழந்தையின் நல்வாழ்வும் அடங்கி இருக்கிறது.

குழந்தைக்குக் கம்பளிச் சட்டை அணிவித்தார்கள். முகத்திற்குப் பௌடர் பூசினார்கள். ஒரு பிரபுவின் குழந்தையைப் போல் அது வளர்ந்தது. அதன் தாயோ? அவள்தானே குழந்தையைப் பேணிப் பாதுகாக்க வேண்டியவள். வள்ளியின் வாழ்க்கைத் தரமே இப்போது உயர்ந்துவிட்டது. நல்ல சத்துள்ள பொருள்களை அவன் வாங்கி வருவான். அவற்றை அவள் சாப்பிட வேண்டும். அவள் ஆரோக்கியத்துடன் இருந்தாக வேண்டும். அவளுடைய பாலைத்தானே குழந்தை பருகுகிறது. சிசுவைக் கருதியாவது அவள் சுத்தமாக இருக்க வேண்டும். அவர்களது குடும்ப வாழ்வில் நூதனமான பல புதிய விஷயங்கள் இடம்பெற்றன.

இப்போதெல்லாம் வாளி, மண் வெட்டி சகிதம் வீடு வீடாக ஏறி இறங்கும்போது, ஒவ்வொரு வீட்டுக் குழந்தைகளையும் சுடலைமுத்து கூர்ந்து நோக்கிப் பல புதிய விஷயங்களைத் தெரிந்துகொள்கிறான். குழந்தைகள் வளர்க்கப்படும் விதத்தைக் கவனிக்கிறான். குழந்தை வளர்ப்போடு சம்பந்தப்பட்ட சில மருந்துகளின் பெயர்கூட இப்போது அவனுக்குத் தெரியும்.

மகனுக்கு ஒரு பெயர் சூட்ட வேண்டும். முல்லைக்கல் வார்டில் எல்லாக் குழந்தைகளின் பெயரும் அவனுக்குத் தெரியும். என்ன பெயரிடலாம் குழந்தைக்கு? பெயர் மட்டும் போதுமா? கூப்பிடுவதற்கு ஒரு செல்லப் பெயரும் வேண்டும்.

கடைசியில் மோகன் என்று தன் மகனுக்குப் பெயர் சூட்டினான் சுடலைமுத்து. செல்லப் பெயர் பேபி. வள்ளியும் ஒப்புக்கொண்டாள். அன்றுமுதல் குழந்தையை பேபி என்றே அழைக்க வேண்டும் என்பது சுடலைமுத்துவின் கண்டிப்பான உத்தரவு.

தோட்டியின் மகன் பெயர் மோகன் என்று கேட்டதும் வக்கீலின் மனைவி வாய்விட்டுச் சிரித்தாள். 'குப்'பென்று வெளிப்பட்ட சிரிப்பு

சுடலைமுத்துவுக்குப் பைத்தியக்காரப் பட்டம் சூட்டியதோடு நிற்கவில்லை. அவனை நடுங்கவைத்தது; ஸ்தம்பிக்கச் செய்தது. வக்கீல் மனைவியின் அந்த நையாண்டிச் சிரிப்பில் பரிகாசம் மட்டுமிருக்கவில்லை; அம்மாதிரிப் பெயர் வைக்கத் தோட்டிக்கு உரிமை இல்லை என்கிற தொனியும் கலந்திருந்தது.

அந்த வீட்டிலிருந்து வெளியேறியபோது சுடலைமுத்துவின் உள்ளத்தில் ஏற்பட்ட சலனங்கள் சூடானவை. அவனது அருமைக் குழந்தையை மனிதப் பிறப்பாகவே ஏற்றுக்கொள்ள மாட்டார்களோ? தான் விரும்பும் பெயரைத் தன் குழந்தைக்குச் சூட்டக் கூடாதா? வேறு எவரும் அவன் குழந்தையை நேசிக்க வேண்டியதில்லை. தன் குழந்தையிடம் அன்பு செலுத்த அவனுக்கே உரிமையில்லையா?

அந்தக் கேலிச் சிரிப்பு சுடலைமுத்துவின் இதயத்தின் சில மூலைகளிலிருந்து எதிரொலித்தது. தோட்டியின் மகனுக்குச் செல்லப் பெயர் வைக்கக் கூடாதா?

பல்லைக் கடித்துக்கொண்டு சுடலைமுத்து ஏதோ அலறினான். அவனது தீர்மானம் மேலும் உறுதிப்பட்டது. அவன் மகன் பெயர் மோகன்தான்; செல்லப் பெயர் பேபிதான். தோட்டியின் மகனுக்கும் ஒரு செல்லப் பெயர் இருக்கிறது என்பதை எல்லோருக்கும் அறிவிக்க வேண்டும்.

அவன் டாக்டர் வீட்டுக்குச் சென்று, ஒரு பைத்தியக்காரன் போல் அவரை அழைத்துச் சொன்னான் :

"நேத்துத்தான் என் கொளந்தைக்குப் பேரு வெச்சேன்."

பெயர் என்னவென்று டாக்டர் கேட்பார் என்றுதான் சுடலைமுத்து எதிர்ப்பார்த்தான். ஆனால் அது யாருக்கும் அக்கறை இல்லாத சமாசாரம். சுடலைமுத்து தானாகவே சொன்னான் :

"பேரு மோகன்னு வெச்சிருக்கு."

இதைச் சொல்லிவிட்டு, டாக்டரின் முகத்தில் ஏதேனும் புதிய பாவங்கள் ஏற்படுகிறதா என்று சுடலைமுத்து கவனித்தான். அவன் கண்கள் வைராக்கியத்தில் சுழன்றன. ஏதோ வஞ்சம் தீர்த்துக் கொண்ட பாவனையில், தன் வஞ்சம் எப்படி எதிரியைத் தாக்குகிறது என்று கவனிக்கிற தோரணையில், அவன் பார்த்துக் கொண்டிருந்தான்.

டாக்டரின் உதடுகள் நெளிவது போல் அவனுக்குத் தோன்றிற்று. அவலட்சணமே உருவான அழகம்மாளுக்கும், கண்கள் குருடாய்ப் போன நல்லகண்ணுப் பிள்ளைக்கும் சிகிச்சை செய்து பழகிப் போன அந்த டாக்டருக்கு, மோகன் மோகனாகத்தான் இருக்க வேண்டும் என்கிற அவசியம் ஏது?

சுடலைமுத்து, ரெட்டியார் வீட்டுக்குப் போய்த் தன் மகன் பெயர் மோகன் என்று சொன்னான். செல்லப் பெயரையும் கூறினான். இப்படித் தனக்குத் தெரிந்த வீடுகளுக்கெல்லாம் வலியச் சென்று விஷயத்தைச் சொன்னான். இதை ஒருவிதத் தாக்குதல் என்றே சொல்ல வேண்டும். தோட்டியின் மகனுக்கு மோகன் என்று பெயர்! இது ஓர் மகத்தான அறைகூவல் என்று சுடலை முத்துவுக்குத் தோன்றிற்று. இன்னும் எத்தனையோ அறைகூவல்களை அவன் விடுக்க வேண்டியிருக்கும். ஆனால் அவை எங்கே எப்படி ஏற்படும் என்பதுதான் அவனுக்குத் தெரியவில்லை.

முனிசிபல் சேர்மனின் மனைவி கேட்டாள் :

"அப்போ அவனை பேபித் தோட்டீன்னு கூப்பிடணுமா?"

இப்படிச் சொல்லிவிட்டுச் சிரித்தாள் அவள்.

'அவன் தோட்டி அல்ல' என்று சொல்லிவிடத் துடித்தான் சுடலைமுத்து. ஆனால் அந்த எண்ணத்தை உடனே மனசில் அடக்கிக் கொண்டான். அவன் சொல்ல நினைத்ததை முனிசிபல் சேர்மன் மனைவி பிறகு தெரிந்துகொள்ளட்டுமே!

முந்தைய தினத்தைவிட மனம் அல்லாட, சிந்தனையிலாழ்ந்த வண்ணம், சுடலைமுத்து அன்று வீடு திரும்பினான். அறைகூவி, சவால்விட்டு, 'என்ன சொல்லுகிறாய்?' என்று கேட்கும் ஆசை மனதுள் எழுந்து, இதயத்தை அரித்துப் பிடுங்கித் தின்றது. அவர்கள் எல்லோரும் தன் குழந்தையை பேபி என்று அழைக்கும்படி செய்ய வேண்டும். ஆனால் . . . ஆனால் அவன் தோட்டியின் பிள்ளையாகப் பிறந்துவிட்டானே!

அவன் குழந்தை கவிழ்ந்து விளையாடிக்கொண்டிருக்கிறது. வள்ளி அடுக்களையிலிருக்கிறாள். பக்கத்தில் சென்றபோது குழந்தை தன் மூத்திரத்திலும் மலத்திலும் அலைந்து புரண்டு விளையாடிக் கொண்டிருப்பதை அவன் பார்த்தான்.

"வள்ளீ!"

சன்னதம் வந்தாற்போல் கத்தினான் சுடலைமுத்து.

"ஏய்!"

அசாதாரணமான அந்த அதட்டலைக் கேட்டு வள்ளி வெளியே வந்தாள். சுடலைமுத்துவுக்குக் கோபம் தலைக்கேறி விட்டிருந்தது. விஷயம் அவளுக்குப் புரியவில்லை. குழந்தையைச் சுட்டிக்காட்டிச் சுடலைமுத்து கேட்டான் :

"என்னடி இது?"

வள்ளி குழந்தையை எடுத்துக்கொண்டு போனாள். சுடலைமுத்துவுக்கு மேலும் மேலும் கோபம் அதிகரித்தது. குழந்தை அப்படிக் கிடந்தது வள்ளிக்குப் பெரிதாகப்படவில்லை. சுடலைமுத்து அவளைத் திட்டித் தீர்த்தான்.

"கொளந்தைங்க சில சமயம் அப்படித்தான் கெடக்கும்."

"எங்கொளந்த அப்படிக் கெடக்கக் கூடாது."

வள்ளி கேட்டாள் :

"நீ மட்டும் இப்ப என்ன வேலை செஞ்சிக்கிட்டு இருக்கிறியாம்? ஒங்கொளந்தைதானே?"

"அதனாலே அவனும் அப்பிடியாகணுமா?"

வள்ளி பதில் பேசவில்லை. அவனது கோபத்திற்கு அத்தனை வேகம் இல்லை.

குழந்தை 'ம்மா' என்று குரலெழுப்பியபோது, வள்ளி பதில் குரல் கொடுத்தாள். "என்னடா குளந்தெ!" இந்தப் பதில் குரல் வள்ளியின் உரிமை. ஆனால் குழந்தை 'ப்பா' என்றபோது பதில் குரல் கொடுக்கச் சுடலைமுத்துவுக்கு பயம். அவன் ஒரு தோட்டி. வள்ளி கோபத்துடன் கேட்டாள் :

"அடேயப்பா, குளந்தை கூப்பிடுது, செவிடு போல நிக்கிறியே?"

அந்தக் குழந்தையின் பிறப்பிற்குக் காரணமானவன் என்கிற ஹோதாவில் உரிமை கொண்டாடச் சுடலைமுத்துவுக்கு ஆசை இல்லாமலில்லை. அணைப்பதற்கும் அதட்டிப் பேசுவதற்கும்

அவனுக்கு ஆசை உண்டு. ஆனால் பயம். ஒரு தோட்டிதான் தன் தகப்பன் என்று அக்குழந்தைக்குத் தெரியக்கூடாதாம். அப்படித் தெரிந்துவிட்டால், அந்தக் குழந்தைக்கு ஒரு தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டு விடலாம். வள்ளிக்கு இது புரியவில்லை. அவள் சொன்னாள் :

"அவன் எத்தனை பெரிய மனிசன் ஆனாலும் அவன் தோட்டிக்கு மவன்தான்."

இப்படிச் சொல்லிவிட்டு அவள் குழந்தையைப் பார்த்து, "அப்படித் தானேடா ராசா?" என்று கேட்டாள்.

உற்சாகத்தோடு குரல் எழுப்பிக்கொண்டு குழந்தை அவனை நோக்கித் தாவிற்று. சுடலைமுத்து குழந்தையை எடுத்துக்கொள்ளவில்லை. அவன் சொன்னான் :

"ஏதுக்கு புள்ளே? நான் அவனைக் காப்பாத்தறேன்; பெரிய மனிசனாக்கிப்புடுறேன். அது போதும். அவன் எதுக்கு இதெல்லாம் தெரிஞ்சுக்கிடணும்."

அவள் கேட்டாள் :

"பின்னே அவனுக்குத் தெரிய வேண்டாமா? என்ன இது, பைத்தியக்காரத்தனமா ஔறாதே."

சிறிது நேரம் சிந்தனையிலாழ்ந்துவிட்டுச் சுடலைமுத்து தொடர்ந்தான் :

"தான் ஒரு தோட்டியின் மவன் என்கிற விசயம் அவனுக்குத் தெரிய வேண்டாம்."

"சரி, தெரியாம?"

"தெரிஞ்சா அது அவனுக்கு அவமானம்."

"அவமானம் ஒண்ணுமில்லே. அப்பனுக்குப் பொறக்காமே இருக்கிறதுதான் அவமானம். அது சரி, நீ அப்பன் இல்லைன்னா வேறு யாரையாவது அப்பனுணு சொல்லணுமே!"

அது ஒரு பிரச்னைதான். அவனுடைய அப்பன் யார் என்று சொல்வது?

தோட்டியின் மகனாகப் பிறந்துவிட்டால் ஏற்படக்கூடிய துன்பங்களை அவன் ஒவ்வொன்றாகச் சொன்னான். குழந்தை எவ்வளவுதான் பெரியவனாகிவிட்டாலும் தோட்டியின் மகன் என்பதால் சில தடைகளும், தொல்லைகளும் ஏற்படத்தான் செய்யும்.

"நம்ம கொளந்தையா அவன் பொறக்காம இருந்திருந்தா நல்லதாப் போயிருக்கும். என்ன சொல்லுறே?"

"நீ என்னதான் சொல்லுறே? எனக்கு ஒண்ணும் புரியல்ல."

"இல்லே, அவன் எதுக்காக இப்படி வந்து பொறக்கணும்கிறேன்."

தன் மகனுக்கு மோகன் என்று பெயர் வைத்ததால் ஏற்பட்ட விபரீதங்களைச் சுடலைமுத்து வள்ளியிடம் விரிவாகச் சொன்னான். தன்னுடைய குழந்தைபற்றி அவன் பிற தோட்டிகளிடம் ஏதாவது வாயைத் திறந்தால் உடனே அவர்கள் சிரிக்கிறார்கள். தோட்டிக்கு நல்ல குழந்தை பிறக்கக் கூடாது. தோட்டியின் குழந்தைக்கு நாகரிகமாகப் பெயர் சூட்டக் கூடாது. செல்லப் பெயர் வைக்கவும் கூடாது. தன் குழந்தையிடம் அன்பு செலுத்தும் உரிமை தோட்டிக்கு இல்லை. அப்படியானால், பெரிய மனிதனாவதற்காகப் பிறக்கும் குழந்தை தோட்டியின் மகனாக, தோட்டிச்சியின் வயிற்றில் உருவாகக்கூடாதல்லவா? அந்த ஜனனத்திற்குப் பொருளேது, பொருத்தம் ஏது?

எவ்வளவு சொன்னாலும் வள்ளிக்குச் சுடலைமுத்துவைப் புரிந்துகொள்ள முடியவில்லை. சுடலைமுத்துவைப் போல் அவள் ஒரு கனவுலகில் வாழவில்லை. தன் குழந்தை அருமையாக வளர வேண்டும் என்னும் ஆசைமட்டும்தான் அவளுடையது. தன் குழந்தை நல்லபடியாக, முன்னேறி வாழ வேண்டும் என்னும்போதே, குழந்தை யாராக, எப்படி எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றி எல்லாம் அவள் ஆகாசத்தில் கோட்டைகள் கட்டுவதில்லை. 'நன்றாக வாழ வேண்டும்' என்பதற்கு மேல் தன் குழந்தை பற்றி அவளுக்குக் கனவு எதுவும் கிடையாது. தன் குழந்தை நிறை ஆயுளுடன் வாழ வேண்டுமென்று அவள் பிரார்த்திப்பதுண்டு, அவளுக்கு வேண்டியது அதுதான்.

சுடலைமுத்து குழந்தையைப் பார்த்துக்கொண்டே இருப்பான். அது முதன் முதலில் வாய் விரித்துச் சிரித்த நாள் அவன் வாழ்க்கையில் ஒரு பொன்னாள். அது தரையில் கவிழ்ந்தபோது அவன் பயந்துபோய்க் கூச்சலிட்டான். குழந்தை தரையில் மூக்கை

மோதிக்கொள்கிறது. குழந்தை தவழ்ந்து ஊர்ந்தபோது சுடலைமுத்து கவலையுற்றான். பச்சைப் பசும் குழந்தையின் கால் முட்டு சிராய்த்துப்போய் விடாதா?

இப்படி குழந்தை வளர்ந்து வருவது பார்ப்பதற்கே ஆனந்தமாக இருந்தது. ஆனால் அந்த ஆனந்தத்தினூடு சிறு வேதனையும் அவன் மனதில் இருந்தது. யாரிடமாவது சொல்லித் தணித்துக்கொள்ள முடியாத ஒரு தந்தையின் வாஞ்சை அந்த அப்பாவியின் இதயச் சுவர்களைத் தகர்த்துக்கொண்டிருந்தது. குழந்தை கவிழ்ந்து விழுந்தபோதுகூட, பக்கத்தில் நின்று கூச்சல் போட்டானே ஒழிய, தொட்டுத் தூக்குவதற்கு அவனால் இயல வில்லை. குழந்தையைத் தொடவே கூடாது. தனக்குத்தானே அவன் விதித்துக்கொண்ட சாபம் இது. ஒரே ஒரு முறை 'மகனே' என்று வாய் நிறைய அழைத்தால் எத்தனை ஆனந்தமாக இருக்கும்! ஆனால் அப்படி அழைக்கக் கூடாது என்று அவன் உறுதி செய்து கொண்டான். குழந்தையிடம் தான் அன்பு செலுத்த ஆரம்பித்தால் அதன் நல்வாழ்வுக்கு முட்டுக்கட்டையாகிவிடும். பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும். ஆம், அப்படித்தான். எல்லாவற்றையும் மறந்து மனசுக்குச் சாந்தி தேடிக்கொள்ள வேண்டும், அவன் வளரட்டும்.

வளர்ந்து வரும் தன் குழந்தையைக் கண்டு திருப்தி அடைந்தான் சுடலைமுத்து. மகனைத் தொடாமலே, 'மகனே' என்று வாய் திறந்து அழைக்காமலே, மன விழைவால் மீறிப் புறப்பட்ட ஆசையை நசுக்கி அழித்து, அந்தத் தந்தை நாட்களை ஓட்டினான். பொருத்தமற்ற ஆசைகளை மனதில் ஊற வைத்துக்கொள்வதால் ஏற்படும் பலன் இதுதான். தன்னிடம் தானே அருவருப்புக் கொள்ளுவதால் ஒரு தோட்டிக்கு ஏற்படுவதும் இதுதான்.

மோகனுக்குத் தங்க அரைஞாண் உண்டு; கைக்கு வளையல்கள் உண்டு. தான் பார்க்கும் ஒவ்வொரு குழந்தையையும் சுடலை முத்து மோகனுடன் ஒப்பிட்டுப் பார்த்தான். அவன் குழந்தைக்கு அழகிருக்கிறது; சமர்த்து இருக்கிறது. எல்லோரிடமும் தன் குழந்தையைக் காட்ட வேண்டும். அப்படிச் செய்து ஆச்சரியத்தால் மூழ்கடிக்க வேண்டும்.

ஒருநாள் சாயங்காலம் மோகனை நன்றாக அழகுபடுத்திக் கணவனும் மனைவியும் கடற்கரைக்கு எடுத்துக்கொண்டு போனார்கள். குழந்தையைத் தூக்கிக்கொண்டு வள்ளி முன்னால் நடந்தாள். சுடலைமுத்து பின்தொடர்ந்தான். மனோகரமான வேனிற்காலம். மாலை நேரம். காற்று வாங்கப் பலர் கடற்கரைக்கு வந்திருந்தார்கள். ஊர்ப் பெரிய மனிதர்கள். அவர்களுடைய

ஒசத்தியான குழந்தைகள் கடற்கரை வெண் மணல் பரப்பில் ஓடியும், உருண்டும், குட்டிக் கரணங்கள் போட்டும் விளையாடிக்கொண்டிருந்தன. அந்தப் பெரிய மனிதர்களில் யாராவது தன் குழந்தையைப் பார்க்கிறார்களா என்று சுடலைமுத்து கூர்ந்து கவனித்தான்.

மணலில் குழந்தைகள் விளையாடுவதைக் கண்டதும் மோகன் கீழே இறங்கத் துடித்தான். தாயின் இடுப்பில் இருந்து நழுவினான். சற்றுத் தூரத்தில் தம்பதிகளாக இருவர் அமர்ந்திருந்தனர். மனைவி கணவனிடம் கூறினாள் :

"அதோ பாருங்கோ, அந்தத் துஷ்டக் கொழந்தையை. அம்மாவைத் தொந்தரவு பண்றது அது."

கணவன் சொன்னான் :

"அது அவ குழந்தையாத் தோணலே."

"ஆமாம். எத்தனை அழகா இருக்கு."

மீண்டும் ஒருமுறை கூர்ந்து நோக்கிவிட்டுக் கணவன் சொன்னான் :

"அவள் ரோட்டைக் கூட்டுகிறவள். அது அவ குழந்தையாய் இருக்க முடியாது."

சுடலைமுத்து அந்தப் பேச்சைக் கவனித்தான். அவன் குழந்தை மோகன் அழகுதான். அவன் அதற்காகப் பெருமைப்பட்டுக் கொள்ளக் கூடாதா?

'அம்மா' என்று குழந்தை அழைப்பதால் மட்டும் தாய்க்கு திருப்தி ஏற்பட்டுவிடாது. தகப்பனே இல்லாவிட்டாலும்கூட 'அப்பா' என்று சொல்ல அவள் குழந்தைக்குக் கற்றுக் கொடுப்பாள். அப்படிக் கற்றுக்கொடுக்காவிட்டாலும் குழந்தை 'அப்பா' என்று சொல்லத்தான் செய்யும். தகப்பனே தடை செய்தாலும் சரிதான், அப்போதும் குழந்தை அழைக்கவே செய்யும் 'அப்பா' என்று. சொந்த உயிருக்கும் மேலாகத் தன் குழந்தையைத் தகப்பன் நேசிக்கும் வீட்டில், கணவன் - மனைவி உறவுக்கு எவ்விதக் குறைவும் ஏற்படாத வீட்டில், குழந்தை அப்பாவை அழைக்காமலிருக்குமா; தாய், தகப்பனைக் காட்டாமல் இருப்பாளா?

மோகன் தகப்பனைக் கண்டதும் வாய்விட்டு அழைத்தான். அப்பாவைப் பார்த்ததும் வாய் நிறையச் சிரித்தான். தந்தையை எதிர்பார்த்து வீட்டு வாசலில் காத்து நின்றான். யாராலும் இவற்றைத் தடைசெய்ய முடியவில்லை. அதே சமயம், சுடலை முத்துவாலும் சில விஷயங்களிலிருந்து வேறுபட்டு நிற்க முடியவில்லை. அவன் குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டதில்லை; முத்தமிட்டதில்லை. அந்த அனுபவங்கள் மோகனுக்கும் கிடைக்கவில்லைதான்.

மோகன் மனதில் ஒரு ஆசை வளர்ந்து வந்தது. எங்கிருந்து அந்த ஆசை தோன்றிற்றோ, ஒருக்கால் ஒரு குழந்தைக்குப் பிறப்பிலேயே அந்த ஆசை தோன்றிவிடுமோ என்னவோ. அதைத் தடை செய்வது சாத்தியமற்றதாக இருக்கலாம்.

இது எத்தனை பெரிய தியாகம், எந்த இன்பத்தைச் சகல உயிர் இனங்களும் விழைந்து நாடுகிறதோ, அதை வேண்டாமென்று ஒதுக்கிவிடுவதா?

தாயின் மடியில் மல்லாந்து படுத்துக்கொண்டிருந்தான் மோகன்.

"அம்மோவ்! இண்ணைக்கு நான் அப்பாகூடத்தான் சாப்புடுவேன்."

ஒரு தாயை மயிர்க்கூச்செறிய வைக்கும் இனிய மழலை அல்லவா இது! தோட்டிச்சியும் தாய் அல்லவா?

தாய் சம்மதித்தாள்.

உடனே மற்றொரு கேள்வி குழந்தையிடமிருந்து.

"அப்பா ஏம்மா என்னெ எடுத்துக்கிடவே மாட்டேங்குறா?"

வள்ளி என்ன பதில் சொல்லுவாள்? குழந்தை தொடர்ந்தான் :

"என்னெத் தூக்கிக்கிடச் சொல்லுவேன் அப்பாகிட்டே."

மேலும் சொன்னான் குழந்தை :

"அப்பாவுக்குத்தான் இண்ணைக்கு நான் முத்தம் கொடுப்பேன். ஒனக்கு இல்ல போ."

மத்தியானம் பலமுறை தன் மகனைச் சாப்பிட அழைத்தாள்

வள்ளி. அவன் வரவில்லை. தன் அப்பாவுக்காக அவன் காத்திருந்தான்.

குழந்தையின் ஆசை நிறைவேறுமா என்று வள்ளி சந்தேகப்பட்டாள். அர்த்தமற்ற பிடிவாதங்களை அகற்றிவிடும்படி கணவனிடம் சொல்ல வேண்டுமென்று அவள் எண்ணினாள். இந்த நிலைமை தொடர்ந்துகொண்டே போனால், அது எங்கு சென்று முடியுமோ? குழந்தையின் ஆசை அதன் உரிமை அல்லவா, அவன் பெற வேண்டியவை அல்லவா, அவன் ஒவ்வொன்றாகக் கேட்க ஆரம்பித்துவிட்டான். இனிமேல் ஒன்றன் பின் ஒன்றாகத் தன் உரிமைகளைப் பிடுங்கிக்கொள்ளவும் ஆரம்பித்துவிடுவான்.

வேலை முடிந்து சோர்வுற்றவனாய்ச் சுடலைமுத்து தூரத்தில் வந்துகொண்டிருந்ததை மோகன் பார்த்தான். உடனே அவன் ஓடோடி உள்ளே சென்றான்.

"அம்மா, அப்பாகூட எனக்குச் சோறு தருவியா அம்மா!"

"நீயே ஒங்கப்பா கிட்டே அதைச் சொல்லு. நான் சொன்னா கேக்கமாட்டாரு."

மோகன் முகம் சிவந்தது.

"முடியாது, நீதான் சொல்லணும்".

கண்ணைக் கசக்கிக்கொண்டு மோகன் அழ ஆரம்பித்தான்.

சுடலைமுத்து வந்ததும் பிள்ளை அழுவதைப் பார்த்தான். அவனுக்குக் கோபம் வந்தது.

"ஏன் அழுகிறான் கொளந்தெ?"

வள்ளி சிரித்துக்கொண்டே சொன்னாள் :

"ஒங்கூட ஒக்காந்து அவனுக்குச் சாப்புடணுமாம்."

சுடலைமுத்து நடுங்கிப்போனான். ஆம். நடுங்கவே செய்தான். அப்படி ஒரு கோரிக்கையை அவன் எதிர்பார்க்கவில்லை. மலம் கூட்டிய கையால் மகனுக்குச் சோறு பிசைந்து ஊட்டுவதா? முடியாது. ஒருநாளும் முடியாது. இதை அனுமதிக்கவே முடியாது. ஆனால் எப்படி இதை மறுக்க முடியும்? இனிமேல் அவன் 'அப்பா' என்று வாய் திறந்து கூப்பிட்டாலும் கூப்பிட்டுவிடுவான்.

மோகன் அழுதுகொண்டே இருந்தான். சுடலைமுத்துவுக்குத் தான் வேலை செய்த கக்கூசுகளின் முடை நாற்றம் அங்கே வீசுவதுபோல் தோன்றிற்று. வருடக்கணக்காக அந்தத் துர்நாற்றம் மூக்கில் தேங்கி நிற்கிறதே! அவன் ஏறி இறங்கிய எல்லாக் கக்கூசுகளும் அவன் நினைவு வட்டத்தில் வந்தன. தினம் தினம் அசிங்கத்தை மண் வெட்டியால் வாரி எடுத்து, அகப்பையில் அள்ளி, வாளியில் போட்டு, பீப்பாய்களில் கொட்டி . . . சீச்சீ! நாமும் ஒரு மனிதப் பிறவியா, இதயமும், புத்தியும், பஞ்சேந்திரியங்களும் கொண்ட மனிதனா நாமும், குழந்தை உற்பத்தி செய்யும் சக்தி தனக்கு ஏன் ஏற்பட்டது, மேலும் மேலும் தோட்டிகளை உற்பத்தி பண்ணவா, தன் மகன் பெரிய மனிதனாக முடியுமா? முடியாது! தான் செய்ய வேண்டியது இதுதான் என்று சுடலைமுத்துவுக்குத் தோன்றிற்று. வீதியில் திரிகிறபோது ஒரு சட்டியையும் கையில் ஏந்திக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு வீட்டிலிருந்தும் கிடைக்கிற கஞ்சியோ, கழுநீரோ, புளித்துப்போன பாயசமோ, சட்டியில் வாங்கிக்கொண்டு, பீப்பாய் வண்டியின் பின்னால் அதைக் கட்டித் தொங்கவிட்டுக்கொண்டு வந்து, அதைத் தன் குழந்தைக்குக் கொடுக்க வேண்டும். தோட்டியின் பிள்ளைக்கு அந்த அழுக்கு தின்னாமல் வாழ முடியாது; வளர முடியாது. அந்த அழுக்கைக் கொடுக்காமலிருந்தாலுங்கூடக் கேட்டுப் பெற்றுக்கொள்வான் தோட்டியின் மகன். அவனுக்கு நல்ல பிஸ்கோத்தைவிடவும் அழுக்குத்தான் ருசியாக இருக்கும். ஏனென்றால், அதில் தோட்டியின் பிள்ளைக்கு ஏற்படும் ருசி அது வழி வழியாக வந்த ருசி அல்லவா?

இருந்தாலும் சுடலைமுத்து கவனித்துக்கொள்ளுவான். அந்தக் குழந்தை, தான் தோட்டியின் மகன் என்பதைத் தெரிந்துகொள்ளாமல், அழுக்கைத் தின்னாமல் வளர வேண்டும். கக்கூசின் துர்நாற்றம் அவனை வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். அவன் தோட்டி வர்க்கத்தையே வெறுக்க வேண்டும். அவன் தன் தகப்பன் அருகில் போகும்போதுகூட மூக்கைப் பொத்திக்கொள்ள வேண்டும். தன் அப்பனை 'அப்பா' என்று அவன் கூப்பிடவும் கூடாது.

சுடலைமுத்து மீண்டும் தீர்மானித்துக்கொண்டான். ஒரு தகப்பன் என்னும் முறையில் எதிர்காலத்தில் சில சௌகரியங்கள் பெற வேணுமென்று அவன் நிலைமைக்குத் தக்கவாறு அவன் ஆசைப்பட்டான். வயசு காலத்தில் ஒரு அறையில் முடங்கிக் கிடக்க வேண்டும், மூன்று வேளை ஏதாவது தின்பதற்குக் கிடைக்க வேண்டும். மலக் கிடங்கில் புதைத்து வைத்திருக்கும் சட்டியை மீண்டும் கிளறி எடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டுவிடக் கூடாது. தன் மகன் எவ்வளவு பெரிய மனிதன் ஆகிவிட்டாலும் சரி, தனக்கு

இத்தனை வசதியும் இருந்துவிட்டால் அது போதும். நாம் இவ்வளவுதான். இதைக்கூடச் சுடலைமுத்து தியாகம் செய்யத் தயாராய் இருந்தான். இதுவும் அவனுக்கு வேண்டியதில்லை; ஒன்றுமே வேண்டியதில்லை. மற்றவர்களைப் போல் மோகனே அவனைத் தோட்டி என்று கூப்பிட்டுக் கொள்ளட்டும். போதும், அப்படியே அவன் கூப்பிட்டுக் கொள்ளட்டும்.

ஒரு தோட்டி ஒரு குடும்பத்தைக் கட்டி வளர்த்துத் தன் குழந்தையைப் பெரிய மனிதனாக்கிவிடலாம் என்று எண்ணுகிறான். இது சாத்தியமில்லை என்று இப்போது சுடலைமுத்து புரிந்து கொண்டு விட்டான். பிறக்கும் குழந்தையைத் தோட்டிச்சிகள் முத்தமிடுவார்கள். அந்தக் குழந்தைக்கு நல்ல பெயர் சூட்ட உரிமை இல்லை. அந்தக் குழந்தை மலத்தையே அள்ளித்தின்றாலும் அதன் தாய் அதை கவனிக்கமாட்டாள். அழுக்கை அள்ளி வாழும் அப்பனிடம் அக்குழந்தைக்கு அருவருப்பில்லை.

இருந்தாலும் சுடலைமுத்து முயன்று பார்ப்பான்.

சுடலைமுத்துவுக்கு அன்று உணவு செல்லவில்லை.

# 7

மோகனுக்கு நண்பர்கள் இல்லை. அவன் வீட்டின் பக்கத்திலெல்லாம் முதலாளிகளின் பங்களாக்கள்தாம். அதற்கும் அப்புறம் ஏழைகள் வாழும் குடிசைகள். அங்கே குழந்தைகள் இருக்கிறார்கள். ஆனால் தோட்டியின் மகன் அந்தக் குழந்தைகளோடு விளையாடியதில்லை.

எதிர்சாரியில் ஒரு வட நாட்டுக் கோடீசுவர வியாபாரியின் வீட்டுக் குழந்தைகள் வலைகட்டிப் பந்து விளையாடிக்கொண்டிருந்தன. அங்கிருந்து எழும் கூச்சலும் கும்மாளமும் மோகன் காதில் விழும். சுவருக்கு மேலே தெரிந்த வலையின் மேலாக மஞ்சள் நிறப் பந்து அங்கும் இங்குமாக மாறி மாறிப் பாய்வதை மோகன் குதூகலத்துடன் பார்த்துக்கொண்டிருப்பான். பங்களாத் திண்ணையில் ஜப்பான் பொம்மையைப் போலிருக்கும் முதலாளியின் குழந்தையும், இந்தப் பக்கம் இருந்தபடி மோகனும் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். சைகை காட்டிக்கொள்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு இடையிலே ஒரு உயர்ந்த சுவர் இருக்கிறது.

முன் பக்கமுள்ள பாதையில் தெருப் பிள்ளைகள் கூச்சலிட்டு ரகளை பண்ணுவதையும் மோகன் பார்ப்பதுண்டு. ஒருவன் முன்னால் ஓடுகிறான். அவனைப் பிடிக்க மற்றொருவன் பின்னால் பாய்கிறான். எங்குதான் அவர்கள் இப்படிப் பாய்ந்து போகிறார்களோ? எத்தனை ரசமான விஷயம்! மோகன் குதூகலத்துடன் அந்த விளையாட்டில் மூழ்கிப்போய் அவர்களுடன் சேர்ந்து தானும் பெரிசாகச் சிரிப்பதும், கூச்சலிடுவதும் உண்டு. மழைக்காலங்களில் அந்தக் குழந்தைகள் சாக்கடைத் தண்ணீரில் காகிதக் கப்பல்கள் விட்டு, அவற்றைப் பின்தொடர்ந்து ஓடுவார்கள். ரோட்டுக்கு அப்பால் உள்ள கால்வாயில் அவர்கள் நீச்சல் அடித்து, குட்டிக்கரணம் போட்டு விளையாடுவார்கள். எவ்வளவு நேரம் அப்படியே தண்ணீரில் கிடப்பார்கள் தெரியுமா? அந்தப் பொறுக்கிப் பையன்களின் சுதந்திரம் மோகனை ஆச்சரியப்பட வைத்தது.

அந்தப் பையன்களில் சிலர் அவனையும் விளையாடுவதற்கு அழைப்பார்கள். சிலர் அவனைப் பார்த்து அழகு காட்டுவார்கள்.

இன்னும் சிலர் 'உதைக்கிறேன் பாரு' என்கிற அர்த்தத்தில் முஷ்டியை மடக்கி பயமுறுத்துவார்கள். ஆனாலும் அவர்களுடன் விளையாடுவதற்காகக் கடற்கரைப் பக்கம் போகவேண்டுமென்று மோகன் ரொம்பவும் ஆசைப்பட்டான்.

ஒருநாள் மோகன் வீட்டு வாசலில் நின்றுகொண்டிருந்தபோது ஒரு பையன் அவனிடம் வந்தான். மோகன் தின்றுகொண்டிருந்த ரொட்டித் துண்டைப் பார்த்துவிட்டு, 'எனக்குக் கொஞ்சம் குடுப்பியா?' என்று கேட்டான். மோகன் கொடுத்தான்.

இருவரும் பேசிக்கொண்டார்கள்.

"வெளையாட வறியா?"

"அம்மா திட்டுவா."

அவர்கள் மனம்விட்டு மேலும் ஏதேதோ பேசினார்கள். வீதியில் புதிய விளையாட்டுக்கு ஆள் எண்ணப்பட்டபோது அந்தப் பையன் மோகனிடம் விடை பெற்றுக்கொண்டான். குளிப்பதற்கு மோகனை வள்ளி அழைத்தாள்.

இப்படியாக மோகனுக்கு ஒரு நண்பன் கிடைத்தான். ஊரில் நடக்கும் முக்கியமான நிகழ்ச்சிகளை மோகனிடம் அந்தப் பையன் வந்து சொல்லுவான். கார் ஏறி நாய் செத்துப்போன கதை; ஒரு பையன் மேல் காப்பிக்கடைக்காரன் வெந்நீரை ஊற்றிய சமாச்சாரம்; ஒரு போலீஸ்காரன் தன்னையும் இன்னும் மூன்று பேரையும் விரட்டி அடித்த சம்பவம், இப்படி விநோதமாக எத்தனையோ கேட்டான் மோகன் அந்தப் பையனிடமிருந்து. பட்டணத்தில் பல்வேறுபட்ட காட்சிகளைப் பார்த்துக்கொண்டே சுற்றினால் எத்தனை 'குஷி'யாக இருக்கும்.

மோகன் தாய்க்குத் தெரியாமல் ரொட்டியும் பாலும் தன் நண்பனுக்குக் கொடுப்பான். இப்படிச் செய்வது தாய்க்குத் தெரியக் கூடாது என்கிற எண்ணம் எப்படியோ அவனுக்குப் புரிந்திருந்தது. வள்ளி அதைத் தெரிந்துகொள்ளவும் இல்லை.

ஒருநாள் நீண்ட நேரம் தன் சிநேகிதனுக்காகக் காத்திருந்தான் மோகன். அன்று தெருப் பையன்கள் எவரையுமே கண்ணில் காண முடியவில்லை. மோகனுக்கு ஒரே சலிப்பாக இருந்தது. மறுநாளும் அவனைக் காணவில்லை. மூன்றாவது நாள் நண்பகல் வேளையில் அவன் வந்துசேர்ந்தான்.

பட்டணத்தில் ஒரு முதலாளியின் வீட்டில் கல்யாணம். இரண்டு நாள் விருந்துகள் நடைபெற்றன. அங்கேதான் அவன் சுற்றிக்கொண்டிருந்தான். அவன் மட்டும் அல்ல. இன்னும் பல பையன்கள் அங்கே வந்திருந்தார்கள்.

"தின்னுப்புட்டுத் தின்னுப்புட்டு வாந்தி எடுத்தேன். என்னவெல்லாம் தின்னேன் தெரியுமா?"

இப்படிச் சொல்லிவிட்டு வீங்கிப்போயிருந்த தன் வயிற்றில் அந்தப் பையன் தாளம் போட்டான்.

பேராச்சரியத்துடன் மோகன் அந்தப் பொறுக்கிப் பையனைப் பார்த்தான். அவனோ, அங்கிருந்து உடனே போகப் புறப்பட்டான். முல்லைக்கல் கோயிலில் திருவிழா நடைபெறுகிறதாம். ஐந்து யானைகளின் மேல் சாமி பவனி, வாண வேடிக்கைகள் உண்டாம். அங்கேதான் அவன் போகிறான். அவன் மோகனிடம் கேட்டான்:

"நீ வறியா?"

"நான் வரலே. அம்மா விடாது."

"நான் போறேன்."

மோகன் கேட்டான் :

"ஒங்கம்மா ஒன்னை விடுமா?"

சலிப்போடு அவன் பதில் சொன்னான்:

"எனக்கு அம்மாவும் இல்லே; வீடும் இல்லே. நான் போறேன், நேரமாச்சு."

ஒரு பாட்டின் ஏதோ ஒரு அடியைப் பாடியபடி அவன் அங்கிருந்து ஓடிவிட்டான். அவனைப் பார்த்துக்கொண்டு வெகு நேரம் நின்றான் மோகன். அந்தப் பையன்தான் என்னவெல்லாம் பார்க்கிறான்!

இவ்வாறு அவர்களிடையே நட்பு நெருங்கிவந்தது. ஒருநாள் வள்ளி அதைத் தெரிந்துகொண்டாள். இப்படிப்பட்ட பையன்களுடன் சிநேகம் வைத்துக்கொள்ளக் கூடாது என்று சொல்லி விலக்கினாள். இருந்தாலும், அந்த பந்தம் அறுக்க முடியாத ஒன்றாகி விட்டது. தாய்க்குத் தெரியாமல் வாசலில் நின்றபடி அந்தப் பையனைப்

பார்ப்பான் மோகன். அவனுடன் பேசுவான். மோகனைப் பொறுத்தவரை அந்தப் பொறுக்கிப் பையன் ஒரு அற்புதப் பொருளாகிவிட்டான். தாயில்லை; தகப்பனில்லை; வீடில்லை. தன் போக்கில் அவன் சுதந்திரமாகத் திரிகிறான்.

அந்தப் பொறுக்கிப் பையனிடமிருந்து மோகன் சில விஷயங்கள் தெரிந்துகொண்டான். நாள் தவறாமல் மோகனின் தகப்பனை முல்லைக்கல்லில் பார்ப்பதுண்டு என்று அவன் சொன்னான். மோகனின் அப்பன் ஒரு தோட்டியென்ற விஷயத்தையும் அவன் தெரிவித்தான்.

மோகன் அவன் அம்மாவிடம் தினசரி கேட்கும் கேள்விக்குப் பதில் இப்பொழுது கிட்டிவிட்டது. 'எங்கேயம்மா அப்பா தினமும் போகிறார்' என்று அவன் தாயிடம் கேட்பதுண்டு. 'வேலைக்குப் போகிறார்' என்று அவள் பதில் சொல்லுவாள். எல்லாவற்றையும் தெரிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆவலோடு 'என்ன வேலைக்கு?' என்று கேட்பான் மோகன். தாய் என்ன செய்வாள்? 'உனக்கு பிஸ்கோத்தும், பழமும், சோறும் கொண்டுவரும் வேலை தான்' என்பாள். இப்பொழுது அப்பா முல்லைக்கல்லுக்குத்தான் போகிறாரென்றும், அவர் ஒரு தோட்டி என்பதும் அவன் தெரிந்து கொண்டு விட்டான்.

அந்தப் பொறுக்கிப் பையனுக்கும் தகப்பனிருந்தான். அவனும் ஒரு தோட்டிதான். அந்தத் தோட்டியின் பெயர் பிச்சாண்டி. அப்பன் பெயர் அவனுக்குத் தெரியுமே ஒழிய, அவனுக்குத் தன் பெயர் தெரியாது. மோகனுக்கு, தாயிடம் மற்றொரு கேள்வியும் கேட்க வேண்டியிருந்தது.

"தோட்டீன்னா என்னம்மா?"

பதில் சொல்லத் தெரியாமல் வாயடைத்துப்போன வள்ளி அவனிடம் கோபப்பட்டாள். "வேண்டாத கேள்வியெல்லாம் கேட்கக் கூடாது."

அவள், அவனை அடிப்பதாகப் பயமுறுத்தினாள். மோகன் பயந்துபோனான்.

அன்று இரவு சுடலைமுத்துவிடம் வள்ளி விஷயத்தைச் சொன்னாள். 'தோட்டி என்றால் என்ன?' என்று மோகன் கேட்டதைத் தெரிவித்தாள்.

சுடலைமுத்து நடுங்கினான். அவன் கற்பனைக் கோட்டையில் விழுந்த முதல் சம்மட்டி அடி! ஆனால் வள்ளி எதிர்பார்த்தது போல் கோபக் கனல் ஜொலிக்கவில்லை. சிறிது நேரம் கழித்து நீண்ட பெருமூச்சோடு அவன் சொன்னான் :

"அவெனுக்குத் தெரியாமே இருக்காதுன்னு எனக்குத் தெரியும். ஆனா இப்பவே தெரியாம இருந்திருக்கலாம்."

சிறிது நேரத்திற்குப் பின்னால் மிகுந்த ஏமாற்றத்தோடு சுடலைமுத்து சொன்னான் :

"நீ சொன்னது சரிதான் வள்ளி. நம்ம மவன் அப்படி ரொம்பப் பெரிய ஆளா ஒண்ணும் ஆயுட முடியாது. நான் எப்பமும் அதெத்தான் நெனச்சுக்கிட்டு இருக்கேன்."

கணவனின் வாயிலிருந்து வந்த நிராசையான வார்த்தைகள் வள்ளியின் மனதைத் தொட்டன. அவளுக்கும் மனதை வதக்கி எடுக்கும், சோகமயமான அந்த யதார்த்த உண்மை புலப்பட்டது. கணவனின் நடைமுறைக்குச் சாத்தியமற்ற ஆசைக் கனவுகளை அவள் எதிர்த்திருந்தாலும், தன் மகன் பெரிய மனிதனாக வேண்டும் என்பது அவளுக்கும் பிரியமான விஷயமாகத்தானிருந்தது. தன்னம்தனியாக இருக்கிறபொழுது அவளும், அவன் பெரிய மனிதனாவதையும், அதற்குரிய வழிகளையும் எண்ணிக்கொண்டிருப்பாள். ஆயிரமாயிரம் முட்டுக்கட்டைகள் அவளுக்குத் தட்டுப்பட்டன.

கணவனும் மனைவியும் அப்படி ஒரே இடத்தை அடைந்தார்கள். சுடலைமுத்து தொடர்ந்து சொல்லத் தொடங்கினான்:

"நான் எப்பவும் நெனச்சுக்கிட்டே இருக்கிறது இதுதான். அவனுக்கு எண்ணைக்காவது தோட்டியின் மவங்குது தெரிஞ்சுபோகும். அவன் எங்கெ போனாலும் தோட்டியின் மவன்தான். அது ரெண்டும் எடஞ்சலான சங்கதிதான்."

வள்ளி சொல்ல வேண்டியதைச் சொன்னாள்:

"நானும் அப்படி நெனக்கறதுண்டு. 'நான் தோட்டிக்கு மவனில்லெ'ங்கற மாதிரி அவன் நடந்துகிட்டாலும் என்ன புண்ணியம்? ஒண்ணெ நெனச்சுப் பாரேன். அவனுக்கு எங்கிருந்து பொண்ணு கெடைக்கும்? தோட்டிப் பொண்ணில்லாமே வேறே பொண்ணு கெடைக்குமா?"

"ஆமா, அதுவும் சரிதான். இருந்தாலும் நான் அவனெ ஒரு தோட்டிக்கு மவனாட்டம் வளர்த்த மாட்டேன். அது கண்டிப்புத்தான். அவன் தோட்டிக்கு மவனாகப் போயுட்டாலும், அவனுக்கு மவன், தோட்டியின் மவனாகப்படாது."

நீண்ட பெருமூச்சு விட்டவாறு வள்ளி சொன்னாள் :

"அந்தக் கொளந்தெ தோட்டிக்கு மவனுக்கு மவனாயுடுவான்."

சிறிது நேரம் ஆலோசித்துவிட்டு சுடலைமுத்து சொன்னான்:

"ஆமா."

"ஆரு இந்தத் தோட்டியெ மொத மொதல்லெ உண்டாக்கினவன்?"

"அப்படி நீயும் நெனச்சுப் பாக்கிறியா?"

"ஆமா, நெனச்சுப் பாக்குறேன். இப்படியெல்லாம் மின்னே நான் நெனச்சுக்கிட்டிருக்கலெ. இப்ப இப்ப அப்படியெல்லாம் மனசு ஓடுது."

"தோட்டியா இருக்குது ஒனக்கு அருவருப்பா இருக்குதா?"

"இப்படிக் கேட்டா நான் என்ன சொல்லுவேன்? என்னால் அருவருப்பா நெனைக்க முடியுமா?"

அவனுக்கு, அவள் தன்னைப் போலவே சிந்திக்கிறாள் என்பது தெளிவாகத் தெரிந்தது. வள்ளி சந்தேக நிவர்த்திக்காகக் கேட்டாள் :

"தோட்டியே இல்லாத காலம் வருமா?"

"ஆருக்குத் தெரியும்?"

"இல்லாத காலம் வராது. இல்லெ, அதெப்படி வரும்? கக்கூசுண்டுன்னா தோட்டியும் வேண்டாமா?"

வள்ளியின் இந்த சந்தேகத்தைக் குறித்துச் சுடலைமுத்து சிந்திக்க வில்லை. தோட்டி இருக்கட்டும் இல்லாமலிருக்கட்டும். அதைப் பற்றி அவனுக்குத் தெரிய வேண்டாம். அவன் தோட்டியாகவே வாழ்ந்து விட்டுப்போகிறான். ஆனால் தன் தகப்பன் தோட்டி என்னும் விஷயத்தை மோகன் தெரிந்துகொண்டுவிட்டான்.

அதனால் ஏற்படும் கௌரவக் குறைவும் அவனுக்குத் தெரியும். பல தடைகளை எதிர்த்து மோத வேண்டியிருக்கும். அந்தத் தடைகளை மீறுவதற்கு அவன் மகனுக்குத் திராணி இருக்குமா?

வள்ளி கேட்டாள் "இந்த வேலயெ வேண்டாமுன்னு தள்ளிப்புட்டாலோ?"

சுடலைமுத்து சொன்னான் :

"வீடும் வயலுமா இருப்போம்னா அதுக்கு இன்னம் ஐநூறு ரூவா கூடக் கொடுக்கணும்னு தலைவரு சொன்னாரு. அதுவும் கொடுத்துப்புட்டேன்னா நான் இந்த வேலைக்கே முளுக்குப் போட்டுடுவேன். இப்பல்லாம் முந்தி மாதிரி பணம் கொடுக்க முடியுதில்லே."

ஒவ்வொரு நாளும் வள்ளி பயந்து செத்துக்கொண்டிருந்த பிரச்னையும் தலைதூக்கி மனதை அலட்டிற்று. மொத்தம் என்ன கொடுத்திருக்கிறான், அதற்குக் கணக்கு இருக்கிறதா, தலைவர் ஏமாற்றிவிட மாட்டாரா, ஏமாற்றிவிட்டால் என்ன செய்வது?

சுடலைமுத்து கணக்கு விபரங்களை விரிவாகச் சொல்லி அவளைத் திருப்திப்படுத்தினான். தலைவர் ஏமாற்றும் ஆசாமியல்ல. அவர் அவனுக்கு வீடும் வயலும் வாங்கிக் கொடுப்பார்.

'கடவுள் காப்பாத்தட்டும்' என்று மட்டும்தான் வள்ளியால் சொல்ல முடிந்தது.

முதலியார் வக்கீல் அவருடைய பேத்தியை வீட்டில் வைத்துப் படிப்புச் சொல்லிக்கொடுக்க ஆரம்பித்தார். மோகனையும் பள்ளியில் சேர்க்க வேண்டும். அது ஒரு புதிய பிரச்னையாக எழுந்தது.

அவர்கள் வசிக்கும் வீட்டுக்குப் பக்கம் ஒருவர் சில குழந்தைகளுக்கு மண்ணில் எழுதிப் படிப்புச் சொல்லிக்கொடுத்துக்கொண்டிருந்தார். அங்கு கொஞ்ச நாள் படிக்க வைத்துவிட்டு, பின்னால் பள்ளியில் சேர்க்கலாமென்பது சுடலைமுத்துவின் எண்ணம். ஒரு நாள் மதியத்திற்கு மேல் சுடலைமுத்து அங்கு போனான்.

வாத்தியார் சந்தனமும் விபூதியும் பூசிக்கொண்டு, முன் குடுமியும் வைத்துக்கொண்டிருந்தார். சுடலைமுத்து அவன் வந்த விஷயத்தைச் சொன்னான். வாத்தியார் கேட்டார் :

"நீ அந்த ஸேட்டு வியாபாரி வீட்டுக்கு அடுத்தாப்லெ தோட்டி தானே?"

"ஆமா?"

ஆசிரியர் சற்று கௌரவத்தோடு கேட்டார் :

"உன் பையனை இங்கேதான் படிப்பிக்கணுமென்று ஏன் நினைத்தாய்?"

"பக்கத்திலெ இருக்குதுனாலெதான்."

"ஹும், ஆனால் இங்கெ சேர்த்துக்க முடியாது."

வாத்தியார் சுடலைமுத்துவின் முகத்தில் பார்வையை ஊன்றிக்கொண்டு தொடர்ந்து சொன்னார் :

"இங்கெ முடியாது தெரிஞ்சுதா? டேய், என்ன அக்கிரமம் இது? இந்தக் குழந்தைகள் பக்கத்தில் நீ உன் குழந்தையையும் கொண்டுவந்து உட்கார வைத்துவிடலாமென்று நினைத்தாய், இல்லையாடா? நன்றாக இருக்கிறதே"

சுடலைமுத்து, ஆசிரியரின் அறையினுள் உட்கார்ந்துகொண்டிருந்த குழந்தைகளையெல்லாம் பார்த்தான். அதில் பல குழந்தைகளையும் அவனுக்குத் தெரியும். ஒரு குழந்தை கயிற்றுத் தொழிற்சாலைக்குப் பக்கம் சோறு விற்கும் பெண்ணின் குழந்தை. மற்றொரு குழந்தை ரிக்ஷாக்காரனுடையது; வேறொன்று பிராமணக் குழந்தை. அங்கிருந்த எல்லாக் குழந்தையையும்விட அவன் குழந்தை லட்சணமுடையதுதான். இதையெல்லாம் சொல்வதற்குச் சுடலைமுத்து எண்ணினான். மறுநிமிஷம் அவனுக்கு, சொல்வதனால் என்ன பயன் என்று தோன்றிற்று.

அடுத்தபடியாக, சுடலைமுத்து தன் குழந்தையைக் கொஞ்சம் தூரத்திலிருந்த சர்க்கார் பள்ளியில் சேர்க்க முயன்றான். தலைமை ஆசிரியரை அவர் வீட்டில் போய்ப் பார்த்தான். அவர், மறுநாள் பதில் சொல்கிறேன் என்று சொன்னார். மறுநாள் போனபொழுது, வகுப்பில் சட்டப்படி சேர்க்க வேண்டியதற்கு மேல் குழந்தைகளைச் சேர்த்துவிட்டார்களென்றும், அதற்கு மேல் சேர்ப்பது சாத்தியமில்லையென்றும் பதில் சொன்னார். வேறொரு பள்ளிக்குச் சென்றபோது, அங்கு பள்ளி உதவி இன்ஸ்பெக்டரின் சம்மதம் வேண்டுமென்றார்கள். வேறொரு இடத்தில் மற்றொரு

சாக்குப்போக்குச் சொன்னார்கள்.

அவன் குழந்தைக்குப் பள்ளியில் நுழைய முடியாததன் காரணம் அவனுக்குத் தெரிந்தது. அவன் தோட்டியின் மகன். அதுதான்!

ஒரு நிஜாரும் சட்டையும் அணிவித்து அலங்காரம் செய்து, சுடலைமுத்து மோகனை வெளியே கூட்டிக்கொண்டு போனான். அவனையே நேராகக் காட்டுவோம் என்ற எண்ணம்தான். தலைமை ஆசிரியருக்கு மோகனை ரொம்பப் பிடித்துப்போய்விட்டது. தேவலை, நல்ல பையன் என்றார் அவர். உண்மையாகவே நல்லபடியாக வளரும் ஒரு குழந்தையென்றுதான் அவருக்குப்பட்டது. ஆனால், சொல்வதற்கு மட்டும் ஒரு நொண்டிச்சாக்கு இருந்தது.

தோட்டி, தன் குழந்தையைப் பள்ளியில் படிக்கவைத்தான் என்பது இதுவரை நடந்திராத விஷயம். தோட்டியின் குழந்தையைப் பள்ளியில் சேர்த்துக்கொள்வதில்லை. எழுதி வைக்கப்படாத அந்த சட்டத்தை எப்படி உடைப்பது?

மகனுக்கு எழுத்துச் சொல்லிக்கொடுக்க வேண்டியது மிகத் தேவை; படிப்புச் சொல்லிக் கொடுத்துத்தானாக வேண்டும். தலைமையாசிரியருக்கு லஞ்சம் கொடுத்தால் என்ன? ஒருசமயம் சாத்தியமாகி விடலாமென்று சுடலைமுத்துவுக்குத் தோன்றியது. அவன் ஓவர்சீயர் யஜமானை அணுகினான். இருபது ரூபாய் கொடுத்தால் காரியத்தை முடித்துத் தரலாமென்று ஒப்புக்கொண்டார்.

இருபதானால் இருபது. சுடலைமுத்து ஒப்புக்கொண்டான். இந்த விஷயம் நிறைவேற வேண்டியது மிக முக்கியம். ஒரு வாரத்திற்குப் பின்னால் ஓவர்சீயர், குழந்தையைச் சேர்த்துக் கொள்வதற்குத் தலைமை ஆசிரியர் ஒப்புக்கொண்டார் என்னும் விஷயத்தை அவனுக்குத் தெரிவித்தார். ஆனால் இரண்டு நிபந்தனைகள். 'குழந்தையின் பெற்றோர்' என்னும் இடத்தில் வேறு யாருடைய பெயரையாவது போட வேண்டும். பீஸ் இல்லையென்றாலும் தலைமை ஆசிரியருக்கு மாதா மாதம் இரண்டு ரூபாயாவது கொடுக்க வேண்டும்.

இதற்கும் சுடலைமுத்து ஒப்புக்கொண்டான். இவ்வாறு, முனிசிபல் தலைவரின் வண்டிக்காரனின் மருமகனாக மோகன் என்றொரு குழந்தை அந்தப் பாடசாலையில் ஒன்றாம் வகுப்பில் சேர்க்கப்பட்டான்.

அந்த நாள் சுடலைமுத்துவுக்கும் வள்ளிக்கும் விசேஷ

தினமாகும். அந்தப் பள்ளிக்கூடத்தில் அரைப் பட்டினிக்காரரான தலைமை ஆசிரியருக்கு மாத வருமானம் அன்றிலிருந்து பத்து ரூபாயாக உயர்ந்தது.

அவ்வளவு சுத்தமாகப் போகும் குழந்தை அந்தப் பள்ளியிலேயே இல்லை. தோட்டியின் மகனென்று யாருமே சொல்லமாட்டார்கள். தோட்டியின் மகனாகத் தோற்றமளித்துவிடக் கூடாதென்பதற்காக, அவர்கள் இருவரும் படாதபாடு பட்டார்கள். இவ்வளவு தூரம் கவனிக்கிறபொழுதும், அந்தக் குழந்தையின் கல்வி, அந்தத் தாய் தந்தையரின் வாழ்க்கையிலேயே அதி முக்கியமான விஷயமாக இருக்கிறபொழுதும், வள்ளியின் மனதிற்கு அமைதியில்லை. எத்தனை வகுப்புவரை படிக்க வைக்க முடியும்? ஆலப்புழைத் தோட்டிகளில் ஒருவராவது அன்றுவரை தங்கள் குழந்தையைப் பள்ளிக்கு அனுப்பியதில்லை. இருபது ரூபாய் லஞ்சம் கொடுத்துப் பள்ளியில் சேர்ப்பதற்குரிய யோகம் மோகனுக்கு இருந்தது. ஆனால் இதை இப்படியே தொடர்ந்துகொண்டு போவது சாத்தியமா?

மகனைப் பள்ளியில் சேர்ப்பதற்கிருந்த திடசங்கல்பம், அது சாத்தியமாகிவிட்டதில் ஏற்பட்ட உணர்ச்சி, இவை தணிந்த பின்பு, சுடலைமுத்துவும் மெதுவாகச் சிந்தனை செய்யத் தொடங்கினான். மோகனை எதுவரை படிக்க வைக்க முடியும்? எவ்வளவு நாள் சொல்லிக் கொடுக்க முடியும்? இனி என்னென்ன தடைகள் முளைக்கும்? அவன் எதிர்காலம் எப்படியிருக்கும்?

மீண்டும் கணவனும் மனைவியும் ஒன்று சேர்ந்தார்கள். அபிப்பிராயங்கள் ஒன்றுபடும்போது அவர்களும் ஒன்றுபட்டார்கள். வள்ளி மீண்டும் ஒரு தடவை அவர்களுடைய உயர்வான லட்சியங்கள் நிறைவேறப் போவதில்லையென்று சொன்னபோது சுடலை முத்து அதை ஒப்புக்கொண்டான். சிந்தனை செய்து தெரிந்துகொண்ட மற்றொரு விஷயத்தையும் அவன் சொன்னான்.

"ஏந் தெரியுமா நம்ம கொளந்தயெப் பள்ளிக்கூடத்திலெ சேத்துக்கிடலெ? தோட்டியின் கொளந்தெ படிக்கத் தொடங்கிட்டா அப்புறமா தோட்டியில்லாமெ ஆயுடும்னு பயந்துதான்."

சுடலைமுத்து அந்த விஷயத்தைத் தெளிவாகச் சொன்னான் :

"எளுத்துப் படிச்சுப்போட்டா, அப்புறமா தோட்டிக இல்லாமெ ஆயுடும்."

அது சரிதான் என்று வள்ளியும் ஒப்புக்கொண்டாள். ஊர் ஊராக

இருக்கும் இந்தப் பள்ளிகளெல்லாம் யாருக்காக?

"தோட்டிக்கும் பிச்சைக்காரனுக்கும் படிக்க முடியாது."

அந்தப் பொறுக்கிப் பையன் மோகனை எதிர்பார்த்து வழியில் நின்றுகொண்டிருப்பான். பள்ளி வரும்வரை கூடவே பின்தொடர்ந்து செல்வான். வள்ளி தினசரி மகனுக்கு ஒரு சக்கரம் கொடுப்பாள். அதை வைத்து வேர்க்கடலையோ, சர்க்கரை மிட்டாயோ, ஏதாவது அவன் வாங்கித் தின்பான். பள்ளி விடுவதற்கு முன், பகல் வேளை பூராவும் எங்காவது சுற்றித் திரிந்து பொறுக்கித் தின்றுவிட்டுக் கும்பியை ஊதவைத்துக்கொண்டு அந்தப் பையனும் வந்து சேருவான். மோகன் வீடுவரை அவன் கூடவே வருவான்.

இப்படி, வள்ளிக்கும் சுடலைமுத்துவுக்கும் தெரியாமல் இந்த நட்பு வளர்ந்துகொண்டே வந்தது.

பள்ளியிலிருந்து திரும்பி வந்து, மோகன் தாயிடம் நிறைய விஷயங்கள் சொல்லுவான். அவன் ஆசிரியரின் வேஷ்டி கிழிந்து தைக்கப்பட்டிருந்தது; அவர் பெரிய முன்கோபக்காரர்; ஒவ்வொரு குழந்தையிடத்திலும் என்ன என்ன சாப்பிட்டீர்களென்று கேட்பார் . . . ஒருநாள் ஒரு குழந்தை ஆசிரியரிடம் கேட்டது :

"ஸார், நீங்க என்ன சாப்பிட்டீங்க?"

அவர் ஒன்றும் சாப்பிடவில்லையென்று சொன்னார். மோகன் தாயிடம் கேட்டான்:

"என்னம்மா வாத்தியாரு ஒண்ணுமே சாப்புடலெ?"

அவள் எப்படி பதில் சொல்லுவாள்?

மத்தியானம் வீட்டுக்குப் போகாத குழந்தைகள் அவன் வகுப்பில் நிறைய உண்டு. வீட்டில் சாப்பிட ஒன்றுமில்லாததனால் தான் போவதில்லை. காலையில் கஞ்சியோ காப்பியோ குடிக்காமல் வருபவர்களுண்டு. உடம்பெல்லாம் சிரங்காக, நைந்து கிழிந்துபோன பழங்கந்தலைச் சுற்றிக்கொண்டு வருபவர்களுண்டு. இப்படிக் கதை சொல்லிக்கொண்டே போனபொழுது ஒரு விசேஷமான சம்பவம் அவன் ஞாபகத்தில் வந்தது.

"என் பக்கத்திலே இருக்கிற ராமன் நாத்தமா நார்றான்மா, என்ன நாத்தம் தெரியுமா?"

அந்த நாற்றத்தை அப்பொழுதும் அனுபவிப்பது போல் மோகன் மூக்கைப் பொத்திக்கொண்டான்.

"நாளைக்கு நான் வாத்தியாரிட்டெ என்னெ அங்கிருந்து மாத்தி ஒக்கார வைக்கணும்னு சொல்லுவேன்."

இந்தக் கதைகளெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த தாய் கேட்டாள் :

"அதெல்லாம் சரி, இண்ணைக்கு என் கண்ணு என்னவெல்லாம் படிச்சே?"

"ஹூம், ரண்டு மூணு எளுத்துப் படிச்சேன். பத்துவரெ எண்ணப் படிச்சேன். அந்த ஸாரு ஒரௌவும் சொல்லித் தரமாட்டார். ஸாருக்குத் தூக்கம் தூக்கமா வருது. எப்பொப் பார்த்தாலும் தண்ணியெத் தண்ணியெ ஊத்திக் குடிக்கறாரு. இதுதான் அவருக்குச் சோலி."

படித்த எழுத்துகளை அவன் எழுதிக் காட்டினான்.

வேறொரு நாள் காலை முரண்டு பிடித்து மோகன் வள்ளியைத் தொந்தரவு செய்தான். அவனுக்கு முந்திய நாள் போட்டுக் கொண்டு போன நிஜாரும் சட்டையும் வேண்டாமாம்; அவனுக்குப் பௌடர் போட்டது போதாதாம்; அவனை வாசனை சோப்புத் தேய்த்துக் குளிப்பாட்ட வேண்டுமாம். அன்றுவரை அவன் அப்படி அடம்பிடித்ததில்லை. வள்ளி கோபத்தில் கேட்டாள் :

"நேத்துப் போட்டுக்கிட்டுப் போன நிக்கருக்கு என்னடா குத்தம்? அது வெள்ளவெளேர்னு இருக்குதே."

கண்ணைக் கசக்கிக்கொண்டு அவன் பதில் சொன்னான்.

"நான் நாற்றேன்னு சொல்லிக்கிட்டு எல்லாப் பசங்களும் எம் பக்கத்திலேருந்து மூக்கெப் பொத்திக்கிட்டு ஓடுறாங்கம்மா."

வள்ளிக்கு விஷயம் சட்டென்று பிடிபட்டது. உண்மையாக அவனிடமிருந்து நாற்றம் வீசவில்லை. தோட்டி நாறுவான்; அதனால் தோட்டியின் மகனும் நாறுவான். போக்கிரிப் பையன்கள் குறும்பு பிடித்துப்போய், வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் முறை இது. முன்னொரு நாள், எல்லோரும் மோகனைப் போல் சுத்தமாக வகுப்புக்கு வர வேண்டுமென்று வாத்தியார் சொன்னாரல்லவா? அதில் ஏற்பட்ட பொறாமை; பகை. அதற்குப் பதில் வஞ்சம் தீர்த்துக்கொள்கிறார்கள்.

வள்ளி மகனுக்குப் புது உடை போட்டு அனுப்பினாள். அதனால் மட்டும் அந்தப் பையன்கள் மூக்கைப் பொத்திக்கொண்டு ஓடுவதை நிறுத்திவிட மாட்டார்கள். தாய் அவனைக் குளிப்பாட்டி, நன்றாக உடை உடுத்தி, 'என் அதிருஷ்டம் கெட்ட மவனே' என்று வாய்விட்டுச் சொல்லி, முத்தம் கொடுத்து, கண்களில் நீர் தளும்ப வழி அனுப்பிவைத்தாள். அவன் வாழ்நாள் பூராவும் அந்த நாற்றம் அவனுடனேயே இருக்கும். அதற்குப் பின்னாலும் அவனுடன் ஒட்டிக்கொண்டிருக்குமோ?

இதயத்தை வேதனைப்படுத்திய அந்தக் கதையை வள்ளி கணவனிடம் சொன்னாள். சுடலைமுத்துவின் இதயமும் வேதனைப்பட்டது. இப்படி எவ்வளவோ வேதனைகள் இன்னும் அனுபவிக்க வேண்டியிருக்குமென்றான் அவன்.

வள்ளி முடிவான குரலிலே கண்டிப்பாகச் சொன்னாள் :

"இந்த வேலெயெக் கை களுவிப் போடணும்."

"அப்ப வீடும் தோட்டமும்?"

"அது வேறெ எதாவது வேலெ கீலெ பாத்துக் காசு சேத்து வாங்குணும்."

"அது சரிதான்."

"அப்புறமா நமக்கு இந்த ஊரெ விட்டே ஓடிப் போயுடணும். இன்னம் இந்த மாதிரியா எங் கொளந்தெக்கு வேறு அவமானம் வந்துடப் படாது. அவன், தோட்டியின் மவன்தாங்குதெ தெரிஞ்சிக்கிட்டான். இருந்தாலும் பெரியவனா வளர்ந்து வரச்சேயாவது அந்தக் குறை தீந்துபோவணும்."

அதையும் சுடலைமுத்து ஒப்புக்கொண்டான். ஆனால் அதில் வேறொரு சங்கடமிருக்கிறது. தலைவரிடம் கொடுத்திருக்கும் பண விஷயம் என்னாவது? வீடும் நிலமும் வாங்குவதற்குத் தேவையான பணத்தில் ஒரு கணிசமான தொகை வெகுமதியாகக் கொடுப்பதாக அவர் சொல்லியிருக்கிறார். அந்த வார்த்தையைப் பரிபூரணமாக நம்பி அவன் வேலை செய்துவருகிறான். இனிமேல், அதிக நாள் வேலை செய்யாமலே அந்தத் தொகை கிடைத்துவிடும்.

வள்ளி இந்த வேலையை விட்டுவிட வேண்டுமென்று ஒரேயடியாக முடிவு செய்துவிட்டாள். அந்தத் தீர்மானத்தின் பேரில்

அவள் அசையாமல் திடமாக நிற்கிறாள்.

"நமக்கு வெகுமதி தரதுக்கு மனசில்லேன்னாப் போயுட்டுப் போட்டும். நம்ப கொடுத்த பணத்தெத் திரும்ப வாங்கணும்."

சுடலைமுத்து ஒன்றும் பேசவில்லை. அவனும் அதைப் பற்றித்தான் எண்ணிக்கொண்டிருந்தான். தோட்டியாக இருப்பதைச் சுடலைமுத்துவைவிட வள்ளிதான் வெறுக்கிறாள்.

தூக்கமின்றி அலைக்கழிந்துகொண்டிருந்த அன்றைய இரவில் சுடலைமுத்து தன் வாழ்வைக் குறித்து எண்ணிப்பார்த்தான். அப்படிப் பின்னோட்டம் போடுவது வாழ்விலேயே முதன் முதலாவதாக நடந்தது. அவன் தந்தை நல்ல அன்புள்ள மனிதனாகத்தானிருந்தான். அவன் வாழ்ந்ததே இந்த மகனுக்காகத்தான். இசக்கிமுத்துவின் சாவை ஒட்டி நடந்த துயர சம்பவங்களை எண்ணிப்பார்த்த பொழுது சுடலைமுத்துவின் கண்கள் நிறைந்தன. அழுகி துர்நாற்றம் வீசிக் கொண்டிருந்த பிணம் - அந்த மாமரத்தின் அடிமூட்டில் நாய்கள் தோண்டிப் போட்டிருந்த காட்சி . . . அன்று அவனுடன் ஒரே ஒருவன் தான் இருந்தான். பிச்சாண்டி. பிச்சாண்டி அண்ணன்! எத்தனை நாட்கள் அவன் இலவசமாகச் சோறு தந்தான். சுடலை முத்துவைப் பாராட்டிப் பேசித் திரியும் வேலைதான் பிச்சாண்டிக்கு . . . பிச்சாண்டி அண்ணன் இன்று உயிருடன் இருக்கிறானா? அந்தக் குழந்தைகள் இன்று உயிரோடு இருக்கின்றனவா? ஐயோ, அந்தக் குடும்பம் அழிந்துவிட்டதே! சுடலைமுத்துவின் இதயம் வெந்து எரிந்தது. அவன் நரம்புகள் துடித்தன. வாய் உலர்ந்தது. அவன் சிறுபிராயம் முதல் பழகி வரும் சுந்தரம் கண்ணீர் வடித்துக் கொண்டு முன்னால் நிற்பதுபோல் சுடலைமுத்துவுக்குத் தோன்றிற்று. சோகமயமான அழுகைக் குரல் ஒன்று அப்பொழுது கேட்டது.

"அம்மோவ்!"

அம்முவை ஆஸ்பத்திரிக்குத் தூக்கிக்கொண்டு போனபோது அவள் குழந்தைகள் போட்ட கூப்பாடு! அப்போது கூடவே வேறு ஒரு கதறலும் கேட்டது.

"அம்மூ!"

"என்னா . . ."

சுடலைமுத்து கண்களை மூடிக்கொண்டான். காதைப் பொத்திக் கொண்டான். ஆனால் கண்களைப் பொத்திக்கொண்டு விட்டால்

புலப்படாமலும், காதைப் பொத்திக்கொண்டுவிட்டால் கேட்காமலும் இருக்கும் விஷயமல்ல அது. அப்படியெல்லாம் முயன்றுபார்த்தாலும், அந்தக் காட்சிகள் மேலும் தெளிவு பெறத்தான் செய்யும். ஓசைகள் மேலும் தெளிவாகக் கேட்கத்தான் செய்யும் இவ்வாறு அனாதையாய், நாதியற்றுப் போய்விடும் குடும்பங்கள், பந்தம் முறிந்ததினால் தகர்ந்து அழிந்துபோயிருக்கலாம்.

இப்படிப்பட்ட படுபாதகமான காரியங்களையெல்லாம் எப்படிச் செய்தோம் என்று சுடலைமுத்து தனக்குத்தானே எண்ணிப் பார்த்துக் கொண்டான். அவனுக்கு அவன் செய்த செயல்கள் எதையுமே நம்ப முடியவில்லை. எப்படி இதற்கெல்லாம் தைரியம் வந்தது? தன்னுள்ளிருக்கும் எந்தப் பிசாசின் ஆவேசம் இது! அவன் மனைவி, முதன் முதலாவதாக அவனை எதிர்த்துப் பேசியது சுடலைமுத்துவின் நினைவுக்கு வந்தது. அன்றுதான் அவள் அவனை எதிர்த்துப் பேசியது. சுந்தரத்தின் மனைவியை, அவளுடைய வாழ்விலிருந்து, அவளுக்குப் பந்தமுள்ள எல்லாவற்றிலிருந்தும் ஒதுக்கி, பலவந்தமாகக் கொல்வதற்கு வழியனுப்பிவைத்த அன்று அவள் எதிர்த்தாள். மனிதத் தன்மையையும், சாதாரணப் பகுத்தறிவையும் விற்றுவிட்ட வேளைகளிலெல்லாம் அவள் எதிர்த்திருக்கிறாள். அவளை ஒன்றும் தெரியாத மக்கு என்று அவன் எண்ணியிருந்தான் ஆனால், அவள் சொன்ன விஷயங்களெல்லாம் சரியாகத்தானிருந்தன. தோட்டியின் மகன் தோட்டியின் மகன்! அவள் சொன்னது சரிதான். அவன் என்றும் தோட்டியின் மகன்தான்.

தீக்குச்சியைக் கிழித்துச் சுடலைமுத்து விளக்கேற்றினான். மோகன் சுருண்டுபோய்ப் பந்து மாதிரி கிடக்கிறான். தோட்டியின் மகன்! மோகன் என்ற பெயரே அவனுக்குப் பொருத்தமில்லைதான். முதலியார் வக்கீலின் மனைவியின் சிரிப்பு எவ்வளவு அர்த்தமுடையது!

இசக்கிமுத்து வியாதியால் பீடிக்கப்பட்டுப் படுக்கையில் விழுந்த தினத்தைச் சுடலைமுத்து சபித்தான். அன்றுதான், தோட்டி வேலையைச் சீவன மார்க்கமாகக் கருதி, வாளியும், மண்வெட்டியும், அகப்பையும் எடுத்துக்கொண்டு அவன் வெளியே இறங்கினான். அன்று அதை எடுக்காமலிருந்தால் இன்று இங்கு தூங்கிக்கொண்டிருக்கும் குழந்தை தோட்டியின் மகனாக இருக்கமாட்டான். என்ன மதியீனம்! தோட்டியின் வேலையைச் சிறுபிராயத்தில் விரும்பி ஏற்றுக்கொண்டதாகச் சுடலைமுத்துவுக்கு நினைவில்லை. அந்த வேலையைப் பார்த்துக்கொண்டே முன்னேறி உயர்ந்துவிடலாமென்று எண்ணியதுதான் மாபெரும் தவறு.

இனிமேல் . . .? அன்றுவரை மனதில் இழை போட்டுப் பின்னிக் கொண்டு வந்ததையெல்லாம் அறுத்து எறிந்துவிடவா? வேறு என்ன வேலை பார்ப்பது? முனிசிபல் தலைவர் அவனை வேலையிலிருந்து நீக்கிவிடுவாரா? கூட்டாளிகளை நசுக்குவதற்கு முனிசிப்பாலிட்டியின் ஆயுதம் அவன். கூட்டாளிகளா? ஆமாம். கூட்டாளிகளில்லாமல் அவர்கள் வேறு யார்? வள்ளி சொன்னது போல் அவர்கள் 'நம்மவர்கள்' அல்லாமல் வேறு யார்? அவனும் தோட்டியல்லவா மற்ற குழந்தைகள் மாதிரி. அவன் வீட்டில் படுத்துறங்கும் குழந்தையும் தோட்டியின் குழந்தையல்லவா. மற்றவர்களைவிடத் தன்னை உயர்ந்தவன் என்று எண்ணியது - அந்த எண்ணம்தான் தன்னைக் கெடுத்துவிட்டதாகச் சுடலைமுத்துவுக்குத் தோன்றிற்று.

இருந்தாலும் அவன் இன்னும், இனி மேலும், முன்னேற வழியுண்டா என்று பார்ப்பான். பணம் வருகிறபொழுது அவன் மகன் தோட்டி மகனல்லாமல் ஆகிவிடுவான். "பார்ப்போம், பார்ப்போம். என் மகன் ஒரு தோட்டியின் மகனாக இல்லாமல் இருக்க முடியுமா என்று பார்ப்போம்." சுடலைமுத்து தன்னைத் தேற்றிக்கொண்டான்.

அன்று மோகன் அழுதுகொண்டே வீட்டிற்கு வந்தான். பள்ளியிலே வாத்தியார் அவனை அடித்தார். அவர் பெரிய கோபக்காரர். இனிமேல் அவன் அந்த வாத்தியாரின் வகுப்பிற்குப் போகமாட்டேன் என்று அடம்பிடித்தான். நிஜாரை அவிழ்த்துப் பார்த்தபொழுது, அடிபட்ட மூன்று இடங்கள் தடிப்பேறி இருந்தன. பெற்ற தாயால் அதைப் பொறுக்க முடியவில்லை. அவள் கோபத்தோடு கேட்டாள் :

"எதுக்காம் எங்கண்ணுவெ அவரு அடிச்சாரு?"

"தோட்டிக்கு மவனில்லையா? சொல்லிக்கொடுத்தா தலேலெ ஏறாதுன்னு சொல்லி அடிச்சாரம்மா. அந்த வாத்தியாரு சொல்லித் தந்தா ஓரெளவும் தெரியாது."

அப்படியொன்றுண்டா? படிப்புச் சொல்லிக்கொடுத்தால் தோட்டியின் மகன் படிக்கமாட்டான் என்று சொல்வதில் அர்த்தமுண்டா? தன் மகன் நல்ல புத்திசாலி என்றுதான் வள்ளிக்குப் பட்டிருந்தது. அவன் படிப்பதில் கெட்டிக்காரனாக இருப்பான் என்றுதான் அவள் எண்ணிக்கொண்டிருந்தாள். அவள் படித்ததில்லை. இருந்தாலும், ஒவ்வொரு நாளும் மகன் என்னென்ன படிக்கிறான் என்பதைக் கேட்டுத் தெரிந்துகொள்வதுண்டு. படித்ததையெல்லாம் மோகன் அவளிடம் சொல்வான். வீட்டில் இருக்கும்போது வாய் விட்டு உரக்கப் படிப்பான். ஒருவேளை அவன் பெரிய புத்திசாலி

இல்லாமலிருக்கலாம்; இருந்தாலும் அவனுக்குத் தலையில் ஒன்றும் ஏறாது என்று சொல்வது . . . தோட்டியின் மகன் படிக்கச் சென்றுவிட்டால் இதுவும் கேட்க வேண்டும். அடி உதையும் வாங்கிக்கொள்ள வேண்டும்.

மோகன் மற்றொரு விஷயமும் தாயிடம் சொன்னான் :

"தோட்டியா இருக்க வேண்டாம்னு அப்பாட்டெ சொல்லிடு அம்மா. அதுதான் அப்பா எங்கூட ஒக்காந்து சாப்பிடவே மாட்டேங்குறா. நாளைக்கு அப்பா வேலைக்குப் போக வேண்டாம்."

விஷயம் தெரியாமலிருந்த அவனும் எல்லாம் அறிந்துகொண்டு பேச ஆரம்பித்துவிட்டான். சொல்லிப்பார்த்தான்; செய்யவில்லை. இப்பொழுது உத்திரவு போடுகிறான் : 'அப்பன் தோட்டியா இருக்க வேண்டாம்' தோட்டியாக இருப்பது என்றால் என்னவென்று அவனுக்குத் தெரியுமா? தெரிந்திருக்கும். இல்லாவிட்டால் இவ்வளவு கண்டிப்பாக அவன் சொல்வானா? விஷயம் என்னவானாலும் அந்தச் சங்கதியை வெளியே சொல்லவே அவள் பயந்தாள்.

அவன் தொடர்ந்து மன்றாடினான் :

"அம்மா, அப்பாட்டெ சொல்லுவியா, அம்மா?"

சரி என்று வள்ளி ஒப்புக்கொண்டாள். மோகனுக்குக் குஷி பிறந்துவிட்டது. அப்பாகூட உட்கார்ந்து சாப்பிடலாமென்பது மட்டுமல்ல; பள்ளியில்கூட இனிமேல் கேலிக்கு ஆளாக வேண்டியிராது. அவன் அதையே சொல்லிச் சொல்லி மகிழ்ந்துகொண்டிருந்தான். நடுவே அவன் தாயிடம் கேட்டான் :

"தோட்டிக்கு என்னம்மா வேலெ?"

ஆபத்தான கேள்வி! தோட்டி வேலையென்றால் என்னவென்று அவன் இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. என்ன பதில் சொல்லுவது? தெரியாமல் வள்ளி குமைந்தாள்.

"அது எங் கண்ணுவுக்குச் சொன்னா வெளங்காதுடா."

"நீயும் அப்ப வாத்தியாரெ மாதிரித்தான்."

அவள் மனம் மறுநிமிஷம் சஞ்சலப்பட்டது. என்னவெல்லாமோ எண்ணிற்று. அந்த உண்மையை அவனுக்குச் சொல்லிவிடுவதுதானே

நல்லது? எதற்காக மறைக்க வேண்டும்? எப்படியும் அவனுக்கு அது பின்னால் தெரியத்தான் போகிறது. அதைவிட நல்லதல்லவா வீட்டிலேயே தெரிந்துகொள்வது? இருந்தாலும் அதைச் சொல்ல வள்ளிக்குப் பயம். அவள் வாயைத் திறக்கவில்லை. மகனை இறுக அணைத்து நெற்றியில் முத்தமிட்டவாறே சொன்னாள் :

"நம்பளெல்லாம் ஏளைகள்டா கண்ணூ! வெறும் அனாதைகள்."

"அப்ப தோட்டியின்னா ஏளென்னு தானாம்மா அருத்தம்?"

"ஆமா."

மோகனுக்கு ஆவல் பூர்ணமாக அடங்கி, திருப்தி ஏற்பட்டு விடவில்லை. இருந்தாலும் அவனுக்கு ஒரு பதில் கிடைத்துவிட்டது. அதனால் சிறிது நம்பிக்கையும் ஏற்பட்டது.

தோட்டியின் மகனுக்குத் தோட்டியென்றால் யாரென்று தெரியாது. ஆனால் அவன் வயதையொத்த மற்ற குழந்தைகளுக்குத் தெரியும். ஏனெனில் அவர்கள் தோட்டியை வெறுப்பவர்கள்.

மகன் இட்ட உத்தரவை வள்ளி கணவனிடம் தெரிவித்தாள்.

"இனிமே எந்தச் சாக்குப்போக்கும் சொல்லறதுக்கு இல்லெ. எப்படியாவது இந்த வேலயெக் கைகளுவிப்போடணும். அவனுக்கு எல்லா விஷயமும் தெரியறதுக்கு முன்னாலேயே செய்துபோடணும்."

சுடலைமுத்துவுக்கு அனுகூலமாக ஒரு பதில் சொல்ல முடியவில்லை. அவன் முனிசிபல் தலைவரைப் போய்ப் பார்த்தான். வீடு, நிலம் பற்றிய விஷயத்தைப் பிரஸ்தாபித்தான். அப்பொழுதும் அதெல்லாம் அவரே வாங்கிக்கொடுப்பதாகத்தான் சொன்னார். அவரிடம் கொடுத்திருக்கும் பணத்தைத் திரும்பத் தந்தால் தேவலையென்று அவன் சொன்னான். அவர் கோபப்பட்டுவிட்டார்.

ஆதங்கத்தோடு வள்ளி கேட்டாள் :

"அந்தப் பணம் இனிமே கிடைக்காதோ?"

"சே! தராமெ இருக்கமாட்டார்."

"அப்படின்னா வாங்கிவிடுவதுதானே?"

"அப்படியில்லெ, நான் அவசரப்படுறதினாலெதான் அவரு

கோபப்படுறாரு."

வள்ளிக்கு இதிலொன்றும் நம்பிக்கை ஏற்படவில்லை. அந்தப் பணம் திரும்பக் கிடைக்காதென்று யாரோ அவள் மனதுள் சொல்லிக்கொண்டே இருந்தார்கள். இருந்தாலும் ஒரேயடியாக் கிடைக்காது என்று நினைக்கவும் அவளுக்குப் பயம். அவள் கேட்டாள் :

"அந்தப் பணம் கெடைக்கலேன்னு சொல்லி வேலெயே வேண்டாமுன்னு வச்சுட்டாயென்னா?"

"வேலெயிலேருந்து போயுட்டா பணம் மீளற விஷயமே கஷ்டமில்லையா?"

வள்ளியின் புத்தி, கூர்மையாக வேலை செய்தது. அவள் மீண்டும் கேட்டாள் :

"அப்ப அது கெடைக்காதா?"

சுடலைமுத்துவுக்கு சிறிது கோபம் வந்தது.

"ஒடனெ அப்படியா சொல்வது?"

சுடலைமுத்து இந்தத் தோட்டி வேலையை விட்டுப் போவதற்கு ஒரு வழி பார்த்து வைத்துவிட்டான். சுடுகாட்டில் ஒரு காவல்காரனை ஏற்படுத்த வேண்டுமென்ற யோசனை முனிசிப்பாலிட்டிக்கு இருந்தது. அந்த வேலை அவனுக்குக் கிடைக்க வழி இருக்கிறது. அதானாலும் போதுமென்று வள்ளி அபிப்பிராயப்பட்டாள்.

தாய் அவனிடம் பொய் சொன்னாள் என்ற குற்றச்சாட்டோடுதான் மறுநாள் மோகன் வீட்டினுள் நுழைந்தான். என்ன பொய் சொன்னேன் என்று வள்ளி அவனிடம் கேட்டாள். அவன் சொன்னான் :

"அம்மா, நேத்திக்குத் தோட்டி ஏளென்னு சொன்னியே, தோட்டி ஏளெ இல்லை அம்மா."

அவன் தெரிந்துகொண்டுவிட்டான்!

மோகன் தொடர்ந்தான்.

"இண்ணைக்கு மதியம் நான் போறப்போ வண்டியெ

இளுத்துக்கிட்டு ஒருத்தன் போனான். என்ன நாத்தம் தெரியுமா? நான் மூக்கெப் பொத்திக்கிட்டு ஓடினேன். அப்ப ஒரு பய எங்கிட்டெ சொன்னான். அவன்தான் தோட்டியாம்! அம்மா, அப்பாவும் இப்படி வண்டியெ இளுத்துக்கிட்டுப் போவாராம்மா?"

தோட்டி என்றால் யார் என்று மோகன் தெரிந்துகொண்டதும் பெரும் குழப்பம் ஏற்படுமென்று வள்ளி எதிர்பார்த்திருந்தாள். மோகனோ சாதாரணமாகப் பேசுவது போல் இதை விசாரிக்கிறான். அதைத் தெரிந்துகொண்ட பின்பும் அவனுக்கு அதிர்ச்சியொன்றுமில்லை. இதை அவன் ஏற்கனவே தெரிந்துகொண்டிருந்தாலும் அனர்த்தம் ஒன்றும் விளைந்திராது. ஒரு சமயம் அந்த வண்டிக்குள் என்ன இருக்கும் என்று தெரிந்துகொள்ளுகிறபொழுதுகூட அப்படியொன்றும் அவன் ஆச்சரியப்படமாட்டான். வள்ளி அவன் கேள்விக்கு மெதுவாக, உணர்ச்சியற்றுப் பதில் சொன்னாள் :

"அப்பாவும் இப்படி இளுத்துக்கிட்டுப் போவாரு."

அவன் சிந்தனை வேறு வழியில் ஓடிற்று.

"அப்பாவும் வெயில் பட்டு வேர்த்துப் போவாரு."

# 8

காலையில், கொத்துவால் சாவடிப் பாலத்து ரோட்டருகில் ஒரு டீக்கடையின் முன்பக்கம் ஒரு பிச்சைக்காரன் இறந்து கிடந்தான். அவனுக்கு வாந்தியும் வயிற்றுப் போக்கும் இருந்திருக்கிறது. ஊரிலுள்ள ஈ பூராவும் அந்த அனாதைப் பிணத்தை மூடிக்கொண்டிருந்தது.

டீக்கடைக்காரனுக்கு அது பெரும் தொந்தரவாக இருந்தது. அங்கிருந்து தூக்கித் தள்ளிப் போட்டுவிடலாமென்றால், அதைச் செய்யக் கூடாதென்று பக்கத்து வெற்றிலை பாக்குக் கடைக்காரன் சொன்னான்.

"நீ கொலைக்கு ஜவாப் சொல்ல வேண்டி வந்துடும். தொடாதே."

"பின்னென்ன செய்யறது? சனியன். இதுக்கு இங்கே விளுந்துதான் சாகணுமா?"

"முனிசிப்பாலிட்டியிலோ போலீஸ் ஸ்டேஷனிலோ போய்ச் சொல்லு."

அதில் வேறொரு கஷ்டமிருக்கிறது. அங்கு எங்கேயாவது போய்த் தகவல் கொடுத்தால் பணச் செலவிலே போய்த்தான் முடியும். பக்கத்திலிருக்கும் வக்கீல் குமாஸ்தா ஒருவன் அபிப்பிராயம் தெரிவித்தான்.

"போலீசுட்டெப் போனா ஒங்களெப் பிச்சுப் பிடுங்கிடுவாங்க. முனிசிப்பாலிட்டி கதெ எப்படீன்னா - அந்த ஓவர்சீயர், ஆசாமி யாருன்னு தெரியுமா? இது இங்கெ கெடந்துட்டுப்போகட்டும். அவங்களுக்குத் தெரிஞ்சு எடுத்துக்கிட்டுப் போவாங்க. அப்படித்தான் எனக்குத் தோணுது."

குமாஸ்தாவின் அபிப்பிராயத்தை எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள். ரிக்ஷாக்காரன் நாணு, வக்கீல் குமாஸ்தாவுக்கு

ஒரு 'ஸர்டிபிக்கேட்'டும் கொடுத்தான் :

"விஷயம் தெரிஞ்சவங்க வந்தா எல்லாம் அளகாத் தீந்து போவுது, பார்த்தீங்களா."

வழக்கம் போல் அந்தக் கடையில் வியாபாரம் நடந்துகொண்டிருந்தது. அன்று அனாதைப் பிரேதம் அங்கு கிடக்கப்போக, டீக்கடைக்காரனுக்கு வசூல் சற்று அதிகமென்பதையும் அவன் தெரிந்துகொண்டான். சாயங்காலத்திற்குள் பட்சணத் தட்டு காலியாகிவிட்டது. சாதாரணமாக அந்த வேளையில் ஏதாவது மிச்சம் மீதி இருப்பதுதான் வழக்கம். அன்று அப்படியல்ல. அனாதைப் பிரேதத்தைப் பார்க்க வந்தவர்கள், சற்று நேரம் அதைச் சுற்றி நின்று, உள்ளே நுழைந்து ஏதாவது தின்றுவிட்டு, ஒரு கப் டீயும் குடித்துவிட்டுப் போனார்கள். தேவலை, அதுவும் நல்லதுக்குத்தான் என்று ஓட்டல்காரன் திருப்திப்பட்டுக்கொண்டான்.

சாயங்காலம் வக்கீல் குமாஸ்தா மற்றொரு யோசனையும் கூறிவிட்டுப் போனான்.

"ராத்திரி, கேட்டியா மம்மூ, கொஞ்சம் கவனிச்சுக்கிடணும். ஏதாவது நாய் கீய் கடித்து இழுத்துப் போடப்படாது. பிரேதத்திலெ தடம் விழுந்துட்டா வந்தது ஆபத்து."

அது சிரமமான காரியம்தான். இருந்தாலும் மம்மூ விளக்கை ஏந்திக்கொண்டு, உறுமி ஒன்றோடொன்று கடித்துக்கொள்ளும் நாய்களை விரட்டியவாறே பொழுதை ஓட்டினான். நடுச் சாமமான பொழுது ஆகாயம் கறுத்து இருண்டது. கடைக்குள்தான் இருந்தானென்றாலும் மம்மூவுக்கு பயம்.

சிறிது நேரம் கழிந்ததும் புயலும் பெருமழையும் ஆரம்பித்தது. அது பெரும் பாக்கியமாக மம்மூவுக்குத் தோன்றிற்று. பொழுது புலர்ந்தபோது பிணம் அழுகி ஊதிப்போயிருந்தது. இருந்தாலும் மலமும் வாந்தியுமெல்லாம் மழைத் தண்ணீரோடு கலந்து குளிக்கும் படித்துறை வழியாக ஆற்றுக்குப் போய்விட்டது. சடலம் கிடந்த இடம், மம்மூவின் டீக்கடையின் முன்பக்கம் எல்லாம் துப்புரவாகி விட்டது.

பொழுது ஏற ஏற துர்நாற்றம் அதிகரித்துக்கொண்டே இருந்தது. மத்தியானமானபொழுது துர்நாற்றம் பொறுக்க முடியவில்லை. அன்று மம்மூவுக்கு வியாபாரம் குறைவுதான். ரொக்க வசூலே இல்லை.

ஆஸ்பின்வால் கம்பெனித் தொழிலாளர்களில், கடன் வைத்துக்கொண்டிருந்தவர்கள் மட்டும் வந்துபோய்க்கொண்டிருந்தார்கள்.

மீண்டும் பக்கத்துக் கடைக்காரர்கள் எல்லோரும் சேர்ந்து ஆலோசித்தார்கள். என்னதான் செய்வது? அன்றும் யாராவது வந்து விசாரிக்கும் வழி இல்லை. துர்நாற்றமோ, பொறுக்கக்கூடியதாக இல்லை. வக்கீல் குமாஸ்தாவுக்கு ஆள் சொல்லியனுப்பினார்கள். அவன் நன்றாக யோசித்துப் பதில் சொன்னான் :

"இங்கே இருக்கிறவங்க எல்லாரும் சேந்து ஒரு மனு அனுப்பணும்."

எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள். உடனே காகிதமும், பேனாவும் வந்தது, வக்கீல் குமாஸ்தா தொடர்ந்து சொன்னான்:

"கொஞ்சம் மூளையா எழுத வேண்டிய விஷயம்."

வக்கீல் குமாஸ்தா மனுவின் நகல் எழுத ஆரம்பித்தபொழுது, டீக்கடைப் பையன் வந்து 'முனிசிப்பாலிட்டியிலிருந்து ஆளுக வந்திருக்காங்க' என்றான். மம்மூவைக் கூப்பிடுவதாகவும் சொன்னான்.

ஒரு குப்பை வண்டியும், மூன்று நான்கு தோட்டிகளும் ஓவர்சியர் ஜோசப்பும் அங்கு நின்றுகொண்டிருந்தார்கள். ஓவர்சியர் என்னவோ அதிகார மிடுக்குடன் எழுதிக்கொண்டிருந்தார். டீக் கடைக்காரன், ஜோஸப்பைத் தலை வணங்கிக் கும்பிட்டான்.

ஓவர்சீயர் தலையை உயர்த்திக் கேட்டார் :

"இதோ செத்துக் கெடக்குது ஆரு?"

மம்மூ பயந்து விறைத்தான்.

"தெரியாது."

"இவன் எண்ணைக்குச் செத்தான்?"

"நேத்துக் காலெயிலெ செத்துக் கெடப்பதைப் பாத்தேன்.'

"இந்தச் சவத்தெ இப்படிப் போட்டுக்கிட்டு வியாபாரம் பண்ண ஆரு சொன்னது?"

அந்தக் கேள்விக்கு மம்மூ பதில் சொல்லவில்லை. அதுதான் அவன் பெயரிலுள்ள தவறு. இப்படியொரு கேள்வி பிறக்கும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. ஓவர்சீயரின் அதிகாரத் தொனி உயர்ந்தது.

"என்னடா பேசாம நிக்கறே?"

"அது வந்து . . . யசமான் . . . என்னெக் காப்பாத்தணும், காப்பாத்தணும்."

ஓவர்சியர் பல்லைக் கடித்துக்கொண்டு மம்மூவின் அடிமுதல் முடிவரை ஒரு தடவை பார்த்தார். திரும்பவும் எழுத ஆரம்பித்தார். அதற்குள் வக்கீல் குமாஸ்தா அங்கு வந்துவிட்டான். குமாஸ்தா வெகு கெட்டிக்காரன். ஓவர்சியரை நெருங்கினான்.

ஓவர்சியரும் வக்கீல் குமாஸ்தாவும் ஒதுங்கி நின்று சற்று நேரம் பேசினார்கள். மம்மூ, வெற்றிலைக் கடைக்காரன் கிட்டு, வக்கீல் குமாஸ்தா இவர்கள் மூவரும் ஒன்றுகூடிப் பேசினார்கள். வக்கீல் குமாஸ்தாவின் கையிலிருந்து ஒரு பொட்டலம் ஓவர்சியர் ஜேப்புக்கு இடம் பெயர்ந்தது.

பழைய அதிகாரத்திற்குக் கொஞ்சமும் குறைவின்றி ஓவர்சியர் மம்மூவைப் பார்த்தார். வக்கீல் குமாஸ்தாவைச் சுட்டிக்காட்டிக் கொண்டு சொன்னார் :

"இவரை நெனச்சு இந்தத் தடவெ ஒன்னெ விட்டிருக்கேன்."

மம்மூ நன்றியுணர்ச்சியுடன் கும்பிட்டான். வக்கீல் குமாஸ்தாவுக்குச் சற்று உயரம் அதிகரித்துவிட்ட மாதிரி இருந்தது.

தோட்டிகள் அந்த சவத்தை வண்டியில் தூக்கிப் போட்டார்கள். அவர்களும் மனிதர்களல்லவா? அழுகி முடைநாற்றம் எடுக்கும் சவத்தை எடுத்துத் தூக்கிப்போட வேண்டாமா? 'தண்ணி' குடிப் பதற்கு ஏதாவது சௌகரியம் செய்துதர வேண்டுமென்று ஓவர்சியர் மம்மூவிடம் சொன்னார். ஏதாவது போதும். சந்தோஷத்துடன் மம்மூ அதையும் கொடுத்தான்.

காலரா!

ஆலப்புழைப் பட்டணத்தில் அதை ஒட்டி ஏற்பட்ட சாவுக்குக் கணக்கு வழக்குக் கிடையாது. ஏனெனில் சாகும் ஆசாமிகள், மனித

சமுதாயத்தின் ஜனத்தொகையில் உட்பட்டவர்களல்ல. சாவது பிச்சைக்காரனும் அகதியும்தான். வீதியோரங்களிலிருந்தும், சந்துகளிலிருந்தும் லாரியில் தூக்கிப்போட்டுக்கொண்டு போவதைப் பார்க்கலாம். எப்படிக் கணக்கெடுப்பது! சாத்தியமே இல்லை. அது மட்டுமா, இப்படிச் செத்துத் தொலைகிறவர்கள் யாருக்காவது ஊர் பேர் உண்டா?

வசதியான ஆசாமிகளில் சிலரும் இறந்துபோய்விட்டார்கள். ஆனால் அவர்கள் சாவை முனிசிபாலிட்டிக்குத் தெரிவித்தார்கள். இப்படிச் சாவின் கருநிழலில் ஆலப்புழை நகரம் களை இழந்து, பயந்து வெருண்டுபோய் நாட்களைத் தள்ளிக்கொண்டிருந்தது.

இந்தப் பேராபத்திலிருந்து தப்புவதற்கு வழியுண்டா, இனி என்ன செய்வது, யார் காப்பாற்றப்போகிறார்கள்? எப்போது வந்து சேரும் என்று யாருக்குமே நிதானிக்க முடியவில்லை. நொடிப் பொழுதில் பல உயிர்கள் கொள்ளைபோய்க்கொண்டிருந்தன. அடுத்த கணம் வாழ்வது உறுதியில்லாமலிருந்தது. வருங்காலமே இருண்டு பயங்கரமாகக் காட்சியளித்தது.

மனச்சாந்திக்கு ஏதாவதொரு பற்றுக்கோல் வேண்டாமா, இந்தப் பேய்த் தாண்டவத்திலிருந்து மீள்வோம் என்ற நம்பிக்கை யாருக்குமில்லை. நோய் வந்து புகுந்துகொள்ளட்டும்; செத்துவிட்டுப் போகிறார்கள். எனினும் கடைசி மூச்சுவரை தப்பிவிடுவோமென்ற தன்னம்பிக்கை இருக்குமானால் மரண வேதனை சற்று குறையும்.

இந்த மாதிரி சந்தர்ப்பங்களில், பரம்பரை பரம்பரையாக ஊறி வந்த சில நம்பிக்கைகள் உங்களை அலட்டி எடுத்துவிடும். தொத்து வியாதி, வைசூரி இவைகளின் தேவதை பத்ரகாளி. முல்லைக்கல் கோவிலில், புஷ்பாஞ்சலியும், பகவதி சேவையும் சந்தனக் காப்பும் ஆரம்பமாகிவிட்டன. மீண்டும் ஆலப்புழைப் பட்டணத்தில் வழிபாடுகள் தொடங்கிவிட்டன.

அன்றும், டீக்கடையில் வியாபாரம் முறையாக நடந்து கொண்டிருந்தது. கால்வாயிலும் கமேர்சியல் கனாலிலும் அன்றும் ஆட்கள் குளிக்கிறார்கள்.

வாழ்க்கை தங்குதடையின்றி ஓடுகிறது. ஆனால் நேற்றுப் பார்த்தவனை இன்று பார்க்க முடியவில்லை. அவ்வளவுதான்!

சாவின் அந்தப் பயங்கரத் தாண்டவத்தின் விஸ்வரூபத்தைப் பார்க்க வேண்டுமென்றால் மயானத்திற்குச் செல்ல வேண்டும்.

ஒவ்வொரு நாளும் பொழுது புலரும்பொழுது, மண் குவியல்கள் உயர்ந்து இருப்பதைக் காணலாம். எரிந்து அடங்கிவிட்ட சிதையையும் பார்க்கலாம். சுடுகாடுகள், சிதையின் அக்கினிப் பிரகாசத்தினாலும், கள்ளைக் குடித்துவிட்டு மதிமயங்கிப்போன தோட்டிகளின் அட்டகாசத்தினாலும், இரவு வேளைகளில் உயிருடன் காட்சியளித்தன.

இவ்வாறு நாட்கள் சில சென்றதும், சடலங்களை நாய்கள் தோண்டி வெளியே இழுத்துத் தள்ளத் தொடங்கின. தினசரி, எட்டு பத்து பிணங்கள் வெளியே வந்தன. அப்படி வெளிவந்தவைகளில் சில பெரிய வியாபாரிகளுடையவை; சில பெரிய உத்தியோகஸ்தர்களுடையவை.

எனவே, அந்த விஷயத்திற்கு ஒரு முக்கியத்துவம் ஏற்பட்டது. மயானத்தில் ஆழமாகச் சவத்தைப் புதைப்பதில்லையென்ற உண்மையும் வெளிப்பட்டது. அது தவறுதான். சுடுகாட்டுக்கு ஒரு காவல்காரனை உடனே போட வேண்டுமென்று நகரசபைக் கூட்டத்தில் தீர்மானமாயிற்று.

அந்தப் புதிய நியமனம், சுடலைமுத்துவுக்குப் பிரயோசனமாக அமைந்தது! அவன்தான் முதலாவது மயானக் காவல்காரன்.

மயானக் காவலாளிக்கு ஒரு குறிப்பிட்ட வேஷமும் கொடுத்தார்கள். கறுப்பு நிஜார், கறுப்புச் சட்டை, ஒரு நீண்ட கழி. சுடுகாட்டு வாசலில், ஒரு மேட்டில் சுடலைமுத்து நின்றுகொண்டிருப்பான். அவன் கழியில் குழியின் ஆழத்தையும் அடையாளம் போட்டுக் கொடுத்திருந்தார்கள். இவ்வாறு சுடலைமுத்து, அவன் அப்பன் கொடுத்துவிட்டுப்போன வாளியையும் மண்வெட்டியையும் ஒதுக்கி வைத்தான். இனிமேல் மீண்டும் அவன் அதை எடுக்க மாட்டான். இனிமேல் அவன் தோட்டியில்லை. அவனுடைய மகனும் தோட்டியின் மகனல்ல.

மயானத்து மேட்டில், நீண்ட கழியும் கறுப்புச் சட்டையுமாக ஏறி நின்றபோது, சுடலைமுத்து அந்தப் புதிய வேலைக்கு அனுசரணையாக ஒரு திட்டமும் தயாராக்கிவிட்டான். எந்த அளவுக்கு அதிகாரம் செலுத்த முடியுமென்பது அவனுக்குத் தெரியும். எதையெல்லாம் சாதிக்க முடியுமென்பதும் அவனுக்குத் தெரியும்.

வாழ்க்கை முடிந்து முற்றுப்புள்ளி விழும் இடத்தில் அந்தக் கறுத்த உருவம் நின்றபொழுது அங்கு நிலவி நிற்கும் பயங்கரம் மேலும் அதிகரிப்பது போலிருந்தது. வாழ்க்கை முடிவதற்கும்கூட

ஒருவனிடம் கணக்குப் பேச வேண்டியதாக வந்துவிட்டது. முந்தின நாள் வரை உங்களுடைய கக்கூஸில் வேலை பார்த்துக்கொண்டிருந்த தோட்டி புதிய பதவிக்கு ஸ்தானத்தில் வந்த போது ஆளே மாறிப் போய்விட்டான். வழிப்போக்கர்கள் அவனைப் பார்த்துச் சொன்னார்கள்:

"பாருங்கள், யமகிங்கரன் மாதிரி அதோ நிற்கிறான்."

அந்த வாசல் வழி, அவனவனுக்கு உரிமையுள்ள ஆறடி இடத்தைப் பெற்றுக்கொள்வதற்காக, பிணங்களைக் கொண்டு போகத் தொடங்கினார்கள். யாரானாலும் சரி, சுடலைமுத்துதான் இடம் நிச்சயிக்க வேண்டும். குழி தோண்டியதும் சுடலைமுத்து அவன் அளவுகோலால் ஆழம் சரிதானா என்று பார்ப்பான். அவனுடைய உத்திரவு கிட்டிய பின்புதான் மண்ணைப் போட்டு மூட வேண்டும். எரிக்கப் போகிற பொழுது, விறகு குறைவாக இருக்கிறது என்று காரணம் சொல்லித் தடைபோட அவனுக்கு அதிகாரமுண்டு. ஒரு சடலத்திற்கு எவ்வளவு விறகு தேவைப்படுகிறது என்பதை சுடலைமுத்து இரண்டே நாளில் தெரிந்து கொண்டுவிட்டான்.

இருந்தாலும் சுடலைமுத்துவால், அங்கு செய்து தீர்க்க வேண்டிய வேலையை உணர்ச்சியற்றவனாகச் செய்து முடிக்க இயலவில்லை. சின்னஞ் சிறு குழந்தைகளின் பிஞ்சு உடல் எரிந்து சாம்பலாவதை அவன் பார்ப்பதுண்டு. நல்ல யௌவனத்தில் இறந்துபோனவர்களைக் குழியில் இறக்குவதை அவன் பார்த்துக் கொண்டிருப்பான். படுகிழடுகளின் எலும்புகள் எவ்வளவு நாட்கள் எரிந்துகொண்டிருக்கின்றன! இவ்வளவு சிறிய வயதிலேயே இறந்து போக வேண்டுமென்றால், அந்தக் குழந்தைகள் எதற்குப் பிறக்கின்றன என்று சுடலைமுத்து எண்ணிப்பார்ப்பான். அந்த இளைஞன், தன் வாழ்வில் செய்து முடிக்க வேண்டியதைப் பூராவும் செய்து தீர்த்துவிட்டானா, அந்தப் படுகிழவன் எதற்கு அவ்வளவு நாட்கள் வாழ்ந்திருந்தான், அப்படியானால் எந்த வயதில் இறக்க வேண்டும், நாற்பதிலா - ஐம்பதிலா? அறுபதிலா சுடலைமுத்து கணக்குப் பார்த்தான். ஐம்பது வயதிலென்றால் தனக்கு இன்னும் எத்தனை வருடம் பாக்கி இருக்கிறது, வள்ளிக்கு எத்தனை வருடம், மோகனுக்கு எத்தனை? சுடுகாட்டில் ஆங்காங்கு எரிந்துபோன எலும்புக்கூடுகள் சிதறிக் கிடக்கின்றன. அதெல்லாம் யாருடைய எலும்புகள்? சில சமயம் குழி தோண்டத் தோண்டப் பல வயது கொண்டவர்களின் தலையோடுகளும், நெஞ்சுக் கூடுகளும், உயர்ந்து வரும். நிறைவேறாத ஆசைகளோடு அங்கு மண்ணோடு மண்ணாக வெட்டிப் புதைக்கப்பட்டவர்கள்தான் எத்தனை பேர்!

ஆட்கள் எல்லோரும் போன பிறகு பல இரவுகளில் மயானம் ஒரே சூன்யமாக இருக்கும். சிதையிலிருந்து மங்கிய ஒளி வீசிக் கொண்டிருக்கும். அப்போது சுடலைமுத்துவுக்கு ஒரே பயமாக இருக்கும். ஆனால் அப்படி அதிக நேரம் தன்னந்தனியாக இருக்க நேர்ந்ததில்லை. காலராவின் காலமல்லவா? இரவு வேளைகளில் மூடிக் கட்டின சவங்கள் வந்தவாறிருந்தன.

ஒருநாள் இரவு முனிசாமியை மூடிப் போர்த்தி அங்கு கொண்டு வந்தார்கள். மறுநாள் பழனியாண்டியும் அவனுடைய இரண்டு குழந்தைகளும் வந்து சேர்ந்தார்கள். நாளுக்கு நாள் மரண விகிதம் தோட்டிகளிடையே அதிகரித்து வந்தது. ஒரு வாரத்திற்குள் சுடலைமுத்துவுக்குத் தெரிந்த பலரையும் சுடுகாட்டுக்குக் கொண்டுவந்தார்கள். தோட்டிகள் மட்டுமா? அவன் வேலை செய்துகொண்டிருந்த வீடுகளிலிருந்தும் பலர் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

மரணத்தின் நேரடியான ஆட்சி, சாவின் சர்வ வியாபகமான அந்த இயக்கம், சுடலைமுத்துவின் மனதையும், தைரியத்தையும் உசுப்பிற்று. எழுத்துப் படிப்பற்ற, கற்பனா சக்தி மொட்டவிழாத தோட்டிக்கும், அவன் வாழும் உலகத்தையும் வாழ்க்கையையும் பற்றி மங்கலாகத் தெரிந்துகொள்ள முடிந்தது. எந்த ஜீவராசியின் காலும் தரையில் பற்றி நிற்கவில்லை. வாழ்க்கையே நிலைகுலைந்து போகிறது. கீழே காலூன்றாமல், வட்டம் சுழன்று சுழன்று எவ்விதமான பற்றுமில்லாமல், ஏதோ சக்தியில் அகப்பட்டு ஜீவராசிகள் சாய்ந்துகொண்டிருக்கின்றன. கூட்டத்தோடு கூட்டமாக அவனும் இயங்குகிறான்; அவனுடைய வள்ளியும் சுற்றி வருகிறாள். மோகனும் மிதக்கிறான். அவனும், அவளும், அவனுடைய செல்லக் குழந்தையும் நாளை உயிரோடு இருப்பார்கள் என்று யாரால் சொல்ல முடியும்?

சுடலைமுத்துவைப் பயம் பிடித்துக்கொண்டது. எங்கு போய் மறைந்துகொள்வது? வீட்டை விட்டு வெளியே வந்த பின் அங்கு என்ன நடக்கப்போகிறதோ என்ற ஆதங்கம்தான், ஒவ்வொரு நிமிடமும் துக்கச் செய்தியை அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

இந்நகரத்திலிருந்து, கண்களுக்குப் புலப்படாத இந்தக் கொள்ளை நோயின் தாண்டவ அரங்கிலிருந்து, எங்கேயாவது போய் உயிரை மீட்டுக்கொண்டாலென்ன? வீடும் வேண்டாம், வயலும் வேண்டாம். அவன் வள்ளியிடம் சொன்னான் :

"இங்கெ தங்கியிருக்க முடியாது. நம்ம ஆளெல்லாம்

செத்தொளிஞ்சி போயுட்டாங்க. நாம் ஊரைவிட்டே போயுடுவோம்."

இந்த அபிப்பிராயம் வள்ளிக்கு முன்னாலேயே இருந்தது. இப்போது கணவனுக்கும் அந்த எண்ணம் ஏற்பட்டது அவளுக்குத் திருப்தியை கொடுத்தது.

சுடலைமுத்து எப்படிப் பயந்தான் தெரியுமா? மறுநிமிஷமே இறந்துபோய்விடுவோமென்று, அப்படியொரு முடிவு ஏற்கனவே பட்டயத்தில் பதிந்துவிட்டது போல், நடுங்கினான். இது போன்ற வியாதிகள் முன்பு பட்டணத்தில் கூத்தாடின சமயம் சுடலைமுத்து சஞ்சலமற்று இருந்ததை வள்ளி பார்த்திருக்கிறாள். இப்போது இவ்வளவு தூரம் நிலைகுலைந்து தடுமாறும் இந்தப் பயத்திற்கு என்ன காரணமென்று அவள் ஆச்சரியப்பட்டாள். கணவனுக்குச் சமாதானம் சொன்னாள் :

"இதெல்லாம் விதிதான்; வர வேண்டியது வளியிலே தங்கி நிக்காது. தெய்வ சங்கல்பமில்லாம ஒண்ணும் நடக்காது. அதுக்கு இப்படிப் பயந்து செத்தா முடியுமா?"

இருந்தாலும் வள்ளியின் மனதும் நன்றாகக் கலங்கிவிட்டது. விதியின் பேரில் அதிக நம்பிக்கை வைக்க முடியவில்லை. கணவனைச் சமாதானப்படுத்துவது என்ற மனைவியின் கடமையை, பெயருக்காவது செய்வதற்குரிய திராணி அவளுக்கு இருந்தது.

வள்ளி கேட்டாள் : "இன்னம் நம்ம ஆளுக யாராவது உசிரோட இருக்காங்களா?"

"எல்லாரும் போயாச்சு. எல்லாம் முடிஞ்சுபோச்சு. முனிசிப் பாலிட்டியிலெ வேல ஓடலெ!"

வள்ளி சிறிது நேரத்திற்குப் பின் தொடர்ந்து சமாதானம் சொன்னாள். "அண்ணைக்குக் கடவுள் பக்தி இல்லாதவள்னு சொன்னே. ஆனா நான் இண்ணைக்கும் படத்துக்கு மாலெ போடுறேன்; செபிக்குறேன் . . . எல்லாம் செய்யுறேன். அந்திக்குப் பெருக்கித் தெளிச்சு வெளக்கு வைக்கறேன். இந்த மாதிரி சமயங்களிலெ தெய்வ நம்பிக்கையினாலெதான் தலைதப்ப முடியும்."

வள்ளியின் வார்த்தைகள், தேவையான பலத்தை சுடலை முத்துவுக்கு ஊட்டித்தரவில்லை. அவன் காதில் அவள் வார்த்தைகள் விழுந்ததென்றாலும், அவனுக்கு அது புரியவில்லை. எந்த வித்தையாலும் தலைதப்பாது என்றுதான் அவன் எண்ணினான்.

அவனுக்கு அந்த ஆபத்து தவிர்க்க முடியாததாகத் தோன்றிற்று. சாவு ஏற்கனவே வாசலை முட்டிவிட்டது என்றுகூட அவன் பிரமை அடைந்தான். அதன் உருவெளித் தோற்றத்தைப் பற்றிச் சுடலைமுத்துவுக்கு எந்த விதமான சித்திரமும் இல்லை.

வள்ளி கேட்டாள் : "இப்பவெல்லாம் ஏன் செபிக்கறதில்லெ?"

"முடியலெ, என்னால முடியலெ."

"சுடுகாட்டிலெ இருந்தாவது அந்த வேளையிலெ செபிக்கக் கூடாதா? இன்ன இடத்திலெ வச்சித்தான் செபிக்கலாமுன்னு கணக்கில்லெ."

இனிமேல் ஜபிக்கிறேன் என்று அவன் ஒப்புக்கொண்டான். முன் போல நடந்துகொள்வதாக வாக்குறுதி கொடுத்தான். இவ்வளவும் பேசினானென்றாலும் சுடலைமுத்துவின் மனசுக்குள் ஊரை விட்டு வெளியேற வேண்டுமென்ற எண்ணம்தான் நிமிஷத்திற்கு நிமிஷம் வலுத்துக்கொண்டே இருந்தது. வள்ளியிடம் சொல்லி அவளையும் கவலைக்கு இரையாக்க வேண்டாமென்று எண்ணினான். இனி மேலும் அவனால் அதைத் தன்னந்தனியாகப் பொறுத்துக்கொள்ள முடியாது. அவன் சொன்னான் :

"வள்ளி, என் நெனப்பு அதில்லெ. நமக்குக் கடவுள் நம்பிக்கை வேண்டியதுதான். அவருதான் இனிமே நம்மெக் காப்பாத்தணும்."

சுடலைமுத்துவின் தொண்டை இடறிற்று. கண்கள் நிறைந்தன.

"நமக்கு வேண்டியவங்களா ஆருமே இல்லெ. நாம தன்னந்தனியா ஆயுட்டோம். நம்மட்டெ அன்புள்ளவங்க ஆரு இருக்குறா? எனக்கு நீ, ஒனக்கு நான். நம்ம கொளந்தைக்கு நாமதான்."

வள்ளியின் கண்கள் நிறைந்தன. இந்தப் பரந்து கிடக்கும் உலகில் அவர்கள் தன்னந்தனியாக - ஆமாம் தன்னந்தனியாகத்தான்! ஒரு க்ஷண நேரத்திற்குப் பிச்சாண்டியின் உருவம் நிழல் போல் சுடலை முத்துவின் மனதுள்ளே தோன்றியது. அவன் நடுங்கிப் போனான். அவனது அந்தரங்க எண்ணங்கள் குழைந்து தடுமாறின. தனக்குப் பைத்தியம் பிடித்துவிடுமென்று அவனுக்குப் பிரமை தோன்றிற்று. அவன் கண்கள் நிறைந்து வழிந்தன. வள்ளியும் அழத் தொடங்கினாள். கணவன் பக்கத்தில் நகர்ந்து உட்கார்ந்து கொண்டு அவன் கண்ணீரைத் துடைத்தாள்.

"இதென்ன பைத்தியமிது?"

அவ்வளவுதான் அவளால் கேட்க முடிந்தது. இதயம் வெடித்தது போல் சுடலைமுத்து கேட்டான் :

"இல்லெ, நான் செத்துப்போயுட்டேன்னா நீங்க என்ன செய்வீங்க?"

வள்ளி பதறிப்போனாள்.

"ஏன் இப்படி உளறறே?"

"உளறலேடீ, சாவறவங்களயெல்லாம் அங்கெ கூட்டிக்கிட்டு வறாங்க. அந்தப் பிசாசுகள், பிசாசுகள் . . ."

சுடலைமுத்து வெருண்டான். அந்தப் பிசாசுகளைக் கண்முன் காண்பது போல் பயந்தான். வள்ளி பிரமித்துப்போய்விட்டாள். கணவனை அணைத்துக்கொண்டாள். "இதென்னது இது?"

"சே, ஒண்ணுமில்லெ, ஒண்ணுமில்லெ. இல்லெ வள்ளி! நீ எம்புட்டு நாளா என்னெக் கவனிச்சுக்கிட்டு இருக்கே. நீ நல்லவ, வள்ளீ. எம் மவனப் பாத்துக்க வள்ளீ! எம் மவனெப் பாத்துக்க. அவனெ நீதான் பாத்துக்குடணும்!"

அந்த வியாதியின் தாண்டவத்தில் செத்தொழிந்துபோய்விடுவோமென்ற விஷயம், ஏற்கனவே முடிவு செய்துவிட்ட காரியமாகவே சுடலைமுத்து நம்பினான்.

"அப்படி வராது, வரதுக்குத் தெய்வம் சம்மதிக்காது. நான் செத்துப் போனேன்னா. . . என்னைக் குழி தோண்டிப் புதைச்சுப் போட்டுட்டு, அவனெப் பாத்துக்கிடணும். நான் செத்தாலும் அவன் வளர்ந்து வருவான்."

"நான் செத்துப்போயுட்டாலோ?"

கணவன் மனைவியையும், மனைவி கணவனையும் நேசிக்கும் இடத்தில், நடைபெறும் சம்பாஷணைதான் அது. கணவனைப் பார்த்து, குழந்தைகளைக் கணவனின் வலுவான புஜங்களுக்குள் தள்ளிவிட்டு, கண்ணை மூட வேண்டுமென்று மனைவி விரும்புகிறாள்; அவள் செய்யும் சிச்ரூஷையின் ஆசுவாசத்தோடு, அவளுடைய கண்களிலிருந்து வரும் கண்ணீர்த் திவலைகள் விழுந்து

நெஞ்சு குளிர்ந்து இறக்க வேண்டுமென்று கணவன் ஆசைப்படுகிறான். இது எங்குமுள்ளதல்லவா? ஆனால் யார் விருப்பம் நிறைவேறுகிறது என்பது பார்த்துத்தானாக வேண்டும்.

சுடலைமுத்துவின் சிந்தனை வேறொரு வழியை நோக்கித் திரும்பிற்று.

"நம்ம ரெண்டு பேருமே செத்துப் போயுட்டாலோ?"

குழந்தை அவர்களுடைய குழந்தை. அவனுக்கு வேறு யார் இருக்கிறார்கள்? தாயும் தகப்பனும் செத்தொழிந்துபோய் அனாதைகளாய்விட்ட ஒரு 'மந்தை'க் குழந்தைகள், ஒவ்வொன்றாகப் பட்டணத்தில் மூலைகளிலும், சந்து பொந்துகளிலும் திடும் திடும்மென்று மறைந்துபோகும் காட்சியை ஒரு நொடிப்பொழுதில் சுடலைமுத்து கண்டான். அந்தக் கூட்டத்தில் சுந்தரத்தின் குழந்தைகளுமுண்டு.

"இதொண்ணுக்கும் கடவுள் வளிவெக்காது."

சித்தப்பிரமை கொண்டவனைப் போல், வள்ளியின் கையைப் பலமாக அழுத்திப் பிடித்துக்கொண்டு சுடலைமுத்து அலறினான் :

"நாம் போயுடுவோம் வள்ளீ! இந்த ஊரைவிட்டே ஒளிஞ்சு போயுடுவோம்."

"போயுடுவோம், அந்தப் பணத்தெ வாங்கிக்கிட்டுப் போயுடுவோம்."

சுடலைமுத்துவுக்கு நாடி தளர்ந்துபோய்விட்டது. மற்றொரு உண்மை அவன் மனதை அலட்டிற்று. முனிசிபல் தலைவரை அவன் போய்ப் பார்த்தான். பணம் கேட்டான். தற்சமயம் பணம் கைவசமில்லையென்று அவர் சொல்லிவிட்டார்.

"நமக்கு அந்தப் பணம் வேண்டாம். ஒரெளவும் வேண்டாம், ஊரெ விட்டே ஓடிடுவோம்."

"அப்படீன்னா, அப்படீன்னா, நாம போயுடுவோம்."

"போனா வயித்துப்பாடு எப்படிக் களியும்?"

அந்தப் பெண் என்ன சமாதானம் சொல்வாள்? என்ன பதில் சொல்ல முடியும்?

மோகனைக் குளிப்பாட்டி, பொட்டிட்டு, நல்ல சட்டையும், நிஜாரும் உடுத்தி, கடவுளை மனதில் தியானத்தப்படியே நெற்றியில் முத்தமிட்டு வள்ளி, அவனைப் பள்ளிக்கனுப்பினாள். அவன் வெகு தூரம் நடந்து போவதுவரை வாசல் நடையில் நின்றவாறு பார்த்துக்கொண்டே இருந்தாள். சின்னஞ்சிறு குழந்தை! அவனுக்கு வேறு யார் இருக்கிறார்கள்? வள்ளியின் கண்கள் நிறைந்தன.

மோகன் அடிக்கடி திரும்பிப் பார்த்தபடி நடந்துகொண்டிருந்தான். வள்ளி வீட்டிற்குள் நுழைந்ததும் மோகன் அங்கேயே நின்றான். அவன் தோழன், அந்தப் பொறுக்கிப் பையன், பின்னாலிருந்து பாய்ந்து வந்து அவனுடன் சேர்ந்துகொண்டான். அவன் சொன்னான்.

"ஒங்கம்மா நிக்கறதெப் பாத்து நான் பதுங்கி ஒதுங்கி நின்னுக்கிட்டிருந்தேன்."

மோகன் பதில் சொன்னான் : "நானும் ஒன்னெப் பாத்தேன்."

வள்ளிக்குத் தெரியாமல் சந்தித்துக்கொண்டதில் இருவரும் தமக்குத் தாமே திருப்தியடைந்தார்கள். அன்று மோகன் கையில் இரண்டு சக்கரம் இருந்தது. அந்தத் தெருப்பையன் மூன்று சக்கரம் சம்பாதித்திருந்தான். அன்றே இன்னும் பத்துச் சக்கரம் கூடச் சம்பாதிக்க வேண்டுமென்பதுதான் அவன் எண்ணம்.

"இண்ணைக்கு முல்லைக்கல் கோவில்லே பெரிய திருவிளா. பெரிய திருவிளாண்ணா பெரிய திருவிளா. சாயங்காலத்திலேருந்து வாண வேடிக்கையுண்டு. பத்து ஆனெ வருது. எண்ணைக்கும்விட இண்ணைக்குப் பெரிய திருவிளா. நான் இப்பம் அங்கிருந்துதான் வாறேன்."

கோவிலிலுள்ள அலங்காரங்களைப் பற்றி அவன் வர்ணிக்க ஆரம்பித்தான்.

மோகன் கேட்டான் :

"என்னக் கூட்டிக்கிட்டுப் போய்க் காட்டுவியா?"

"ஓ! காட்டறேன், இப்பமே வா. ஒரே ஓட்டம்தான். நமக்குப் பாத்துட்டு வந்துடலாம்."

"எனக்குப் பள்ளிக்கூடத்துக்குப் போவணுமே."

"பூ! பள்ளிக்கூடமும் கிள்ளிக்கூடமும். ஒங்கம்மாவுக்குத் தெரியாமெப் போயிட்டு வந்துடலாம்."

மோகனின் இளம் இதயம் தத்தளித்தது. அவன் அதுவரை பள்ளி செல்லாமலிருந்ததில்லை.

அந்தப் பையன் மீண்டும் கேட்டான் :

"பள்ளிக்கூடத்திலே சாரு அடிப்பாரோ?"

"அடிப்பாரு, தெனசரி அடிப்பாரு, அப்படிப்பட்ட வாத்தியாரு அவரு."

அப்போழுது மோகனுக்கு மற்றொரு விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. அவன் அன்று எழுதிக்கொண்டுபோக வேண்டிய வீட்டுப் பாடம் எழுதவில்லை. மறந்தேபோய்விட்டான். அவன் கேட்டான் :

"அப்பம் இந்த சிலேட்டும் பொஸ்தகமும் எங்கே வைக்கெறது?"

அதற்கு இடம் இருக்கிறதென்று அவன் சொன்னான். அந்த வீதியிலிருந்து பிரிந்துபோகும் மற்றொரு சந்து வழியே அவர்கள் போனார்கள். அங்கெல்லாம் சுற்றித் திரிந்து, பழக்கப்பட்டுப்போன அந்தச் சிறுவன் மூலையிலிருந்த ஒரு கடையில் புத்தகத்தையும் சிலேட்டையும் வைத்தான்.

புதிய புதிய காட்சிகள், புத்தம் புதிய இடங்கள் எல்லாம் பார்த்தவண்ணம் மோகன் அவனுடன் கோவிலை அடைந்தான்.

அவன் சொன்னதெல்லாம் உண்மை. என்னென்ன அலங்காரம்! பார்க்க வேண்டிய காட்சிகள். மோகனுக்கு அது புதிய உலகமாகத் தென்பட்டது.

அன்றுதான் அவன் பத்து யானைகளை ஒன்றாகப் பார்த்தான். ஒரு இடத்தில் செப்பிடுவித்தை. மற்றொரு இடத்தில் கோலாட்டம். வேறொரு இடத்தில் குஸ்தி - இப்படிப் பல பல காட்சிகளைக் கண்டுகொண்டே அவர்கள் போனார்கள். இரண்டு தடவை மோகன் தொட்டிலில் ஏறி ஆடினான். ஒரு இடத்தில் இரண்டு சக்கரம் கொடுத்து நுழைந்தபொழுது அங்கு ஒரு சிலந்தி பேசுவதைக் கண்டான். மற்றொரு இடத்தில் பொம்மை ஆடுகிறது; சாடுகிறது; பேசுகிறது.

இப்படி அவர்கள் கையிலிருந்த காசெல்லாம் கரைந்தது. மத்தியானமாகிவிட்டது. ஏதாவது சாப்பிட வேண்டாமா? அதற்குக் காசு சம்பாதிக்க வேண்டுமே. அந்தப் பையன் சீக்கிரத்தில் திரும்பி வந்துவிடுவதாகச் சொன்னான். எங்கும் போகக் கூடாது என்று உத்தரவு போட்டான். ஒரு ஆலமரத்தடியில் கொண்டுபோய் உட்காரவைத்தான். எங்காவது போய்விட்டால் அப்புறம் கண்டு பிடிப்பது சிரமம் என்று அவன் மேலும் எச்சரிக்கை செய்துவிட்டு ஆள் கூட்டத்தில் மறைந்து போனான்.

மோகனுக்குப் பயம் பிடித்துக்கொள்ளத் தொடங்கிற்று. அவன் தன்னந்தனியாகிவிட்டான். பழக்கமான ஒரு முகத்தைக் கூடப் பார்க்க முடியவில்லை. அவனுக்குத் தன் தாயின் நினைவு வந்தது; தகப்பனின் ஞாபகம் வந்தது. அவன் அழுதுவிட்டான். பசி பொறுக்க முடியவில்லை. ஆகவே, சோர்ந்து தளர்ந்துபோய் தாயும் தகப்பனும் கண்ணிமையில் வைத்துப் பொன்னாகக் காப்பாற்றிவந்த அந்தக் குழந்தை படுத்துறங்கிற்று.

அவன் கூட்டாளி வந்து அவனைத் தட்டி எழுப்பினான். அவன் விசாரித்தான் :

"ஒனக்கு ஏதாவது திங்க வேணுமா?"

"வேணும்."

"அப்படீன்னா வா. நான் சாப்புட்டாச்சு."

அவன் மோகனை அழைத்துக்கொண்டு ஒரு ஹோட்டலுக்குப் போனான். சாப்பாடு மோகனுக்குத் திருப்தியாக இருந்தது. கறிகளெல்லாம் என்ன ருசி!

சாப்பாடு முடிந்ததும், அந்தப் பையன் ஒரு பொட்டணத்திலிருந்து சக்கரம் எடுத்துக் கொடுத்தான். இன்னம் அவன் கையில் சக்கரம் இருந்தது. சக்கரம் மட்டுமல்ல; அணாவும் பணமும் இருந்தது. எங்கிருந்து அவனுக்கு இந்தப் பணம்? தனக்கும் இப்படிப் பணம் கிடைத்தால் தேவலையென்று மோகனுக்குத் தோன்றிற்று.

மீண்டும் அவர்கள் விளையாட்டு வேடிக்கைகள் பார்த்துக்கொண்டும், மிட்டாய் வேர்க்கடலை வாங்கிக் கொறித்துக்கொண்டும், திரிந்தார்கள். அந்தச் சந்தோஷத்தில் மோகன் தாயையும், தகப்பனையும், வீட்டையும் மறந்துவிட்டான். அவன்

போக்கில் சுற்றிப் பார்த்தபடி அலைந்துகொண்டிருந்தான்.

பொழுது நகர்ந்தது. மணி நாலு. ஐந்து மணி, ஆறு மணியும் ஆயிற்று. சந்தி வேளையில் கோவிலில் சுவாமி வலம் வந்தார். தமிழ்நாட்டுத் தவில் வித்துவான், தவிலடிக்கிறபொழுது அவன் கொண்டை அவிழ்ந்துபோவது பார்ப்பதற்கு வெகு தமாஷாக இருந்தது. முகத்தாலும் உடம்பாலும் அவன் எவ்வளவு கோஷ்டிகள் காட்டுகிறான்! மற்றொரு இடத்தில் கிட்டத்தட்ட முப்பது செண்டைகளைச் சேர்ந்தாற் போல் கொட்டுகிறார்கள். வில் மாதிரி வளைந்த ஒரு வாத்தியம் ஊதுகிறார்கள்.

அலங்கார மண்டபத்தில் பல நிறங்கொண்ட விளக்குகள் ஒரே சமயத்தில் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்தபொழுது மோகனுக்கு ஒரே மகிழ்ச்சியாக இருந்தது. அப்புறம் வாண வேடிக்கை. முதன் முதலில் வெடியின் சப்தம் கேட்டு அவன் பயந்துபோனான். அதற்குப் பின்னால் அதிர்வெடி, வாணம் இவைகள் வெடித்த பொழுது அவனும் மகிழ்ச்சியில் கூப்பாடு போட்டான்.

இரவில் அவர்கள் பட்சணக் கடையிலிருந்து பட்சணம் வாங்கிச் சாப்பிட்டார்கள். மோகன் ஒரு பலூனும் விசிலும் வாங்கிக் கொண்டான்.

இவ்வாறு நடந்து நடந்து, உடல் சோர்ந்து, மோகனும் அந்தப் பையனும், கோவில் ஊட்டுப்புரைக்கு மேற்குப்புறம், சுவரோடு சேர்ந்து குந்தினார்கள். பேசிக்கொண்டிருக்கிறபொழுதே இருவரும் தூங்கிப்போய்விட்டார்கள்.

பொழுது நன்றாகப் புலர்ந்தபொழுது மோகன் எழுந்திருந்தான். அவன் எங்கே படுத்துத் தூங்கினான்? அம்மா! அம்மா! அப்பா!

சட்டையும், நிக்கரும் அழுக்கேறி துர்நாற்றம் வீச, பயந்து பயந்து மோகன், வீட்டுவாசலை அடைந்து எட்டிப் பார்த்தான். சிறிது தூரம் விலகி அவன் கூட்டாளி நின்றுகொண்டிருந்தான். மோகனை அவன் அம்மா அடிக்கிறாளா என்று அவனுக்குத் தெரிய வேண்டும். அடிக்கிறாளென்றால் அவன் அதைப் பார்க்க வேண்டும்.

மோகன் வாசற்படியில் சற்று நேரம் நின்றுகொண்டிருந்தான். வாசல் திறந்து கிடக்கிறது. யாரையுமே காணோம். அம்மா! அம்மா அடுக்களையிலிருக்கிறாள் என்று எண்ணினான். புகைக்குழல் வழியே புகையும் காணோம்.

நெஞ்சுத் துடிப்போடு, குற்றம் செய்த நெஞ்சு குறுகுறுக்க மோகன் அங்கேயே நின்றான். ஒரு ஆடு உள்ளே நுழைந்து முற்றத்தில் நட்டு வளர்த்திருந்த துளசிச்செடியைத் தின்றுகொண்டிருந்தது. அம்மா பூஜைக்கு இலை பறிக்கும் துளசி அது. மோகன் ஆட்டை விரட்டினான். அப்படிக் கூப்பாடு போட்ட பின்பும் அம்மா வெளியே வரவில்லை.

வீட்டினுள்ளில் யாரோ குறட்டைவிடும் சப்தம் கேட்பது மாதிரி இருந்தது. பொழுது நன்றாக விடிந்த பின்னும் அவன் அம்மா எழுந்திருக்கவில்லையே! ஒருசமயம் நேற்றுப் பூராவும் என்னைத் தேடி அலைந்துவிட்டு வந்து தூங்குகிறாளோ?

மோகன் மெதுவாக அடுக்களைக்குள் எட்டிப்பார்த்தான். அங்கு சட்டியும் பானையும் கவிழ்ந்து கிடக்கிறது. தேய்க்கக்கூட இல்லை. அடுப்பில் முந்தின நாள் தீ எரிந்ததாகத் தெரியவில்லை.

மோகன் அறைக்குள் எட்டிப்பார்த்தான். மலத்திலும், வாந்தியிலும் புரண்டுபோய்க் கிடக்கிறாள் அவன் தாய். அவள் மூச்சை இழுக்கிற பொழுதுதான், குறட்டை போன்ற அந்தச் சப்தம் எழுந்து கொண்டிருந்தது. அவளுடைய வயிறு நெஞ்சைவிட உயர்ந்திருந்தது.

வாசலில் ஒரு கணநேரம் நின்ற பின், மோகன் உள்ளே நுழைந்தான். அப்பொழுதும் குற்றவாளியென்ற எண்ணத்தால் அவன் தனக்குள்ளே பயந்துகொண்டிருந்தான். அம்மா கண்ணைத் திறந்து பார்க்கிறபோது அவனை ஏசுவாளோ என்று பயந்தான். அடிப்பாளோ என்று அஞ்சினான்.

சிறிது நேரம் அறைக்குள்ளேயே நின்றபோது அவனுக்குப் பயம் பிடித்துக்கொண்டது, அம்மா தூங்கவில்லையோ? அம்மா மூச்சு நின்றுவிட்டதோ? ஆமாம், அவனுடைய அம்மா மூச்சை இழுத்துவிடவில்லை. அம்மா அடிப்பாள் என்ற பயம் அவனுக்குப் போய்விட்டது. அவன் தணிந்த குரலில் கூப்பிட்டான்.

"அம்மா!"

அம்மாவுக்கு அவன் குரல் கேட்கவில்லை. அம்மாவின் அருகில் செல்ல அவனுக்குப் பயம்; பார்த்துக்கொண்டு நிற்பதற்கும் பயம்.

வள்ளியின் உடம்பு பூராவும் விறைத்து, வெட்டி வெட்டி இழுத்தது. அவள் கண்களை உருட்டி விழித்தாள். மோகன்

நடுநடுங்கிப் போனான். எங்கும் நிசப்தம். அமைதி.

அது அவன் தாயல்ல என்று அவனுக்குத் தோன்றியது. தாயின் கண்கள் இப்படி இராது. இது வாயைத் திறந்துகொண்டிருக்கிறது. இது வேறு யாரோதான். பிசாசு. பேய்!

அந்தப் பொறுக்கிப் பையன் அங்கு வந்துசேர்ந்தான். அவனும் அதைப் பார்த்தான். மோகனை இழுத்துக்கொண்டு அவன் வெளியே ஓடினான். அவனுக்கு விஷயம் புரிந்துவிட்டது.

மயானத்துக் காவலாளிக்கும் முன்தினம் நடுப்பகலுக்குப் பின் காலரா தொற்றிக்கொண்டது. பொழுது புலர்ந்தபோது, அவன் சாதாரணமாக நின்றுகொண்டிருக்குமிடத்தில் இறந்து கிடந்தான்.

மோகனும் அவன் தோழனும் சுடுகாட்டிற்குப் போனார்கள். ஒரு பெரிய குழியின் ஆழத்தைச் சுடலைமுத்துவின் கழியால் வேறொருவன் அளந்து பார்த்துக்கொண்டிருந்தான். அந்தக் குழிக்குப் பக்கத்தில் ஒரு சவத்தைச் சுருட்டிக் கட்டி வைத்திருந்தார்கள்.

அந்தச் சடலத்தின் காலும் தலையும் வெளியே தெரிந்தன, அது தன்னுடைய தகப்பன்தான் என்பதை மோகன் அறிந்துகொண்டான்.

தோணித்துறையில், ரோட்டருகில், புழுதியில், இரண்டு பையன்கள் கட்டித் தழுவிக்கொண்டு தூங்குவதைப் பார்க்கலாம். சில சமயம் மற்ற பையன்களோடு மோகன் சண்டை போட்டுக்கொள்வான். அவனுக்கு அடிக்கத் தெரியாது. எனவே மற்ற பையன்களிடமிருந்து அதிகமாக உதை வாங்கிக்கொள்வது அவன்தான். சில சமயம் வாய்க்காலிலும், குளத்திலும், நீர்யானை போல் முக்குளிபோட்டுக் குளித்துக்கொண்டிருப்பதும் அவன்தான். அவனைச் சுற்றிச் சூழ்ந்து, ஆகாயத்தில் வளைந்துகொண்டிருக்கும் அன்பே உருவான, அந்த ஆத்மாக்கள், அவன் தண்ணீரில் கீழே அமிழ்கிறபொழுது பயந்து விறைத்துக் கொண்டிருக்கலாம். தெருப் புழுதியிலிருந்து காலை கண் விழித்து எழுந்திருக்கிறபொழுது, அவர்கள் அவனுடைய உடம்பிலிருந்த தூசியை தட்டித் துடைக்கலாம். அந்த வாழ்க்கையிலுள்ள பல்வேறு ஆபத்துகளிலிருந்து அவனைக் காப்பாற்றும் தேவதை வேறு யார்?

மோகன் - அந்தப் பெயர் அவனுக்கு எதற்காக இட்டார்கள்? முதலியார் வக்கீலின் மனைவியின் சிரிப்பு அர்த்தமற்றதாகப் போய் விடவில்லை. அவனுக்காக இரண்டு உயிர்கள் தங்கள் சுகங்களைத்

தியாகம் பண்ணினார்கள்.

"பத்து நாளைக்குத்தான் நமக்கு சொகமாக இருக்க முடியும்."

பத்து நாட்கள்தான் அவர்கள் அன்பாக வாழ்ந்தார்கள். சுடலைமுத்து சொப்பனம் கண்டுகொண்டிருந்த வீடும் வயலும் எங்கே? அதற்காக முனிசிபல் தலைவரிடம் ஒப்படைத்திருந்த பணமெல்லாம் எங்கே?

பிச்சாண்டி, சுந்தரம் இவர்களுடைய குழந்தைகள் இரண்டு பக்கமும். நடுவில் மோகன். மூன்று பேருமாக வீதி வழியே திரிகிறார்கள். வாழ்க்கைப் பிரயாணத்தை இளம் பிராயத்திலேயே ஆரம்பித்து விட்டார்கள். ஓட்டல் எச்சில் தொட்டிகளிலிருந்து மோகன் இப்போதெல்லாம் அவனது உணவைச் சம்பாதித்துக் கொள்கிறான்.

# 9

வருடங்கள் சில கழிந்தன. மனைவியின் பணி விடைகளின் ஆசுவாசத்தோடு இறந்துபோக வேண்டுமென்று விரும்பிய கணவனும், கணவன் முகத்தைப் பார்த்துப் பார்த்து விடைபெற்றுக்கொள்ள வேண்டுமென்று ஆசைப்பட்ட மனைவியும், தங்கள் பிரார்த்தனைகள் நிறைவேறாமலே இறந்துபோனார்கள். பள்ளி சென்ற மகன் திரும்பி வரவில்லையே என்று ஆதங்கப்படுவதற்குரிய பொழுதாவதற்கு முன்னாலேயே வள்ளிக்கு நினைவு தப்பியிருக்குமா? மகனைக் கணவன் கையில் பிடித்துக் கொடுப்பதற்கு அவளால் முடியாமல் போய்விட்டது. மறுநாள் காலையில் மோகன் வந்து கூப்பிட்டபோது அதை அவள் உணர்ந்து கொண்டாளா? மூச்சு அடங்குவதற்கு முன்னால் அவள் கண் விழித்துப் பார்த்தாளே, அப்போது அவள் அவனைப் பார்த்தாளா? என்ன இருந்தாலும் கணவன் இறந்து போனதும், ஆசை மகன் தெருப் பையன்களோடு பொறுக்கியாகச் சுற்றித் திரிவதும் அவளுக்குத் தெரிந்திராது.

அந்தச் சுடுகாட்டுக் காவலாளியைப் பொறுத்த அளவில் அவனுக்கும் ஒருவிதத்தில் நிம்மதிதான். அவன் மனைவி அவள் கண்ணான குழந்தையைப் பார்த்துக்கொள்ளுவாள். ஆனால் அவளைக் கடைசி முறையாக ஒரு தடவை பார்த்து, சில விஷயங்கள் சொல்வதற்கு அவனுக்குச் சாத்தியப்படாமல்போய்விட்டது. மகனுக்கு ஆசி கூறவோ புத்திமதி கூறவோ முடியாமல்போய் விட்டது.

மறைந்துபோன அந்தத் தம்பதிகள், மண்ணாகவும், தண்ணீராகவும், காற்றாகவும், ஆகாயமாகவும், நெருப்பாகவும், மாறி விட்டார்கள். அவர்கள் மேல் முளைத்த புற்கள் கோடையில் கருகவும் மாரியில் தளிர்க்கவும் செய்கின்றன. ஒருசமயம் தொலைவில் எங்காவது வளரும் ஆலமரத்தினுடைய அல்லது அந்த மதிற்கட்டிற்குள் வளரும் பூவரசினுடைய நீண்ட வேர்கள் யாருக்கும் தெரியாமல் அந்தக் குழிக்குள் நுழைந்து செல்லவில்லை என்று சொல்ல முடியுமா? அவர்களுடைய எலும்புகள் பொடிந்து உரமாக மாறியிருக்காதா?

எனினும், காற்றுக்கும் மழைக்கும் கோடைக்கும், காலத்திற்கும் மட்டுமல்ல; வேறு எதனாலும் அழிக்கமுடியாத ஒன்று அந்தத் தாய் தந்தையர்களுக்கு சொந்தமாக உண்டு. மதங்கள் கோஷித்துக் கொண்டிருக்கின்றனவே, அழிவில்லாத ஆத்மா, தெய்வ அருளின் ரச்மி என்றெல்லாம், அதைச் சொல்லவில்லை. நடக்கிறபொழுதும், இருக்கிறபொழுதும், படுத்துக் கிடக்கிறபொழுதும், சதா சமயமும், பயமூட்டும் சொஸ்தமற்ற அலைக்கழிவும், எதிர்காலத்தைக் குறித்துள்ள ஆதங்கத் துடிப்பும், நிலையற்ற நிச்சயமற்ற ஒழுங்கற்ற தன்மையும் நாம் அனுபவித்துக்கொண்டிருக்கிறோமல்லவா? வாழ்க்கை என்றாலே மனம் சோர்ந்துபோகும் துன்பங்களில் உழலுவது என்றாகிவிட்டதல்லவா? இவ்வாறு நவீன வாழ்க்கையே நீதி நேர்மையற்றதாகிவிட்டதல்லவா? இந்தச் சமூகமே வாழ உகந்ததல்ல என்ற அபிப்பிராயத்தைப் பலர் இன்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். மனிதன் வாழ்க்கையைக் கண்டு பயப்படுகிறான். இந்த நாசகரமான சோக இருள் எப்படி சிருஷ்டிக்கப்பட்டது என்று சிந்திக்கிறபொழுது சுடலைமுத்து, வள்ளி இவர்களுடைய வகையாக எஞ்சியிருப்பது என்ன என்பதைப் புரிந்துகொள்ள முடியும். கண்களால் பின் நோக்கிப் பாருங்கள். எத்தனை கோடி சுடலைமுத்துக்களும், வள்ளிகளும் இப்படித் திணறித் திணறி அழிந்துபோனார்கள்! இந்தச் சரித்திரம் எத்தனை ஆயிரம் வருடங்களாகத் தொடர்ந்து கொண்டே வருகிறது! அவர்களுடைய ஆசைகளும் அபிலாஷைகளும், கனவுகளும், அன்பும் துவேஷமும், இந்தச் சூழ்நிலையில்தானே சங்கமமாக வேண்டும்? நீங்கள் உட்கொள்ளும் பிராணவாயுவிற்குக் கனம் கூடி விட்டதென்றால், அதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது? உங்களுடைய அடிச்சுவட்டிற்குக் கீழ் பூமி ஆடி அசைகிறது என்று தோன்றுகிறதென்றால், நிஜமாகவே சுவடு நிலைகுலைந்து தள்ளாடினால் அதுவும் சரிதான். அந்த நிலத்தில் ரத்தம் உறைந்து கட்டி கட்டியாகக் கிடக்கிறது. உங்களைச் சூழ்ந்து நான்கு திசைகளிலும் எதிரிகள் பாய்கிறார்கள் என்று தோன்றுகிறதென்றால் நீங்கள் எத்தனை நூற்றாண்டுகளாக எதிரிகளைச் சிருஷ்டித்துக்கொண்டிருக்கிறீர்கள்?

இவ்விதம் ஆலப்புழை நகரத்து வாழ்க்கையின் நிலையற்ற தன்மையை அதிகரிப்பதற்காக அந்தத் தம்பதிகளின் ஆத்மாவும் அதன் பங்கை ஆற்றியது. இதற்கு முன்னால் மாண்டு மண்ணோடு மண்ணாய்ப்போன எத்தனை ஆயிரம் தோட்டிகள், தூப்புக்காரிகளின் அபிலாஷைகளும், சொப்பனங்களும், இங்குள்ள வெளியில் லயித்து அதன் திட்பத்தை அதிகரிக்கின்றன.

தன் மகன் தோட்டியாகக் கூடாது என்று சுடலைமுத்து ஆசைப்பட்டான். அதனால் தோட்டிக்கே அருகதையில்லாத ஒரு பெயரைச் சூட்டினான். தோட்டியென்றால் யாரென்று அறிந்துகொள்ளாமல் அந்தப் பையன் வளர்ந்துவந்தான். அந்தக் குழந்தை சிறிது நேரம் மலத்தில் கிடப்பதைப் பார்த்து அந்தத் தகப்பன் சள்ளென்று சாடி விழுந்து கோபப்பட்டான். ஆனால் இன்று அவன் ஆலப்புழைப் பட்டணத்தில் ஒரு தோட்டி. அவன் பெயர் மோகன் என்று தெரிந்துகொண்டதும் யஜமானர்கள் நெற்றியைச் சுளித்தார்கள்.

"உம், தோட்டிக்கும் நாகரிகம் வந்துவிட்டது."

பிச்சாண்டியின் மகனும் சுந்தரத்தின் மகனும் இன்று அவன் சக தோட்டிகள். அவர்கள் மூன்று பேரும் ஒரே போர்க்களத்தில் பொது எதிரியோடு போராடும் போர் வீரர்கள் மாதிரி சகோதர பந்தம் கொண்டவர்கள்.

மோகன் அவன் தகப்பனைப் போல் வாளி, மண்வெட்டி சகிதம் இன்று கக்கூஸ் கக்கூஸாக ஏறி இறங்குகிறான். வாளி நிறைகிற பொழுது வழியோரங்களில் வைத்திருக்கும் பீப்பாய்களில் கொட்டுவான். பத்து மணிக்கு அந்த வழியே வரும் மலக்கிடங்கு லாரியில் அந்தப் பீப்பாய்களை ஏற்றுவதற்கு அவன் உதவ வேண்டும். சாயங்கால வேளையில், சுத்தமாக உடை உடுத்திப் பார்க்கிலும், கடற்கரையிலும் நண்பர்களுடன் அவனைப் பார்க்கலாம்.

இன்றையத் தோட்டிக்கு அவன் சம்பளம் என்ன என்பது தெரியும். அதைக் கணக்குப் பேசி, சல்லி பிசகாமல் கையில் வாங்கவும் அவர்கள் படித்துக்கொண்டுவிட்டார்கள். அதிகச் சம்பளம் கேட்கவும் அவர்களுக்குத் தைரியமிருக்கிறது. ஆலப்புழைத் தோட்டிகள் ஒரே குரலில் பேசுவதற்குக் கற்றுக்கொண்டார்கள்.

அவர்களுக்கு நல்ல முறையில் கட்டி வளர்க்கப்பட்ட ஒரு சங்கம் இருக்கிறது. சங்கத்தால் பல காரியங்கள் சாதிக்க முடிந்திருக்கிறது. இன்னும் பல விஷயங்கள் சாதிப்பதற்கு அதற்குத் திராணியுண்டு என்பதையும் அவர்கள் தெரிந்துகொண்டார்கள்.

மோகனுக்குத் திருமணம் முடியவில்லை. அவன் நண்பர்களும் அப்படியே. கல்யாணத்தைக் குறித்து அவர்கள் சிந்திப்பதே இல்லை. சமயா சமயங்களில் அதைப் பற்றி அவர்கள் பேசிக்கொள்வார்கள். குழந்தைகள் தோட்டிகளாகப் போய்விடுமே என்ற பயம் மோகனுக்கு இல்லை. தோட்டிகளைச் சிருஷ்டிப்பது தோட்டிகளல்ல என்பது

அவனுக்குத் தெரியும். தோட்டிகள் அவர்கள் போக்கில் உற்பத்தியாகிக்கொண்டே இருக்கிறார்கள். தன் குழந்தை தோட்டியாகக் கூடாது என்று ஒரு தகப்பன் எண்ணினாலும், அவன் குழந்தை தோட்டியாகிவிடலாம்.

தோட்டிகள் திமிர் பிடித்தவர்கள் - இது அவர்களைப் பற்றிச் சாதாரணமாகக் கூறப்படும் குற்றச்சாட்டு. இந்தக் குற்றச்சாட்டிற்குப் பதில் சொல்லப்போனாலும், திமிர் பிடித்தவர்கள் என்றுதான் பதில் கிடைக்கும். அவர்கள் கக்கூஸ்களைத் துப்புரவாக்குகிறார்கள்; குறிப்பிட்ட சமயத்திற்கு வருகிறார்கள். ஆனால் . . . சாயங்கால வேளைகளில் அவர்கள் சுற்றுவதைப் பார்க்க வேண்டுமே! அவர்கள் பௌடர் பூசிக்கொள்ளுகிறார்கள், ஜிப்பா போட்டுக் கொள்ளுகிறார்கள்; சிகரெட்டும் குடிக்கிறார்கள். அடிமை எண்ணம் கொஞ்சமும் இல்லை.

உண்மைதான்.

ஆலப்புழைத் தோட்டி சில விஷயங்களெல்லாம் தெரிந்து கொண்டு விட்டான். சில விஷயங்கள் படித்துவிட்டான். தெரிந்ததை வைத்துக்கொண்டு மேலே சிந்திக்கவும், இன்னும் அதிகமாகத் தெரிந்துகொள்ளவும் அவனால் முடிகிறது. இவ்வாறு சிந்தனையில் அப்படியே மூழ்கிப்போய் அவன் சுற்றித் திரிவதுண்டு. தோட்டியும் மனிதன்தான் என்ற உணர்வு அவனுக்கு ஏற்பட்டுவிட்டது.

முனிசிபல் தொழிலாளர் சங்கத்திலிருந்து நகரசபைக்கும் அரசாங்கத்திற்கும், ஒரு நகரப் புனருத்தாரணத் திட்டம் சமர்ப்பித்தார்கள். தோட்டிகளுக்குச் சொல்வதற்கு விஷயம் இருந்தது. அரசாங்கமும் முனிசிப்பாலிட்டியும் சங்கத்தை விமர்சித்தன. இந்த மாதிரி விஷயங்களில் தலையிட சட்டத்தின்படி சங்கத்திற்கு அதிகாரமில்லையென்று கூறின. சங்கம் முனிசிபல் தொழிலாளர்களின் நன்மைக்காக ஏற்பட்ட ஒரு ஸ்தாபனம்தான். ஆனால் இது அரசியல் சம்பந்தமான விஷயம். எனவே இதில் தலையிடக் கூடாது என்று எச்சரிக்கை செய்தன.

அன்று மோகன் கூட்டாளிகளிடம் சொன்னான் :

"நான் ஏற்கனவே சொன்னது, இப்பொழுது புரிந்ததா? நாம் எதிர்க்க வேண்டியது எதை? இந்த முனிசிபாலிட்டியையா நாம் எதிர்க்க வேண்டும்? யதார்த்தத்தில் தொழிலாளிகளின் விரோதி முதலாளி என்ற தனி நபரல்ல. முதலாளியின் அரசுதான்."

தோட்டியின் மகனுக்கும் நினைவுகளுண்டு. பிரபுவின் மகன் அவனது தாய் தந்தையர்களைக் குறித்து எண்ணுவது போல், தோட்டியின் மகனுக்கும் அவனது தாய் தந்தையர்களைப் பற்றி நினைவு படுத்திக்கொள்ளமுடியும். ஒரு சமயம் அந்த அதிருஷ்டசாலியான பிரபு குமாரனுக்குத் தாய் தகப்பனைப் பற்றிச் சொல்ல வேண்டி வந்தால் 'அன்புகொண்டிருந்தார்கள்' என்று ஒரே வார்த்தையிலேயே சொல்லி முடித்துவிட முடியும். ஏனெனில் அந்தத் தாய் தந்தையர்களின் வாழ்க்கையில் தவிர்க்க முடியாத ஒன்றாகச் சிருஷ்டிக்கப்படுகிற அந்த சிசு, தாயின் பால் குடித்து வளர்ந்திராது. அதற்கு நோய் வந்துவிட்டால், தாய் உறக்கமின்றித் தவிக்க வேண்டியிராது. அவர்கள் தங்களுடைய சூழ்நிலையை எண்ணிப்பார்க்கையில், தம் குழந்தையின் எதிர் காலத்தைப் பற்றி அவ்வளவாகப் கவலைப்பட வேண்டிய அவசியமும் இராது.

நவீன வாழ்க்கையை சொஸ்தமற்றதாகச் செய்யும் கண்ணுக்குப் புலப்படாத நாசக்கார சக்தி எது? எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டும், எல்லாவற்றையும் தியாகம் பண்ணியும் - மகனுக்காக - மகனுக்கு மட்டுமாக, வாழ்ந்த கோடி கோடி சுடலைமுத்துகளுடையவும், வள்ளிகளுடையவும் நினைவில் தங்கி நிற்கும் தெளிவற்ற நினைவுகளை நோக்கி நவீன வாழ்க்கையை நரகமாக்கிக் கொண்டிருக்கும் தீய சக்திகள் அறைகூவுகின்றன. அந்தத் தெளிவற்ற சிந்தனைகளிலிருந்து சில சமயம் அதி உக்கிரமான உலகத்தையே பொசுக்கிச் சாம்பலாக்கிவிடுகிற செந்தீ பீறிடும். சிலசமயம் எண்ணி எண்ணி வருந்தி, ஒன்றும் செய்ய முடியாதவனாக அவன் சோர்ந்து கூனிக் குறுகிப்போய்க் கண்ணீர் உதிர்ப்பான். சில சமயம், இனம் தெரியாத ஒரு ஊக்கம், எல்லாவற்றையும் அழித்துத் துவம்ஸம் பண்ணக்கூடிய வெறியை உண்டுபண்ணிவிடும். இதற்கு முன்னால் வாழ்ந்தவர்களின், அடங்கி ஒடுங்கிப்போயிருக்குமென்று நம்பும், வஞ்சம் தீர்க்கும் மனத் தெம்பின் உயிர்த் துடிப்புக்கொண்ட தொகுப்புப் பிண்டம்தான் அவன்.

பிச்சாண்டியின் மகனுக்கு அவன் தோட்டியான அன்று ஒரு பெயர் கிடைத்தது. அது சுந்தரத்தின் மகனுக்கு என்னமோ ஒரு பெயர் இருந்ததாக நினைவிருக்கிறது. சரியாக அவனுக்கு ஞாபகம் இல்லை. அன்றொரு நாள் அவனுடைய தாயைத் தூக்கிக்கொண்டு போனது நினைவிருக்கிறது. அவள் குழந்தைகளின் பெயர் சொல்லிக் கூப்பிட்டாற் போலவும் இருக்கிறது. எது நினைவில்லாவிட்டாலும், குறிப்பாக அம்மா கூப்பிட்டபொழுது, அப்பா, "என்னாஆ!" என்று பதில் கொடுத்தது ஞாபகத்திலிருந்தது. அந்தக் கூப்பாடு இப்பொழுதும் அவன் நினைவில் முழங்கிற்று. அவனுக்கு ஒரு

அக்காளோ, தம்பியோ, யாரெல்லாமோ இருந்தார்கள். ஒருநாள் காலையில் எழுந்தபொழுது அவன் மட்டும்தான் இருந்தான். மற்றவர்கள் எங்கே? யாருக்குத் தெரியும்? பிறகு அவன் அவர்களைப் பார்க்கவே இல்லை. அவன் இன்றும், இழந்துபோன சகோதரர்களைத் தேடிக்கொண்டிருக்கிறான்.

சங்கக் காரியாலயத்தில் அதி தீவிரமாகச் சர்ச்சை செய்கிற பொழுதும், கடற்கரையில் தன்னந் தனியாக நடந்து போகிற பொழுதும், வாளி சகிதம் வேலைக்குப் போகிறபொழுதும் மோகனுக்கு நினைவுகள் சுழிபோட்டுக்கொண்டிருக்கும். அந்த நினைவுகள்தாம் அவனைத் தூண்டிக்கொண்டே இருக்கின்றன. அந்த மாபெரும் பட்டணத்தின் சோக இருளில் வாழ முடியாமல் அவன் தாய் தந்தையர்கள் மூச்சுத் திணறி மெல்ல மெல்ல அழிந்துபோனார்கள். அவனை 'அப்படியாக்கிவிட வேண்டும், இப்படியாக்கிவிட வேண்டும்' என்று அவர்கள் மனம் சதா கோட்டை கட்டிக்கொண்டிருந்தது. தாய் அவனை மடியில் வைத்துக் கொண்டிருக்கையில் அப்பாவும் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு இரண்டு பேருமாக எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிக் கற்பனையில் மிதந்துகொண்டிருப்பார்கள். அவனை அவர்கள் பள்ளிக்கு அனுப்பினார்கள். அவன் படிக்க வேண்டுமென்பது அவர்கள் வாழ்க்கையிலேயே மாபெரும் லட்சியமாக இருந்தது. தந்தை அவனை எடுத்து வைத்துக்கொண்டதில்லை, முத்தமிட்டதில்லை. இருந்தாலும் அந்தத் தகப்பனார் அன்பின் உறைவிடமாகத்தான் இருந்தார். பிரார்த்தனை செய்தான். தாய் பிரார்த்தனை செய்ததெல்லாமே அவனுக்காகத்தான். அவர்களிடம் பணமும் இருந்தது. ஆமாம்; அப்பாவும் அம்மாவுமாகக் கணக்குக் கூட்டிக் கொண்டிருப்பதை அவன் கேட்டிருக்கிறான். அந்தப் பணம் முனிசிபல் தலைவர் கையில் சிக்கியிருக்கிறது.

அவர் எவ்வளவு பெரிய கோடீசுவரர்! பட்டணத்திலிருக்கும் பெரிய பெரிய கட்டடங்களில் பல அவருக்குச் சொந்தம்.

மோகனுக்கு அந்தச் சொத்திலெல்லாம் உரிமை உள்ளது போல் தோன்றிற்று. அவன் தகப்பனாரின் செங்குருதியும், அந்தச் சொத்தைக் கட்டிக் குவிப்பதில் தன் பங்கை ஆற்றியிருக்கிறது.

சில சமயங்களில் அவர் மோட்டார் காரில் போவதை அவன் பார்த்திருக்கிறான். பல சமயம் அவரை அண்டி அந்தப் பணத்தைக் கேட்டால் என்ன என்று அவனுக்குத் தோன்றியிருக்கிறது. தோட்டி சுடலைமுத்துவை இப்போது அவருக்கு நினைவிருக்குமா? எத்தனை எத்தனை சுடலைமுத்துக்களை அவர் கொன்று குழி தோண்டிப்

புதைத்திருக்கிறார் அல்லது யார்தான் அந்தப் பட்டணத்தில் சுடலைமுத்துவை நினைவில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்!

அந்தத் தோட்டியின் உணர்ச்சிகள் பெருகி விரிந்து, அடக்க முடியாத உருவம் கொண்டது. அது ஆச்சரியமான விஷயமல்ல. அவன் வானத்தை முத்தமிடும் அக்கினி ஜ்வாலையையும், குருதிக் களத்தையும் மனதால் கண்டுகொண்டிருந்தான். தீக்கிரையாவது எது என்பது பற்றியோ, யார் மார்பிலிருந்து பீறிடும் ரத்தத்திலிருந்து குருதிக் களம் ஏற்பட வேண்டுமென்பது பற்றியோ அவன் எண்ணிப் பார்க்கவில்லை.

பழைய முனிசிபல் தலைவர் கட்டியிருக்கும் பெரிய பங்களாவின் திறப்பு விழா. அது மிக விமரிசையாக நடந்தேறியது. அவ்வளவு பெரிய கட்டடம் அந்தப் பட்டணத்திலேயே இல்லை. மோகனும் நண்பர்களும் வெளியே இருந்தபடியே பார்த்தார்கள்.

அன்று நடு நிசிவரை மோகனுக்குத் தூக்கம் வரவில்லை. அதற்குப் பின்னால் அவன் லேசாகக் கண் அயர்ந்தான். மயங்கினான். ஆனால் நடுவே ஒரு கனவு கண்டு திடுக்கிட்டு எழுந்தான். அந்த பங்களா பற்றி எரிகிறது. தீ நாக்குகள் வானத்தை முட்டிக்கொண்டு எழுகின்றன.

மோகனின் கனவுகள் உருவம் கொண்டன.

அவனது நண்பர்கள் அவனுக்கு புத்திமதி சொன்னார்கள்.

"இப்படி உனக்கு ஏன் தோன்றுகிறது மோகன்? இது நமது இயக்கத்திற்கே தீங்கு ஏற்படுத்தும். உன்னைவிட நாங்களும் எவ்வளவோ துன்புறுத்தப்பட்டிருக்கிறோம்."

மோகன் சொன்னான் :

"எனக்காக என் அப்பன் சேமித்த தொகை எவ்வளவு என்று தெரிந்தால் போதும்."

"தொகை!" - பிச்சாண்டியின் மகன் சிரித்தான். "தொகை! இப்படி எவ்வளவு பணம் தோட்டிகள் இழந்திருக்கிறார்கள். தோட்டிகளின் குழந்தைகள் எல்லாரும் சேர்ந்துகொண்டு அந்தக் கணக்கைக் கேட்கிறார்கள்."

மோகனுக்கு திருப்தியில்லை. நிம்மதி ஏற்படவில்லை.

அவனுக்கு வஞ்சம் தீர்த்ததாக வேண்டும். சுந்தரத்தின் மகன் அவன் முகத்தைப் பார்த்துக்கொண்டு கடுமையான குரலில் சொன்னான் :

"பணக்காரனாவதற்கும், யஜமானனாவதற்கும் உன் தகப்பனுக்கு இருந்த ஆசை உன் ரத்தத்திலும் கலந்திருக்கிறது. அது தனிப்பட்ட மனிதனிடம் வஞ்சம் தீர்த்துக்கொள்ளச் சொல்லுகிறது."

"இருக்கலாம்."

மோகன் ஒப்புக்கொண்டான். இல்லாவிட்டால் தகப்பனின் சம்பாத்தியத்தைக் குறித்து ஏன் தெரிந்துகொள்ள வேண்டும்? தனியாகச் சொத்து சேர்க்க இன்னும் ஆசையேன் எஞ்சியிருக்க வேண்டும்?

பிச்சாண்டியின் மகன் சொன்னான் :

"நாம் தனிநபரை மறந்துவிட்டு, அந்தத் தனிநபர்கள் பிரதிநிதித்துவப்படுத்தும் சமுதாய நிலைமையை எதிர்ப்போம். அந்த எதிர்ப்பில் நீ வஞ்சம் தீர்த்துக்கொள்ள எண்ணும் தனிநபரும் அழிந்து போவான்."

இதெல்லாம் மோகனின் புத்தியில் ஏறியதாகத் தோன்றவில்லை. அந்த அக்கினி ஜ்வாலையும், குருதிக்களமும், அவன் மனக்கண் முன்னால் ஒவ்வொரு கணமும் தெளிவாகத் தோன்றிக்கொண்டிருந்தன. இனிமேல் புறக்கண்கள் அதைக் காண வேண்டும். அப்பொழுதுதான் அவன் வெறி அடங்கும்.

பிச்சாண்டியின் மகன் தொடர்ந்தான் :

"இருந்தாலும், நாங்கள் என்றும், எதற்கும் உன் பின்னால் நிற்போம்."

பட்டணம் கறுத்து, வாழ்க்கை ஆதங்கத்தில் துடிதுடித்துக் கொண்டிருந்தது. மறு நிமிஷம் என்ன நிகழும் என்பது யாருக்கும் தெரியாது. எரிமலை புகைந்துகொண்டிருந்தது. அது விண்டு தெறித்ததா என்பதும் தெரியாது.

நம்மைச் சுற்றி நாம் பார்க்கும், அந்தத் தாழ்ந்து செல்லரித்த குடிசைகளில் பசியும் பட்டினியுமாக வாழும் ஏழைக் கூலியாட்களைக் கண்டு நாம் பயப்படுவதில்லை. அவன் நம்மை என்ன செய்துவிட முடியும்? மரக்கழியை ஊன்றியவாறே, நமது வாசலில் வந்து

நின்றுகொண்டு, பிச்சை கேட்கும் இரப்பாளிப் பிச்சைக்காரனைக் கண்டு நாம் பயப்பட்டதுண்டா? வயலில் மழையும் வெயிலும் பட்டுக்கொண்டு சதா வேலை செய்துகொண்டிருக்கும் புலையன், இன்றுவரை யாரையாவது எதிர்த்திருக்கிறானா? ஆனால், இன்று நாம் பயப்படுகிறோம். அந்தத் தனிநபர்களையல்ல. அந்தத் தனி நபர்களின் உணர்ச்சிக் கொந்தளிப்பின் ஏகோபித்த வேகத்தைப் பார்த்து நாம் அஞ்சுகிறோம். தினம் தினம், கணத்திற்குக் கணம், அது அசுர சக்தியாக வளர்ந்துகொண்டிருக்கிறது.

அந்தப் பயம் அதனால் மட்டும் ஏற்படுவதுதானா? நாம் செய்திருக்கும் ஆயிரக்கணக்கான தவறுகளைப் பற்றிய நினைவும் மனதின் அடித்தட்டில் அலட்டிக்கொண்டிருக்கிறதல்லவா?

வேலைநிறுத்தம்! சமாதானத்தைக் காப்பதற்குப் பட்டணத்தினுள் பட்டாளம் நுழைந்துகொண்டிருக்கிறது.

நகரம் பரிபூரணமாக ஸ்தம்பித்துப்போய்விட்டது. எதுவுமே அங்கு நடைபெறவில்லை. வீதிகளில் உயிரியக்கமே இல்லை. இவ்விதம் ஒருநாள் கழிந்தது.

அந்த நிசப்தத்தின் கர்ப்பத்தில் ஒரு புயல் சுருண்டுபோய் படுத்துக் கிடந்தது. வேலைக்குப் போகாமல் அங்ஙனம் ஒதுங்கி அடங்கியிருப்பது அந்த மாபெரும் சக்திக்குச் சாத்தியமான காரியமல்ல. உணர்ச்சிக்குப் போக்குக் காட்டிவிட வேண்டுமென்ற நிலை ஏற்பட்டது. மறுநாள் கம்பீரமான தொழிலாளி ஊர்வலம் நடைபெற்றது. பட்டணத்தில் மட்டுமல்ல; வெளியிடங்களிலும் ஊர்வலத்திற்கு ஏற்பாடாகி இருந்தது.

ஊர்வலம் சமாதானத்தைக் குலைக்கக்கூடியது. எனவே தடைபோட வேண்டிவருமென்று அதிகாரம் முன்னறிவிப்புக் கொடுத்தது. இது தொழிலாளர்களின் சக்தியை அதிகரித்தது. எதிர்ப்பு, அவர்களுடைய உணர்ச்சிக்கும் மனக் கொந்தளிப்புக்கும் உத்வேகத்தை ஊட்டிற்று.

எதிர்பார்த்தது போல் நடந்தது. தொடர்ந்து நடைபெற்ற சம்பவங்கள் ஊரையே கிடுகிடுக்க வைத்தன. ஆயிரமாயிரம் மக்களாகச் சேர்ந்து பல்வேறு இடங்களில் பொதுக்கூட்டம் நடத்தினார்கள். அவர்கள் எந்த இடத்திலும் அக்கிரமமான முறையில் நடந்துகொள்ளவில்லை. ஆனால், அரை நிர்வாணமாக, துன்பத்தைத் தவிர வேறொன்றும் அனுபவித்தறியாத பட்டினிப் பட்டாளத்தின் போராட்டம், ஊரை

மட்டுமல்ல, ராஜ்யத்தையே நடுங்கவைத்தது. தொழிலாளிகள் மட்டுமல்ல, பொறுக்கிகளும், பிச்சைக்காரர்களும், குஷ்டரோகிகளும் அதில் கலந்துகொண்டார்கள். உரிமைக்குரல் எழுப்புபவர்கள் இவ்வளவு பேரிருக்கிறார்களா? உண்டு உறங்கிச் சுகமாக வாழ்பவர்களுக்கு இந்த வர்க்கம் இவ்வளவு பெரிது என்று தெரிந்திராது.

இவர்கள் எல்லாம் நம் பக்கத்து வீட்டுக்காரர்கள்தாம்; நமக்கெல்லாம் நெருங்கிய பழக்கமுடையவர்கள்தாம்; நம் முன்னால் உழைத்து வதங்கிப் போனவர்கள்தாம்; நம்மை அண்டி வயிறு கழுவியவர்கள்தாம். ஒருவருக்கும் பயப்படுபவர்களல்ல நாம் . . . ஆனால், முதுகோடு ஒட்டிய வயிறும், அரைத் துண்டுமாக அலறிக்கொண்டு பாய்ந்துபோகும் அவனைப் பார்த்தால் பயந்துபோய் விடுவோம். அவன் கண்கள் சுழலுகின்றன. இந்தத் திராணியும் ஊக்கமும் எங்குதான் மறைந்திருந்ததோ?

அவன் உரிமையைத் தட்டிப்பறித்து வாங்கிவிடுவானாம்! ஆமாம். அவனுக்கு அதற்குத் திராணி இருக்கிறது.

அந்த ஊர்வலத்தைப் பட்டாளம் தடுத்தது. ஆவேசத்திற்கு எதிரே துப்பாக்கியை நீட்டினார்கள். அந்த அணியைத் துண்டுபடுத்தத் துப்பாக்கித் தோட்டாவால் முடியவில்லை.

துப்பாக்கிப் பிரயோகமும், ஊர்வலமும் மாறி மாறிச் சில தினங்கள் நடந்துகொண்டிருந்தன. பட்டணத்தில் எந்தப் பொருளுக்கும் எவ்வித நாசமும் ஏற்படவில்லை. ஆனால் பயம். நகரம் பட்டாளத்தின் உறைவிடமானதற்குப் பின்னாலும் அடங்காத பயம்.

அந்தப் பயம் அடங்குவதல்ல; தணியக்கூடியதல்ல. புறச்சக்திகள் எதுவுமே உண்டுபண்ணிவிட்ட பயம் அல்ல அது. அந்தச் சக்தியை அழித்து ஒழித்துவிட்டால் பயம் மறைந்துவிடாது. ஒவ்வொருவரும், அவனவனுடைய இதயத்தில் அவனவனே சிருஷ்டித்துக்கொண்ட பயம். அவனவன் செய்கைகளின் பலன். நூற்றாண்டுகளாக அது பிறந்து வளர்ந்துகொண்டிருக்கிறது. பீதி ஒழிந்து மனித சமூகம் வாழும் காலம் ஏற்படுமா?

எந்த விதமான பலாத்காரச் செயல்களிலும் ஈடுபடக் கூடாது என்று போராட்ட கோஷ்டி அறிவுறுத்தப்பட்டிருந்தது. இது வெறும் ஏழையின் கிளர்ச்சிதானே? இந்த எச்சரிக்கையைத் தொடர்ந்து துப்பாக்கிச் சூடு நடந்துகொண்டிருந்த நேரத்திலும் அவர்கள் அமைதி காத்துக்கொண்டிருந்தார்கள். எந்த இடத்திலும் கிளர்ச்சிக்காரர்களின்

பக்கத்திலிருந்து வன்முறை பிறக்கவில்லை.

தோட்டிகள் குடியிருப்பில் பிச்சாண்டியின் மகனும், சுந்தரத்தின் மகனும், ஒரு அறையில் விளக்கடியில் உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள். பிச்சாண்டியின் மகன் மெதுவாகச் சொன்னான் :

"இருந்தாலும் இவ்வளவு நேரமான பின்பும் அவனைக் காணவில்லையே அவன் எங்கு போயிருப்பான்?"

சுந்தரத்தின் மகன் சொன்னான் :

"ஏதாவது ஆபத்தில் சிக்கிவிட்டானோ?"

"அதுதான் நானும் பயப்படுகிறேன்."

அப்பொழுது வாசல் கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. பிச்சாண்டியின் மகன் துள்ளி எழுந்து கதவைத் திறந்தான். மோகன் உள்ளே நுழைந்தான்.

அவனுக்கு மூச்சுவாங்குகிறது; வியர்வை பெருகுகிறது. முகத்தில் என்ன கலவரம் இது? ஆனால் அது பயந்து ஓடியதனால் என்று தோன்றவில்லை. பிச்சாண்டியின் மகன் கேட்டான் :

"என்ன மோகன்?"

அவனால் பேச முடியவில்லை. திறந்து கிடந்த ஜன்னல் வழி அவன் வெளியே சுட்டிக் காட்டினான். தூரத்தில் தீ நாக்குகள் வானத்தில் நடனம் புரிவதை அவர்கள் கண்டார்கள். விஷயத்தை அவர்கள் தெரிந்துகொண்டார்கள். அது முனிசிபாலிட்டித் தலைவரின் புதிய பங்களாதான்.

நெஞ்சில் கை வைத்துக்கொண்டு பிச்சாண்டியின் மகன் சொன்னான்.

"பழி வாங்கிவிட்டான்!"

மோகன் தீ நாக்குகளைப் பார்த்து ரசித்துக்கொண்டிருந்தான். கடைசியில் அக்கினி ஜ்வாலை தணிந்து மந்தப்பட்டதும்தான் அவனால் பேச முடிந்தது. அவன் சமாதானமாகச் சொன்னான் :

"ஆமாம், நான் பழி வாங்கிவிட்டேன். வாஸ்தவம்தான். இந்தச் சங்கத்தை மீறின காரியம்தான். நமது இயக்கத்திற்கு இதனால் ஒரு எதிரடியும் கிடைத்தது. ஆனால் நானும் மனிதன்தான். எனது சொப்பனமும் நிறைவேற வேண்டாமா?"

அவனுடைய நண்பர்கள் அவனுக்கு ஏற்பட்ட ஆசுவாசத்தை உணர்ந்துகொண்டார்கள்.

மறுநாள் பட்டணத்தின் முக்கிய வீதி வழியே முன்னேறிய ஊர்வலத்திற்கு அவன்தான் தலைமை தாங்கினான். ஒருவர் பின் ஒருவராக இரண்டு வரிசையில் மக்கள் கூட்டம் அணிவகுத்தது. முன்னால் ஒரு பெரிய கொடியுடன் மோகன் நிற்கிறான்.

"புரட்சி ஓங்குக!"

"ஓங்குக!"

இந்தக் கோஷம் வானச் சுவரைத் தகர்த்தது.

நிறைந்த கண்களோடு, பிச்சாண்டியின் மகனும், சுந்தரத்தின் மகனும் ஒவ்வொரு சிவப்பு மாலையை மோகனுக்குச் சூட்டினார்கள்.

புத்துயிர் அளிக்கும் புரட்சிப் பாடல் ஒன்று பாடப்பட்டது. அதன் தாளத்திற்கு இசைந்தவாறு, அடிவைத்து, ஊர்வலம் முன்னேறிற்று.

அவனுடைய கொடி ஆகாயத்தில் பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது. நிராயுதபாணிகளான, ஆத்ம சக்தியில் நம்பிக்கை வைத்திருக்கும் ஜனக்கூட்டம் தோட்டியின் மகனின் தலைமையில் முன்னேறிற்று.

ஒரு தலைவருக்கே உரித்தான கம்பீரமும் திடச்சித்தமும் மோகனின் முகத்தில் தென்பட்டன.

பட்டணத்தின் மற்றொரு பக்கத்தை அடைந்தபொழுது, அந்த ஊர்வலம் நாலில் ஒரு பங்காகக் குறைந்தது . . . தோழர்கள், மூன்று இடங்களில் குண்டுகளை மார்பில் ஏந்திக்கொண்டு இறந்தார்கள். இருந்தாலும் அந்த ஊர்வலத்தைச் சின்னா பின்னப்படுத்தத் துப்பாக்கிக் குண்டுகளால் முடியவில்லை. விண்டுபோய்விடாமல், இடைவெளி தோன்றாமல் அந்த ஊர்வலம் முன்னேறிற்று.

பட்டணத்தின் வெளியே சற்றுத் தள்ளி ஒரு பெரிய மண் மேடு தெரிகிறது. அது தினம் தினம் தாழ்ந்துகொண்டே இருக்கிறது. வருடங்கள் உருண்டன. மண் மட்டும் தண்ணீரோடு கரைந்து போனபொழுது, சில எலும்புக் கூடுகள் அந்தக் மேட்டுப் பகுதியில் உயர்ந்தன. ஒரு எலும்புக் கூட்டின் கழுத்தில் சிவந்த நூல் இழைகள் தென்படுகின்றன.

அந்த வெட்டவெளியில் இன்றும் எலும்புக் கூடுகள் நடனமாடித் திரிகிறதாம்.

# சுந்தர ராமசாமியின் பிற நூல்கள்

## நாவல்கள்

ஒரு புளியமரத்தின் கதை (1966)

ஜே.ஜே: சில குறிப்புகள் (1981)

குழந்தைகள் பெண்கள் ஆண்கள் (1998)

## சிறுகதைகள்

காகங்கள் (2000)

மறியா தாமுவுக்கு எழுதிய கடிதம் (2004)

## கவிதை

சுந்தர ராமசாமி கவிதைகள் (2005)

## விமர்சனம்

ந. பிச்சமூர்த்தியின் கலை: மரபும் மனித நேயமும் (1991)

ஆளுமைகள் மதிப்பீடுகள் (2004)

## மொழிபெயர்ப்பு

செம்மீன் (1962) தகழி சிவசங்கரப் பிள்ளை

தோட்டியின் மகன் (2000) தகழி சிவசங்கரப் பிள்ளை

தொலைவிலிருக்கும் கவிதைகள் (2004)

## நினைவுக்குறிப்புகள்

ஜீவா (2003)

கிருஷ்ணன் நம்பி (2003)

க.நா.சு. (2003)

சி.சு. செல்லப்பா (2003)

பிரமிள் (2005)

## பிற

தமிழகத்தில் கல்வி : வே. வசந்தி தேவியுடன் ஓர் உரையாடல் (2000)

இவை என் உரைகள் (2003)

இதம் தந்த வரிகள் (2002) (கு. அழகிரிசாமி - சுந்தர ராமசாமி கடிதங்கள்)

வாழ்க சந்தேகங்கள் (2004)

வானகமே இளவெயிலே மரச்செறிவே (2004)

புதுமைப்பித்தன் கதைகள்: சு.ரா. குறிப்பேடு (2005)

வாழும் கணங்கள் (2005)